all had happened and said in the process had saved Sathyabama's life. Krishna who is known for softness and soferity, on hearing Akruvar, he gets angry on both Akruvar and Sathyabama and throws his curse on both of them. Whatever be the case, human being cannot attain the position of God. Hence a human being who had taken the guise of God and a human being who had accepted another human being as God is not less a sin. It was a result of this sin, that Akruvar lead a blind man's life and Sathyabama lead the life of a servant maid in migry. It was due to the curse of Krishna that both Akruvar and Sathyabama were in misery. Towards the end of the period of the curse Surdas was able to see Sathyabama in Akbar's Harem and once again he became blind.

Just then a ray of light emerges from the sky when Surdas and Sathyabama get immersed in the light which the spectators see.

## THIS DRAMA

The Doctrine of Integral religious brotherhood and peace. The bare fact that there is one and the only God would be established in the Hindi language beyond comparison. This has been created to introduce Mahakavi Surdas's poetry on the top basis of the history of Indian Culture with a religious backdrop.



# ஆக்கியோன் உரை



நம் பாரதப் புனித மண்-எண்ணற்ற மொழிகளையும் அவ்வற்ற கலாச்சார பழக்க வழக்கங்களையும், கணக்கற்ற ஆன்மீக வழி பாட்டுத் தத்துவ நெறிகளையும் கொண்டு திகழும் ஒரு குடியேற்ற நாடாக இருந்தாலும் - பாரதக் குடி மக்கள் அனைவரும் வேற்றுமைக்குள் ஒற்றுமை காணும் சமாதான, சகோதரத்துவ ஒருமைப்பாட்டுணர்வுடன் வாழ்ந்து வருகின்றார்கள்.

இந்நிலையில் இந்தி இலக்கியக் கவிதா மண்டலத்தின் ஈடு இணையற்ற மகாகவியாக, பாரத இலக்கிய உலகின் சூரியனாகத் திகழும் மகாகவி பக்த சூர்தாஸை - தமிழ் கூறு நல்லுலகத்தில், இந் நாடக நூலின் வழி அறிமுகப்படுத்துவதில் நான் பெருமிதம் கொள்கின்றேன்.

தமிழ்நாட்டைப் பொறுத்த மட்டிலும் சூர்தாஸ் என்ற மகா கவிஞரைப் பற்றிப் பெரும்பாலோர் யார் என்றே தெரிந்து கொள்ளாமல் இருந்து வருகின்றார்கள் என்பது மட்டும் உண்மை. சூர்தாஸின் வரலாறு, இந்நூலில் சொல்லப்படுவதால்-அதை மீண்டும் ஒரு முறை எடுத்து எழுதி நேரத்தை வீணாக்க விரும்ப வில்லை. ஆனாலும்-

சூர்தாஸின் பக்தி மார்க்கத்தைப் பற்றிய சில பொதுவான விஷயங்களை, இங்கு நான் விளக்கும் கடமைக்கு ஆட்பட்டுள்ளேன்.

வடபாரத, தென்பாரத பக்தி நெறிகளுள் வடபாரத பக்தி நெறி, வைராக்கியம் நிறைந்த முரட்டுத்தனம் கொண்ட பக்தியாகவும், தென்பாரத பக்தி நெறி, மென்மை வாய்ந்த பக்தி நெறியாகவும் அமைந்துள்ளன என்பது ஒரு பொதுவான மதிப்பீடு.

இந்தி மொழி இலக்கியத்தின் பக்திக் காலம் கி.பி. 1375 முதல் கி.பி. 1700 வரை மதிப்பிடப்படுகின்றது.

இந்துமத வேதாந்த தத்துவார்த்த சாரங்களின்படி - தர்ம ஸ்தாபிதத்திற்காகவும், உலக மனித குல நன்மைகளுக்காகவும், மனித இதயங்களில் சாந்தி சமாதான சகோதரத்துவம் நிலவுவதற்காகவும் - காத்தற் கடவுளாகிய ஸ்ரீமந் நாராயணன், தசாவதாரங்களை எடுத்து விண்ணிலிருந்து மண்ணிற்கு வந்தார் என சொல்லப் படுகின்றது. அவற்றுள் மச்சாவதாரமும், கூர்மாவதாரமும் வானத்தில் உள்ள தேவர்களுக்காக எடுக்கப்பட்டவை!

வராக அவதாரமும் முதல் எஞ்சிய அவதாரங்கள் அனைத்தும் - கர்ம பூமி என்றும், போக பூமி என்றும் சொல்லப்படும் இப்பூவுலக நன்மைகளுக்காகக் கொடுங்கோலாட்சி நடத்தி வந்த க்ஷத்திரிய வம்சத்தை திருத்தி நல்வழிப்படுத்த பரசுராம அவதாரமும் - தவயோக வேத ஞானச் செருக்கால் ஆணவமுற்றுக் கிடந்த ஆன்மீக அந்தணர்களின் சார்பில், பிரம்ம வம்சத்தில் தோன்றிய இராவணனை அழிப்பதன் மூலம் வேத ஞானிகளுக்கு நல்வழி காட்ட இராமாவதாரமும், வணிக வேளாளர்களின் சிறப்பை விளக்குவதற்காக பலராம-கிருஷ்ண அவதாரங்களும் இறைவனால் எடுக்கப்பட்டன!

தசாவதார சரிதங்களுள் ஸ்ரீராமாவதார சரிதம், உலக ஸகோதரத்துவக் காப்பியமாகிய இராமாயணம் என்ற இதிகாசமாகவும் - ஸ்ரீகிருஷ்ணாவதார சரிதம், உலக ஸமுதாய சமாதான வாழ்வியல் புரட்சிக் காப்பியமாகிய மகாபாரதம் என்ற இதிகாசமாகவும் மாறி-பாரதத்தின் பெருமையை உலகத்திற்கு அறிமுகப்படுத்தின. இவற்றுள் வடபாரத இலக்கியங்களில் ஸ்ரீகிருஷ்ண பக்திமார்க்கம், ஸ்ரீராம பக்தி மார்க்கத்தை, விட மிகுதியாகத் தழைத்தது. தற்பொழுதும் கூட வடபாரத்தில் வாழும் மக்கள், தங்கள் ஸகோதர உணர்வை வெளிப்படுத்தும் பொழுது - ஒருவருக்கொருவர் 'ராம்ராம்' என்று சொல்லிக் கொள்கின்றார்கள். அதே நேரத்தில் ஆத்ம சாந்தி, சமாதான ஒருமைப்பாட்டுணர்வைத் தேடி அவர்களின் மனம் அலை மோதும் பொழுது, ஸ்ரீகிருஷ்ண தியானத்தில் ஈடுபடுகின்றார்கள்!

பக்தி மார்க்கம், தழைத்தமைக்குரிய காரணங்களாக - பாரதம் பல மதத்தலைவர்களின் படையெழுச்சிகளுக்கு ஆளாகிப் பிறமத மார்க்க ஆதிக்கங்களாலும், கொடுமைகளாலும்-இந்துமதத்தவர்கள் பெரிதும் பாதிக்கப்பட்டமையே ஆகும்.

பக்தி என்பது - நிர்குணபக்தி, சர்குணபக்தி என இரு வகைப் படும். நிர்குணபக்தி என்பது, இறைவனை உருவமற்ற நிலையில் அருவமாக வழிபடுவது!

சர்குணபக்தி என்பது, இறைவனை ஒரு உருவமாக்கி உருவமாக் வழிபடுவது! இத்தகைய இருவகைப்பட்ட பக்தி மார்க்கங் களிலும்-இறைவனின் நாம மகிமை, தியானங்கள், பஜனைகள், கீர்த்தனைகள் ஆகியவை இடம் பெற்றிருந்தன.

நிர்குணபக்தி - ஞானபக்தி மார்க்கமாகவும், பிரேமை வழி பக்தி மார்க்கமாகவும் மலர்ந்தன. ஞான பக்தி மார்க்கத்தில் கபீர்

தாசரும், பிரேமை வழி பக்தி மார்க்கத்தில் மாலிக் முகமது ஜியாஸியும் சிறந்து விளங்கினர்.

சர்குணபக்தி - கிருஷ்ணபக்தியாகவும், இராமபக்தியாகவும் மலர்ந்தன.

கிருஷ்ண பக்தி மார்க்கத்தில்-சூர்தாசும், இராமபக்தி மார்க்கத்தில் துளஸிதாசும் சிறந்து விளங்கினர்.

நிர்குணபக்தியில் பின்வருவன இன்றியமையாதவையாகக் கருதப்பட்டன.

அவை:- பகவானின் நாமஸ்மரணையையும், நாம உபாசனையையும் முக்கியமாகக் கருதுதல்-மூட பழக்க வழக்கங் களையும், பொய்யான ஆடம்பரங்களையும் வெறுத்தல், குருவை பகவானுக்குச் சமமாக மதித்தல், ஜாதிகளை மனித ஆத்ம சிறைச் சாலைகளாகக் கருதுதல், மனிதநேய பொது தர்மத்தை மட்டும் செயல்படுத்துதல், அனைவருக்கும் புரியக்கூடிய முறைகளிலும், மொழிகளிலும் பக்தியைப் பரப்புதல், அருவ வழிபாடு - என்பவை.

நிர்குண பக்தியில் ஞானமார்க்க பக்திக்கு உதாரணபக்தராகக் கருதப்படும் கபீர்தாசர்-இராமாயணத்தில் குறிப்பிடப்படும் இராமனின் கதையையும், இராமனின் வடிவத்தையும் தூக்கி எறிந்து விட்டு, நாத மயமான அருவமாக இராமனை வழிபட்டார்.

இராமாயணக் காப்பியத்தை உருவாக்கிக் கொடுத்த வால்மீகி மகரிஷியும் - மராமரத்தின் அடியில் அமர்ந்து, எவ்விதக் கல்வி அறிவும் இல்லாமல், 'மரா, மரா' என்ற நாதத்தை உச்சரித்து உச்சரித்து - ஸ்ரீராமாவதாரத்தை அருவமாகிய நாத சஞ்சாரத்தில் அடக்கியே ராம நாம ஸ்மரணைகளையும், உபாசனைகளையும் செய்து - பின்பே அவர் மாபெரும் தீர்க்கதரிசியாகவும், மகரிஷியாகவும் மாறினார் என்பது நிர்குணபக்தியின் (உருவமுடைய இராமன்

அவதரிப்பதற்கு ஆதியிலேயே, நிர்குண அருவ பக்திக்குரிய இராமன் நாத மயமாக அவதரித்து விட்டான் என்ற) சிறப்பை விளக்கும் போதுமான சான்றாகும்.

பக்தி நெறிகளின் வரலாற்றில் இறைவனின் மீது செலுத்தும் பக்தி பாவனையும், தன்னிடமுள்ள ஆணவ, அகங்காரங்களை தியாகம் செய்வதும், ஆடம்பரத்தை வெறுப்பதும், ஜாதிபேதமற்ற சமரசமும் இன்றியமையாத இடத்தைப் பெற்றிருந்தன.

ஞானமார்க்க நிர்குண பக்தியாளர்களாக-கபீர்தாஸ், தாதுதயாள், சுந்தர்தாஸ், ரைதாஸ், குருநானக் ஆகியோர் குறிப்பிடத் தக்கவர்கள். இவர்களுள் கபீர்தாஸ், இந்துவும் அல்லாதவர்! முஸ்லீமும் அல்லாதவர்! ரைதாசர், சக்கிலிய இனத்தைச் சேர்ந்தவர்! குருநானக், சீக்கிய தர்மத்தின் மகானாக மாறி- சிறந்த சாகிப் என்ற வேதத்தையே குருவாக ஆக்கியவர். தாது தயாள், ஒரு இஸ்லாமியர்! சுந்தர்தாஸ் காவிய, சாஸ்திரப் பயிற்சி கொண்டவர்.

இறைவனை அருவமாக வழிபடும் நிர்குண பக்தியில் உள்ள ஞான மார்க்கமும், பிரேம மார்க்கமும், தங்களுக்குள் சில வேறுபாடுகளைக் கொண்டுள்ளன.

1. ஞான மார்க்கம் மாயை என்பதை முழுமையாக நம்புகின்றது! பிரேம மார்க்கமோ, மாயை என்ற ஒன்று இருக்க முடியாது என்று கருதுகின்றது.

2. ஞான மார்க்கம், கடவுளிடம் செலுத்தப்படும் பக்தியை, ஒரு கற்பனை என்று கூறுகின்றது! ஆனால் பிரேம மார்க்கமோ, பக்தி என்ற பெயரால் இறைவனை-காதலனாகவும், கணவனாகவும் அடையலாம் எனக் கூறுகின்றது.

3. ஞான மார்க்கம் முழுவதும், நம் பாரத பூமியில் உள்ள வேதாந்தங்களையே கொண்டவைகளாக உள்ளது! ஆனால் பிரேம

மார்க்கமோ, பாரசீக முகமதிய கொள்கையைத் தழுவியதாக உள்ளது.

4. ஞான மார்க்கமோ, இறைவனிடம் காட்டும் அன்பை ஒரு துணைக் கருவியாக மட்டுமே கூறுகின்றது! ஆனால் பிரேம மார்க்கமோ, இறைவனை அடைய ஞானம் தேவையில்லை என்றும்-பிரேமை வழியால் மட்டுமே அடைய முடியும் என்று கூறுகின்றது!

5. ஞான மார்க்கம், பிரம்மத்தைத் தரிசிப்பது என்பது இயற்கைக்குப் பொருந்தாத ஒன்று என்றும் -பிரம்மனை தரிசிப்பது என்று சொல்லிக் கொள்வது ஒரு போலித்தனமான மனித மோசடி என்றும் கூறுகின்றது! ஆனால் பிரேம மார்க்கமோ, புலப்படும் இயற்கை வழியில் பிரேம மார்க்கத்தின் வழியாக பிரம்மனை தரிசிக்க முடியும் என்று கூறுகின்றது! - பிரேம மார்க்க பக்திக்கு உதாரண பக்தர்களாக குதம்பன், மஞ்சன், மாலிக் முகமது ஜியாஸி, உஸ்மான் முதலியவர்கள் விளங்குகின்றார்கள்.

இறைவனை உருவ வழிபாடாக பக்தி செலுத்தும் சர்குண பக்தி நெறியில், கிருஷ்ண பக்தியில் தலைசிறந்தவராகிய மகாகவிபக்த சூர்தாஸ் தான்-ராதை என்ற ஈடு இணையற்ற சரணாகதித்துவ அர்ப்பண கோபியின் பிரேமையை - பக்தி உலகத்தில் அறிமுகப் படுத்தியவர் ஆவார். தென் பாரதத்திலிருந்து வட பாரதம் முழுவதும் பக்தி வெள்ளத்தைப் பெருக்கோடச் செய்த வல்லபாச்சாரியார் வழியாக ஞானம் பெற்றவரே, சூர்தாஸ் ஆவார். இரு கண்களும் தெரியாத குருட்டு சூர்தாஸ், ராதை என்ற கிருஷ்ண பக்த நாயகியை உலகத்தின் கண்களில் பிரேமையின் ஜோதி மயமாகத் தன் கவிதைகளால் அடையாளம் காட்டியுள்ளார். பார்வையில்லாத சூர்தாஸ் ஞானம் பெற்றிருந்தும், நிர்குண பக்தி மார்க்கத்தில் உள்ள பிரேமை பக்தியின் வழியில் ஈடுபடாமல் -சர்குண பக்தி மார்க்கத்தில் ஈடுபட்டு, சர்குண பக்திக்குள் பிரேம பக்தியை ஸ்தாபிதம் செய்து,

ராதை என்ற பக்திப் படைப்பை முழுமையாக்கிய பெருமை சூர்தாஸையே சேர்ந்தது.

நிர்குண பக்தியில் ஞான பக்தி மார்க்கத்தில் தலைசிறந்த கபீர் தாசும், சகுணபக்தியில் கிருஷ்ணபக்தி மார்க்கத்தில் தலை சிறந்த சூர்தாசும்-குருமகிமை பற்றிய கருத்தில் ஒரே நிலையில் திகழ்கின்றார்கள். உதாரணமாக-

கபீர், குரு மகிமையைப் பற்றி பாடிய தோஹா - (இரண்டு அடி கொண்ட பாடலில்)

"என்னுடைய குரு, கோவிந்தன் ஆகிய இருவரும், ஒரே நேரத்தில் என் முன் தரிசனம் தந்தால் - நான் குருவைத்தான் முதலில் வணங்குவேன். ஏனென்றால், கோவிந்தனை எனக்கு அறிமுகப் படுத்தியவரே என் குருநாதன் தானே!"-என்று குருவின் மகிமையைப்பற்றி கபீர் மிக அற்புதமாகக் குறிப்பிட்டுள்ளார். இவ்வளவிற்கும் இந்துவாகவோ, முஸ்லிமாகவோ வாழாத ஓர் அற்புதமான புரட்சிக்கனல் பறக்கும் ஒருவனைப் பட்ட ஞானபக்தி நெறியை, விசிஷ்டாத்வைத வைஷ்ணவத்துள்-அத்வைதத்தின் சாயலை ஞானமாகவும், பக்தியாகவும் விளக்கிக் காட்டிய ஞான நெறியைப் பரப்பிய கபீர்தாசர்-இருமதங்களிலும் உள்ள சாஸ்திர சம்பிரதாய ஆசார அனுஷ்டான மூட நம்பிக்கைகளையும், இயந்திர கருதியில் இயங்கிக் கொண்டிருக்கும் போலித்தனமான ஆசாரங்களையெல்லாம் மிகக் கடுமையாகச் சாடியவர் ஆவார்! அதைப் போலவே -

ஏறத்தாழ 25 ஆயிரம் கிருஷ்ண கான கவிதைகளைப் பக்தி மழையாகப் பொழிந்து தன்னிகரிருக்கும் பக்தகவி பக்த சூர்தாஸ் ஒரு கவிதையில் கூடத் தன் ஞானகுரு வல்லபாச்சாரியாரைப் பற்றிக் குறிப்பிடவில்லை. இதைப்பற்றி ஒரு பக்தர், சூர்தாஸிடம் கேட்ட

பொழுது - "நான் என் குருவையும், கிருஷ்ணனையும் வேறுபட்டவர் களாகக் கருதவில்லை என் குரு வல்லபாச்சாரியாரின் கையிலுள்ள சந்திரனைப் போன்ற நகத்தின் ஒளியின் முன்பு இவ்வுலகமே இருண்டு விடும்" என்று குருவின் மகிமைகளைப் பற்றிக் கூறுகின்றார். (குருவின் கையிலுள்ள-ஞானத்தை உபதேசிக்கும் விரல்களில் உள்ள நகத்தின் ஒளி, உலகத்தில் உள்ள எல்லா ஒளி களையும் விடப் பெரியது என்ற கருத்துடனும், குருவின் உப தேசத்தால் தான், கண்பார்வையற்ற தனக்கே ஞானக் கண் திறக்கப் பெற்று, ஞான ஒளியில் கிருஷ்ணகானத்தைப் பாடும் சக்தி கிடைத்தது என்ற கருத்துடனும்-குருமகிமையை விளக்கி இருக்கிறார்.)

'ஓம் நமோ நாராயணாய' என்ற எட்டெழுத்துத் திருமந்திரத் திற்குரிய ஸ்ரீமந் நாராயணனின் பக்தி நிலைகளை ஆதி முதல் ஒன்பது வகையாக, பக்தர்களால் பின்பற்றப்பட்டுள்ளன. அவை பின் வருமாறு:

1. பகவானின் கதைகளையும், பெருமைகளையும் கேட்டு, பக வானை அனுபவிக்கும் பக்தி நிலை! இதற்கு ச்ரவணம் என்பார்கள். உதாரண பக்தர்-பரிக்ஷித் மகாராஜா!

2. பகவானின் நாமங்களையும், பகவானைப் பற்றிய பாடல் களையும் பாடி லயித்து அனுபவிக்கும் பக்தி நிலை! இதற்குக் கீர்த் தனம் என்பார்கள். உதாரண பக்தர்-வியாச மகரிஷி!

3. ஏகாந்தமாக தனக்குத்தானே மௌன நிலையை எய்தி, தனக் குள்ளாக பகவானின் திருவுருவத்தை இடைவிடாமல் தியானிப்பதன் மூலம், இறைவனை அனுபவிக்கும் நிலை! இதற்கு, ஸ்மரணம் என்பார்கள். உதாரண பக்தன்-பிரகலாதன் ஆவான்!

4. பகவானின் பாத தாமரைகளை, எப்பொழுதும் தன் மனதில் நடுபடுத்திக் கொண்டிருக்கும் பக்தி நிலை! (அதாவது பகவானின்

பாத சேவை) இதற்கு பாதசேவனம், என்பார்கள். உதாரண பக்தை-மகாலக்ஷ்மி!

5. பகவானின் சகஸ்ர (ஆயிரம்) நாமங்களை சொல்லிக் கொண்டு, பகவானை மலர்களால் அர்ச்சனை செய்து கொண்டிருப்பது. இதற்கு, அர்ச்சனம் என்பார்கள். உதாரண பக்தர்-பிருகு மகரிஷி ஆவார்!

6. இறைவனால் கொடுக்கப்பட்ட மனித சரீரத்தில் உள்ள எட்டு அங்கங்களும் பூமியில்படுமாறு, சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து பக்தி செலுத்துவது! இதற்கு, வந்தனம் என்பார்கள். உதாரண பக்தர், கிருஷ்ணாவதார காலத்தில் வாழ்ந்த அக்ரூவர் ஆவார்! இதே அக்ருவரே, பகவான் ஸ்ரீகிருஷ்ணனால் சபிக்கப்பட்டு, கண்களை இழந்த மகாகவிபக்த சூர்தாஸாக-அக்பரின் காலத்தில் அவதரித்து அக்பரின் தர்பாரில் தான் இயற்றிய கிருஷ்ண கானத்தை முழங்கினார்!

7. இறைவனுக்கு, பக்தர்கள் அனைவரும் தாசானுதாச அடிமைப் பணிபூண்டு இறைவனின் தொண்டடிமைப் பணிகளை செய்து பக்தி செலுத்துவது! இதற்கு, தாஸ்யம் என்பார்கள். உதாரண பக்தர், ஆஞ்சநேயர் ஆவார்!

8. இறைவனுடன் நட்புரிமையுடன் பழகி, பக்தி செலுத்தி பகவானை ஆராதிப்பது. இதற்கு, சக்யம் என்பார்கள். உதாரண பக்தன், அர்ஜுனன் ஆவான்!

9. தன்னையும், தன் உடைமைகள் முதலிய அனைத்தையும் முழுவதும் துறந்த மனோபக்குவ நிலையுடன்-தன்னையே பகவானுக்கு அர்ப்பணித்து, பக்தி செலுத்துவது! இதற்கு, ஆத்ம நிவேதனம் என்பார்கள். உதாரண பக்தன்-மகாபலி சக்ரவர்த்தி ஆவார்!

அஷ்டாக்ஷரமாகிய எட்டெழுத்திற்குள், மனித ஜீவாத்மாவிற்கும் பகவானாகிய பரமாத்மாவிற்கும் உள்ள தொடர்பை - பக்தி மார்க்கத்தில் ஒன்பது வகையாக்கி, நவவித சம்பந்தம் என்று சொல்வார்கள். அவ்வொன்பதும் பின்வருமாறு:-

1. தந்தை, பரமாத்மா - மகன், ஜீவாத்மா என்ற உறவு நிலை! அதனால்தான், பல திவ்ய தேசங்களில் எம்பெருமான்- என்னப்பன், பொன்னப்பன், மணியப்பன், குறளப்பன், பாம்பணையப்பன் முதலிய திருநாமங்களைப் பெற்றார்.

2. பரமாத்மா, காப்பவன் - ஜீவாத்மா, காக்கப்படுகின்றவன் என்ற - இரட்சிப்பவன், இரட்சிக்கப்படுகின்றவன் உறவு நிலை !

இராவணனும் வாலியும் தன் உடன்பிறந்தவர்களைக் காப்பாற்ற வேண்டிய கடமையில் தவறிய பொழுதும், இரணியன் தன் மகன் பிரகலாதனைக் கொடுமைப்படுத்தி காப்பாற்றாத காலத்திலும், பாண்டவர்கள் தங்கள் மனைவி பாஞ்சாலியின் மானத்தைக் காப்பாற்ற முடியாத சூழ்நிலை ஏற்பட்ட பொழுதும் - பரமாத்மா, ஜீவாத்மாக்களைக் காப்பாற்றிய உறவே இரட்சிப்பவன், இரட்சிக்கப்படுகின்றவன் சம்பந்தமாகும்.

3. பரமாத்மா, அடிமை கொள்பவன் - ஜீவாத்மா அடிமை என்ற, ஆண்டான் அடிமை உறவு நிலை:- பரமாத்மாவாகிய பகவான்-மனித சரீரத்தில் வாழும் ஜீவாத்மாவை அடிமையாக ஆக்கிக் கொண்டு, ஜீவாத்மாவுடன் இருந்து கொண்டே அதன் அடிமை ஏவல்களை ஏற்றுக் கொண்டு ஆட்கொள்வது! இதைத் தான்-ஆழ்வாரும் "என்னை தனதாக்கி (அடிமையாக்கிக் கொண்டு) 'தன்னை என்னுள்வைத்தான்" (அடிமையை ஆட்கொள்வது) என்று இவ்வுறவைக் குறிப்பிட்டுள்ளார். இதை, சேஷ-சேஷி உறவு, என்பார்கள்.

4. பரமாத்மாவை நாயகனாகவும், ஜீவாத்மாவை நாயகியாகவும் உறவு கொள்ளும் நாயக நாயகி சம்பந்த உறவுநிலை! இத்தகைய நாயக நாயகி சரணாகதித்துவ அர்ப்பண பிரேமையின் நிலையிலேயே ஆண்டாள், ராதை,மீரா போன்ற பக்தைகளும், ஏனைய தாசானு தாசர்களும் தங்கள் ஜீவாத்மாக்களை நாயகியர் களாக்கிக் கொண்டு-பரமாத்மாவை ஆதிமூலப் பரம புருஷனாக உறவு கொண்டனர்.

நாயக நாயகி உறவில், அனைத்து ஆத்மாக்களுமே, ஆணாக இருந்தாலும் பெண்ணாக இருந்தாலும், எம்முறையில் இருந்தாலும் அனைத்திற்குமே பரமாத்மாவை பொறுத்தமட்டிலும் நாயகி உறவு தான்! ஜீவாத்மா எக்காரணத்தை முன்னிட்டும், பரமாத்மா ஆகிவிட முடியாது! இதே தத்துவார்த்தத்தில் தான், மகாகவி பக்த சூர்தாஸின் பிறவி ரகசியம்-எம்பெருமானால் உணர்த்தப்பட்டுள்ளது.

5. பரமாத்மாவை அறியப்படும் பொருள் என்றும், ஜீவாத்மாவை அறிபவன் என்றும் சொல்லப்படும் உறவு நிலை-ஞாதா-ஞேயன் உறவு சம்பந்தம் ஆகும். ஞாதா - ஜீவாத்மாவாகும்! பரமாத்மா, ஞேயமாகும்! அறியப்படும் பொருளாகிய பரமாத்ம பரம் பொருள், எக்காலத்திலும் ஒரே நிலையில் உள்ள ஒன்று. ஆனால் பரமாத்மாவை அறியும் ஜீவாத்மா வாழும் சரீரங்களோ - தோன்றி, மாறி, வளர்ந்து அழியக்கூடியவை.

6. ஜீவாத்மாவை சொத்து என்றும், பரமாத்மாவை சொத்துக் குரியவன் என்றும் சொல்லப்படும் ஸ்வ-ஸ்வாமி சம்பந்த உறவு நிலை! சரீரத்துள் வாழும் ஜீவாத்மா, பாசபந்தங்களுக்கு ஆட்பட்டு, தான் யாருடைய சொத்து என்பதைத் தெரிந்துகொள்ளாமல் துன்பங் களுக்கு ஆட்படுகிறது. சொத்துக்குரியவனாகிய பரமாத்மாவை உணரும் உறவுநிலை ஏற்படும்பொழுது - தன்னையும் பரமாத் மாவையும் உணர்ந்து கொள்கின்றது. இத்தகைய உறவே ஸ்வம்-

ஸ்வாமி உறவு நிலை ஆகும். இந்நிலையை ஆழ்வார் 'யானே என்னை அறியகிலாதே' 'யானே என்தனதே என்று இருந்தேன்' 'யானே நீ, என் உடைமையும் நீயே' என்று சொத்து, சொத்துக் குரியவன் உறவை அத்வைத நிலையில் கூறியுள்ளார்.

7. சரீர-சரீரீ பாவனை உறவு என்பது ஒன்று! ஜீவாத்மாவை தன்னுள் கொண்டிருப்பது சரீரம். ஜீவாத்மா சரீரத்தின் தலைவனாக விளங்கி, சரீரம் இயங்கத் துணை செய்கின்றது. ஆனால், சரீரத்தின் செயல்கள் முழுவதையும் கட்டுப்படுத்தும் ஆற்றல்-ஜீவாத்மாவிற்கு இல்லை. ஆனாலும் சரீரத்தின் இன்ப துன்பங்களை ஜீவாத்மா, அனுபவித்தே ஆக வேண்டும். சரீரத்தின் கர்ம வினைகளுக்கும், பாவபுண்ணியங்களுக்கும் சரீரத்தில் உள்ள ஐம்புலன்களும் ஆசா பாசங்களைப் பெருக்கி - சரீரத்தை ஆட்டிப் படைக்கின்றன. ஆதி மூலப் பரம்பொருளாகிய பரமாத்மா-சரீரத்திற்குள்ளும் புகுந்து ஜீவாத்மாவையும், சரீரத்தையும் நன்கு ஆராய்ந்து, நல்வழிப்படுத்தி, கர்ம வினைகளை அனுபவிக்க வைத்து, இறுதியில் ஜீவாத்மாவை பரமாத்மா ஆட்கொள்ளும் பந்தமே, சரீர - சரீரீ சம்பந்தம் ஆகும்.

சரீரத்திற்குள் ஜீவாத்மா குடி கொண்டிருப்பது என்பது, குற்றவாளி சிறைச்சாலைக்குள் அடைபட்டிருப்பதைப் போன்றது. பரமாத்மா, சரீரத்தில் உள்ள இதயத்தில் நிறைந்திருப்பது என்பது-சிறைச்சாலையின் தலைவன், சிறைக்கூடங்களை கவனிப்பதைப் போன்றது. கைதியும் காவலாளியும் ஒரே சிறைச்சாலையில் நடமாடினாலும், இருதரப்பினருக்கும் உள்ள வேறுபாட்டைப்போன்றதே-ஜீவாத்மாவும், பரமாத்மாவும் மனித சரீரத்தில் வாழும் நிலை! சிறையில் உள்ள கைதிகளுக்கு என்றாவது விடுதலை உண்டு! அதைப் போலவே சிறைச்சாலைகளும் இடம் மாற்றப்படலாம்! சிறைச் சாலை, கால வளர்ச்சியில் பல மாற்றங்களை அடையலாம். இவற்றைப் போன்றதே ஜீவாத்மாவும், மனித சரீரமும், ஆனால்

சிறைச்சாலையின் தலைவன் என்றென்றும் நிரந்தரமானவன். இதைப்போன்றதே பரமாத்மா!

8. தாங்குகின்றவன் - தாங்கப்படும் பொருள் என்ற உறவு நிலையைக் கொண்ட ஆதார - ஆதேய சம்பந்தம் என்பது ஒன்று! இத்தகைய சம்பந்த உறவுநிலையில், பரமாத்மா ஜீவாத்மாவை விட்டு நீங்காமல், எப்பொழுதும் ஜீவாத்மாவின் ஆதாரப் பொருளாக இருப்பதால் தாங்குகின்றவன் எனப்படும் ஆதார உறவு பரமாத்மாவிற்கு உரியது. தனக்கு ஆதாரமாக இருக்கும் பரமாத்மாவைப் பற்றி ஜீவாத்மா நிற்பதால், தாங்கப்படும் பொருள் உறவாகிய ஆதேய சம்பந்தம் ஜீவாத்மாவைச் சார்ந்தது!

எத்தகைய சூழ்நிலையிலும் ஆதாரத்தில் நிற்கும் ஆதேயம் ஆதாரமாகிவிடமுடியாது. அதைப்போலவே ஜீவாத்மாவும், எந்நிலையிலும் பரமாத்மா ஆகி விடமுடியாது. வைணவத்தின் அடிப்படை ஆதி தத்துவார்த்தமாகிய இம்மாபெரும் விசிஷ்டாத்வைதம் - எட்டெழுத்துள், ஒன்பது வகைப்பட்ட நவவித சம்பந்தங்கள் விளக்கப்படும் பொழுது, ஆதார ஆதேய சம்பந்தம் எட்டாவது இடத்தைப் பெற்றிருப்பது குறிப்பிடத்தக்கது.

9. போகத்தை அநுபவிப்பவன் - போக்கியப் பொருள் உறவாகிய போக்தா-போக்கிய சம்பந்தம் என்பது ஒன்று! போகமாகிய அநுபவிக்கக் கூடியவைகளை அநுபவிக்கின்றவன் போக்தா ஆவான். போக்தாவாகிய பரமாத்மா அநுபவிக்கும் பொருட்கள், போக்கியம் ஆகும்.

பக்திமார்க்கத்தில், ஜீவாத்மாக்களாகிய தாசானுதாசர்கள் எம்பெருமானாகிய பரமாத்மாவைத் தாயாகவும், தந்தையாகவும், தலைவனாகவும், நண்பனாகவும், குருவாகவும் அநுபவித்து அநுபவித்து - இறுதியில் அனைத்து ஜீவாத்மாக்களும் தங்களை

கோபிகளின் பிரேம மார்க்கத்தில் நாயகியர்களாக மாற்றிக் கொண்டு, பரமாத்மாவை ஒரே பரமபுருஷனாக வரித்துக் கொண்டு, அவன் பாத தாமரைகளில் தங்களை அர்ப்பணித்து சரணாகதித்துவ நிலையை அடைந்து பரமபதத்தில் நித்ய சூரிகளாக சங்கமமாகி விடுகின்றார்கள். இது ஜீவாத்மாக்கள் பரமாத்மாவை-அனுபவிக்கும் சுக அனுபவ சம்பந்த உறவு! ஆனால் போக்தா-போக்கிய சம்பந்த உறவில், பரமாத்மா, ஜீவாத்மாவை அனுபவிப் பதாகக் கூறப்பட்டுள்ளது. இது எப்படி?

ஜீவாத்மா, எவ்வித பிரதிபலனும் கருதாத நிர்மலமான நிஷ்காமிய சரணாகதித்துவ பக்தி சுக அனுபவத்தைப் பரமாத் மாவிடம் அனுபவித்துத் தனக்குள்ளாக ஆனந்தித்து மகிழும் ஏகாந்த பக்தி சுக அனுபவ அர்ப்பண நிலைக்கு ஆளாகி விட்டால் சத்தியமாக-விருப்பு வெறுப்பற்ற பரமாத்மா, விருப்பத்துடன் அந்த ஜீவாத்மாவை அனுபவித்து மகிழும். இது, எதைப் போல?

காதல் ஒருமித்த கணவனும் மனைவியும் சிற்றின்ப சுக அனுபவத்தை அடையும் பொழுது - அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு ஆகிய பெண்மை இயல்புகள், ஆணிடம் அமையாத காரணத்தால் கணவன் மட்டுமே மனைவியின் சுகத்தை அனுபவித்து வருவதாக உலகம் கருதுகின்றது. கணவனும், தான் மட்டுமே மனைவியிடம் தேக சுகத்தில் தேவசுகம் கண்டதாகக் கற்பனை செய்து கொள்கின்றான். ஆனால் உண்மையை ஆராய்ந்தால்- அச்சம், மடம், நாணம், பயிர்ப்புகளைக் கொண்டுள்ள மனைவியும் அதே சிற்றின்ப சுகத்தை தனக்குள்ளாக அனுபவித்து மகிழ்ந்தாலும் - வெளியில்காட்டிக் கொள்வதில்லை! வெளிப்படையாக விமர்சிப்பதில்லை! . அப்படி ஒருத்தி, தன் சிற்றின்ப சுகத்தை வெளியில் சொல்லி விமர்சித்தால்-அவள் பெண்மைக்குரிய மென்மையையே இழந்தவள் ஆகி விடுவாள். ஆக - கணவன்

மனைவி இருவருமே சிற்றின்ப சுக அனுபவங்களுக்கு ஆட்படு கின்றார்கள் என்பது மட்டும் உண்மை. இது ஜீவாத்மாக்களின் இடையே காணப்படும் சிற்றின்ப உறவு சம்பந்தம்-ஆனால்

பரமாத்ம, ஜீவாத்ம பக்திப் பேரின்ப சுக அனுபவத்தில், ஜீவாத்ம நாயகியர்களின் பரமாத்ம பக்தி சுக அனுபவங்களே பக்திக் கவிதை மலர்களாக பக்தி உலகில் மணம் பரப்புகின்றன. பரமாத்மாவின் சுக அனுபவம் - வெளிப்படையாக எவராலும், எந் நிலையிலும் வெளிப்படுத்த முடியவில்லை. நவவித சம்பந்தங்களுள் பரமாத்ம சுக அனுபவத்தை வெளிப்படுத்துவதே, போக்தா-போக்கிய சம்பந்தம்!

எம்பெருமான் ஸ்ரீமந் நாராயணன் ஜீவாத்மாவாகிய வில் விஜயனுக்கு பாரதப் போரில் தேரோட்டியாக தொண்டு செய்ததும்-பக்த ஏக்நாத் சுவாமிகளிடம் எம்பெருமான் கண்டியா கிருஷ்ணனாகத் தொண்டடிமை செய்ததும் - பக்தை சக்குபாய்க்காக அவள் கணவனிடம் எம்பெருமான், தானே சக்குபாயின் கோலத்தில் இருந்து பணிவிடைகள் செய்ததும் - திருப்பாணாழ்வாருக்காகவும் சோகாமேளருக்காகவும் அவர்களின் சுகதுக்கங்களை எம்பெருமான் தாங்கிக் கொண்டதும்-ஒருவகையில் போக்தா - போக்கிய சம்பந்தமே!

எம்பெருமான், தன் கிருஷ்ணாவதாரத்தில் கோபியர்கள் சூழ ராதையை பூஜை செய்தமை - பரமாத்மா ஜீவாத்மாவை அனுபவித் தமைக்குச் சான்று! இத்தகைய பிரேமையை நன்கு உணர்ந்த ஜய தேவசுவாமிகள் கூட "ராதையின் காலடிகள் கண்ணன் தலை மீது" என்று உருகிப் பாடினார்.

வேதவித்தாகிய குசேலர், வறுமையுற்று துவாரகைக்குச் சென்று கண்ணனை சந்தித்த பொழுது, கண்ணன் மெய் சிலிர்த்துக்

குசேலரை மார்புறத்தழுவி அவர் காலடிகளைத் தம் மடி மீது வைத்துக் கொண்டு, 'இம்மலரடிகள் இரண்டும் வழி நடந்து இளைத்தனவே என்று கால்களை பிடித்து அமுக்கி விட்ட பொழுதும் பாத பூஜை செய்து அளவுக்கு மீறி உபசாரங்கள் செய்த பொழுதும் குசேலர் எதையும் தடுக்காமல் வாய்மூடி மௌனியாக ஒன்றும் பேசாதிருந் தமைக்குரிய காரணம், பரமாத்மா, ஜீவாத்மாவை அனுபவிப்பதைத் தன் ஞானத்தால் அறிந்திருந்தமையே ஆகும். ஆழ்வாரும், போக்தா - போக்கிய அடிப்படையில்தான் 'என் உயிர் உண்டமாயன் என்றும்' எனவும் 'எனைமுற்றவும் தான் உண்டான் ' எனவும் திருவாய் மலர்ந்தருளினார்.

ஆதிமூலப் பரம்பொருளாகிய பரமாத்மா, தன்னைத்தானே அனுபவித்துக் கொள்ளும் சம்பந்தத்தையும் தனக்குள் தானே கொண்டுள்ளது. இதை விளக்கவே, உலகத்திற்கு ஒன்றான ஆதி மூலம்-ஞானசிவமாகவும், வைஷ்ணவி பராசக்தியாகவும் தன்னைத் தானே அனுபவித்துக் கொண்டது. அதுமட்டுமன்றி- காசியில் ஆதி சிவம் இராமனை பூஜிப்பதும், இராமேஸ்வரத்தில் இராமன் இராமநாதனாகிய ஆதி சிவத்தை பூஜிப்பதும் பரமாத்மா தன்னைத்தானே அனுபவிப்பதாகும். வேத ஞானிகளுக்கு இந்நிலையை உணர்த்த வேண்டும் என்றே திருக்கண்ணங்குடி திவ்ய தேசத்தில், வசிஷ்டரின் முன்னிலையில் வெண்ணெயால் ஆகிய கண்ணனை, இடையனாகிய கண்ணன் உண்டு தன்னைத்தானே உண்ணும் பரமாத்ம தத்துவார்த்த ரகசியத்தை - பரமாத்மா வெளிப்படுத்தி உள்ளது.

இந்துமத பக்தி மார்க்கத்தில் அத்வைதம் - விசிஷ்டாத்வைதம், த்வைதம் ஆகிய முப்பெரும் சமயநெறிகள் காணப்படுகின்றன. அவற்றுள் -

துவைதமாவது-ஜீவாத்மாவும், பரமாத்மாவும் வெவ்வேறு ஆனவை என்பதை விளக்குவது. இதன் ஆதிமூல ஆச்சாரியர் மாத்வர் ஆவார்.

அத்வைதமாவது-உயிரும் இறைவனும் வேறல்ல என்று சொல்லப்படும் ஏகான்ம வாத நெறியாகும். மாணவன், குருவிடம் ஞானம் பெற்று, ஆணவம், கன்மம், மாயை ஆகியவற்றை வென்று-யான், எனது என்ற செருக்குகளை அறுத்து, பிரம்ம நிலையை எய்தி - பிறகு பிரம்மம் பரபிரம்மமாக மாறும் நெறியே அத்வைதம்.

இதன் ஆதி மூல ஆச்சாரியர், ஆதிசங்கரர் ஆவார்.

விசிஷ்டாத்வைதமாவது - பிரதி பலன் கருதாத கர்மயோக நிலையில், அனைத்தையும் அனுபவித்துத் துறந்து, பிரதிபலன் கருதாத நிஷ்காமிய பக்தி நிலையில் பரமாத்மாவை வழிபட்டு சரணாகதித்துவ அர்ப்பண நிலையில் நித்ய சூரியாகி, பரமபதப் பெரு வாழ்வை அடைவது என்பதும் - எவ்வாறு ஆயினும் ஆத்மா வேறு, பரமாத்மா வேறு என்பதும் ஆகிய சமய நெறியாகும். இவற்றின் ஆதிமூல ஆச்சாரியர், இராமானுஜர் ஆவார்.

அத்வைதம் சைவநெறியாகவும், விசிஷ்டாத்வைதம் வைணவ நெறியாகவும் - பாரதத்தில் மறுமலர்ச்சி பெற்றன. அத்வைத சைவத்துள் விசிஷ்டாத்வைத சரணாகதித்துவமும் - விசிஷ்டாத் வைத வைணவத்துள் அத்வைத ஏகான்ம வாதமும் பலரால் பக்தி என்ற பெயரால் கலந்தும் - பக்தி நெறி பரவியது.

கபீர்தாஸ் போன்ற வைணவ பக்தர்கள், அத்வைதத்தில் அழுத்தமான நம்பிக்கை உடையவர்களாக விளங்கினார்கள். தாசானு தாச பக்தர்களுள் பொன்னாசையைத் துறந்த பக்தராகிய புரந்தரதாசர், பெண்ணாசையைத் துறந்த பக்தராகிய துளசிதாசர், மண்ணாசையைத் துறந்த ராஜாகோபிசந்த், மணமான நிலையிலும் கண்ணனிடம் பிரேமை கொண்ட பக்த மீரா, தாழ்ந்த குலத்தில்

பிறந்த ரோக்தாசர், கோராகும்பர், சர்ஜனகர், சோகாமேளர் முதலிய வர்கள் எல்லாம், பக்தி மார்க்கத்தைப் பெருக்கினார்கள்.

ராமபக்தியில் சிறந்தவர்களாக துளசிதாஸ், நாபாதாஸ், பிராண்சந்த், அக்ரதாஸ், பிரியதாஸ், கலாநிதி, மகாராஜ விஸ்வநாத், லால்தாஸ், மகாராஜ ரகுராஜ்சிங் ஆகியோர் விளங்கினார்கள்.

தென் பாரதத்திலிருந்து சென்ற வல்லாபாச்சாரியாரிடம் ஞானம் பெற்ற சூர்தாஸின் கிருஷ்ணபக்தியில் ராதையின் பிரேமை விசிஷ்டாத்வைதமாக வெளிப்பட்டது. இராமானுஜாசாரியாரைப் பற்றி விமர்சிக்கும் வட பாரத இலக்கிய கர்த்தாக்கள், இராமானுஜரை இராமபக்தராகவே கருதுகின்றார்கள்.

ராம, கிருஷ்ண பக்தி மார்க்கங்கள் பாரதம் முழுவதும் கலந்து காணப்பட்டாலும் - தமிழகத்தில் இராமபக்திக்கே முதலிடம் தரப் பட்டு - இராம பக்தியின் அளவு, கிருஷ்ணபக்தி பரவவில்லை.

பன்னிரு ஆழ்வார்களிலும் கூட, கிருஷ்ணபக்தியில் மேலோங்கிய, மலையாளத்தில் அவதரித்த குலசேகர ஆழ்வாரும் - கிருஷ்ணபக்திக்கு இன்றியமையாத சிறப்பிடத்தைத் தராமல் இராம பக்திக்கே முக்கியத்துவம் தந்து, பிரபந்த பாசுரங்களில் கண்ணனுக்குள் இராமனை உருவகப்படுத்திப் பிரபந்தங்களைப் பாடினார்.

ஆச்சாரிய அந்தஸ்தும், ஆழ்வார் அந்தஸ்தும் பெற்ற நம்மாழ்வார் பாடிய கிருஷ்ணபக்தி பிரபந்தங்களும், ஆண்டாள் நாச்சியார் பாடிய திருப்பாவை, நாச்சியார் திருமொழி ஆகிய வற்றிலுள்ள கிருஷ்ண பக்தியும்-தமிழகத்தில் இராமபக்தி அடைந்த மேம்பாட்டை அடையவில்லை. பெரியாழ்வார் பாடிய "மாணிக்கம் கட்டி" போன்ற பிரபந்தங்களைக் கொண்டு கிருஷ்ணபக்தி பரவுவதற்குப் பதிலாக - தமிழ் இலக்கியங்கள்

பிள்ளைத்தமிழ் போன்ற இலக்கியங்களைப் படைத்து விட்டன. கன்னடம், தெலுங்கு ஆகிய தாய்மொழிகளைக் கொண்ட விப்ரநாராயணா (தொண்டரடிப் பொடியாழ்வார்), தியாக பிரம்மம் போன்றவர்கள் கூட தமிழகத்தில் பரவிக் கிடந்த ராம பக்தியையே மையமாகக் கொண்டு பாசுரங்களையும், கீர்த்தனங்களையும் வகுத்தார்கள்.

திராவிட வேதமாகிய நாலாயிர திவ்ய பிரபந்த பாசுரங்களை நன்கு ஆராய்ந்தால் - கிருஷ்ணாவதாரத்தைப் பற்றிய பாசுரங்களே மிகுதியாக உள்ளன. ஆயினும் கிருஷ்ணபக்தி, ராமபக்தியின் அளவிற்கு எடுபடவில்லை.

தமிழகத்தில் மங்களாசாசனம் பெற்றுள்ள திவ்யதேசங்களுள்-

தமிழக கலாச்சாரமாகிய ஒருவன் ஒருத்தி மனிதஒழுக்கத்தை மையமாகக் கொண்டு, திருப்புல்லாணி (சக்ரவர்த்தித் திருமகன்) திருப்புள்ளம் பூதங்குடி (வல்வில் இராமன்), திருப்புட்குழி (விஜயராகவப் பெருமாள்), திருநீர்மலை (சக்ரவர்த்தி திருமகன்) ஆகிய நான்கு திவ்ய தேசங்கள் மட்டுமே இராமபக்தியின் அடிப்படையில் ஆழ்வார்களால் மங்களாசாசனம் செய்யப்பட்டன. ஆனால் -

பரமபுருஷ நாயக நாயகி சரணாகதித்துவ தத்துவார்த்த சாரத்தை மையமாகக் கொண்ட கிருஷ்ண பக்தி மார்க்கத்தில் இதே திராவிட வேதம் - தமிழகத்தில் உள்ள திவ்ய தேசங்களுள் திருக்கண்ணமங்கை (பக்தவத்சல பெருமாள்), திருக்கண்ணபுரம் (சௌரிராஜன்), திருக்கண்ணங்குடி (சியாமள மேனிப் பெருமாள்-தாமோதரன்), திருவழுந்தூர் (ஆமருவியப்பன்), திருக்காவளம்பாடி (கோபால கிருஷ்ணன்) அரிமேயவிண்ணகரம் (குடமாடுகூத்தன்), திருப்பார்த்தன்பள்ளி (பார்த்தசாரதி), திருக்கோவிலூர் (ஆயனார் கோவலன்), திருப்பாடகம் (பாண்டவதூதர்), திருத்தொலைவில்லி

மங்கலம் (செந்தாமரைக் கண்ணன்), திருவல்லிக்கேணி (வேங்கட கிருஷ்ணன்-பார்த்தசாரதி), திருக்குளந்தை (மாயக்கூத்தன்), திருவில்லிப்புத்தூர் (ரங்கமன்னார்) ஆகிய 13 திவ்ய தேசங்கள்-ஆழ்வார்களால் மங்களாசாசனம் செய்யப்பட்டுள்ளன. ஆயினும் ஸ்ரீகிருஷ்ணாவதாரபக்தியின் தத்துவார்த்தத்தைத் தமிழக மக்கள் உணர்ந்து கொள்ளாமல்-கிருஷ்ணாவதாரத்திற்கு சிற்றின்ப மோக வடிவத்தைத் தந்துவிட்ட காரணத்தால் -இராமபக்தியின் அளவிற்கு, கிருஷ்ணபக்தி எடுபடவில்லை.

அதைப்போலவே - கம்பராமாயணத்திற்கு ஏற்பட்டிருந்த பெருமை, வில்லிபாரதத்திற்குத் தரப்படவில்லை என்பதை ஒத்துக் கொண்டே ஆக வேண்டும். இவை மட்டும் அல்லாமல்-கிருஷ்ண பக்தியாளர்களுள் பெரும்பாலோர், தமிழ் அல்லாத பிறமொழி களைக் கொண்டவர்கள் என்ற மனப்பான்மையும், தமிழ் மக்களின் நெஞ்சில் வேரூன்றிவிட்டது.

வைணவத்திற்கு சிறந்த விதிமுறைகளை வகுத்துத்தந்த உடையவர் இராமானுஜரைக் கூட ஆதிசேஷனின் அம்சம் என்று ஒப்பிட்டு விமர்சிக்கும் பொழுது - இராமபிரானின் தம்பியாகிய இளையாழ்வாராகவே- தமிழகமக்கள் தங்கள் இதயத்தில் ஏற்றுக் கொண்டார்களே அல்லாமல் - கண்ணனின் அண்ணனாகிய பல ராமனின் அம்சமாக , ஏற்றுக் கொள்ளவில்லை. அதைப்போலவே-

குடும்ப விருத்திக்கு இராமாயணத்தை மட்டுமே படிக்க வேண்டும் என்றும் - மகாபாரதத்தைப் படித்தால் கலகம் ஏற்படும் என்றும் மூடநம்பிக்கையை ஏற்படுத்தி வைத்து விட்டு - மனித வாழ்வியலில் அடிப்படை ஒழுக்க ரீதியான பழமொழியாக "இராமனைப் போல நட! கிருஷ்ணனின் பேச்சைக் கேள்".! என்றும் சொல்லி விட்டார்கள்.

தற்பொழுது கூட பாகவதர்களின் காலட்சேபங்களில் -சீதா கல்யாணம், ராமபட்டாபிஷேகம் ஆகியவற்றிற்குத் தரக் கூடிய முக்கியத்துவங்கள் - கீதோபதேசங்களுக்குக்கூடத் தரப்படவில்லை என்பதும் கவனிக்கத்தக்கது.

'அன்பின் ஐந்திணை' என்ற அடிப்படையில் தமிழக மக்கள், ஒருவன் ஒருத்தி ஒழுக்க மனித அவதாரமாகிய ஸ்ரீராமபக்திக்குத் தந்த முக்கியத்துவத்தின் அளவிற்கு - ஆத்ம நாயகியர்கள் கோபியர்களாக பரமாத்ம பரம புருஷனிடம் சரணாகதித்துவ அர்ப்பண நிலைக்கு ஆளாகத் துணை செய்யும் ஸ்ரீ கிருஷ்ணபக்தியின் மகிமையை - ஆழங்கால் பட்டுப் புரிந்து கொள்ளாமல் போய் விட்டார்கள். அதனால்தான், பிரேமையின் முழு அம்சமாகிய ராதையை - சரியான முறையில் தெரிந்து கொள்ளாமல், ராதையின் அம்சத்திற்கு நப்பின்னை என்ற பெயரைத் தந்து - நப்பின்னையின் பிரேமையை முழுமைப் படுத்தாமல், தமிழர்கள் ஏதோ பூசி மெழுகி விட்டார்கள்.

அதைப்போலவே திருவரங்கன் மீது பிரேம சுக அனுபவம் பெற்று, டில்லியிலிருந்து வந்து எம்பெருமானுடன் ஐக்கியமாகிய துலுக்க நாச்சியாரைப் பற்றியோ - பிரேமையின் பிரதிபலிப்பான பக்த மீராவைப் பற்றியோ, திவ்ய பிரபந்தங்களும் கூடப்பாட மறந்து விட்டன. வட மொழி இலக்கியத்தின் தாக்கமாகப் பெரிய திருமடல், சிறிய திருமடல் ஆகியவற்றை தமிழ் இலக்கிய பக்திபாவனையில் புகுத்திய திருமங்கையாழ்வார் போன்றவர்களுக்கு - துலுக்க நாச்சியாரைப் பற்றியோ, மீராவைப் பற்றியோ தெரியாமல் இருந்திருக்க நியாயமில்லை.

பெண் ஆழ்வார் ஆகிய ஆண்டாளின் கிருஷ்ணபக்தியும், பிரேமையும் கூட, ஏதோ திருப்பாவை வடிவத்தில், மார்கழி மாதத்தில் ஒப்புக்காக Season பக்தியாகப் பாடப்படுகின்றனவே

யன்றி, நாச்சியார் திருமொழியில் உள்ள மிக அதி அற்புதமான பிரேமை பக்திகூட- தமிழகத்தில் இன்றுவரை சரியான முறையில் விமர்சிக்கப்படவில்லை என்பது என் கருத்து. இராமசரிதத்தைப் பார்க்கும் பொழுது, கண்ணெதிரில் நடந்த சரிதமாக எழுதப்படாமல், வால்மீகியின் ஞானத்தால் தீர்க்கதரிசனமாக இராமாவதாரத்திற்கு முன்பே எழுதப்பட்டு விட்ட ஒன்று ஆகும். அதுமட்டுமன்றி- இராமசரிதம் உலகெங்கிலும் நாட்டுக்கு நாடு, மொழிக்கு மொழி என்று-பலவகைப்பட்ட வித்யாசங்களோடு எழுதப்பட்டு, சொல்லப்பட்டு வருகின்றன. கிருஷ்ணசரிதமோ அப்படியல்ல! நேருக்கு நேராக நடைபெற்ற நிகழ்ச்சிகளை வியாச மகரிஷி தொகுத்து எழுதிய ஒன்று! என்பது கவனிக்கத்தக்கது. அதற்காக ஸ்ரீராம பக்தியையோ, ஸ்ரீராம அவதாரத்தையோ, அடியேன் குறைத்து மதிப்பீடு செய்வதாக எவரும் கருதவேண்டாம். பாவ விமோசனத்திற்கு ஸ்ரீராம மந்திரமே மிகச்சிறந்த வழி என்பதை- அடியேனின் அனுபவத்திலேயே, எவ்வளவோ முறைகள் அனுபவித்து உணர்ந்தவன் நான்!

எம்பெருமானின் தசாவதாரங்களுள், ஒவ்வொரு அவதாரத்திற்கும் ஒவ்வொரு லோகக்ஷேம தத்துவார்த்தம் உண்டு. எம்பெருமான் இறுதியில் ஒன்பதாவது அவதாரமாக எடுத்து முடித்த அவதாரமே, ஸ்ரீகிருஷ்ணாவதாரம்! ஸ்ரீகிருஷ்ணாவதார மகிமையை உணர்த்துவதற்காகவும், கிருஷ்ணபக்தியில் கோபி ராதையின் பிரேமையை புலப்படுத்திய மகாகவி பக்த சூர்தாஸின் வரலாற்றை தமிழகத்தில் அறிமுகப்படுத்தும் கடமைக்கு நான் ஆட்பட்டி ருப்பதாலும், மேற்கண்ட கருத்துக்களை - படைப்பாளன் என்ற முறையில் விமர்சிக்க வேண்டியதாகி விட்டது!.

சூர்தாஸின் வரலாற்றை முழுமையான வடிவத்தில் கொண்டு வருவதற்கு மிகவும்அரும்பாடுபட்டு - இலக்கியக் கண்ணோட்

டத்திலும், பக்தி மார்க்கக் கண்ணோட்டத்திலும், வரலாற்றுக் கண்ணோட்டத்திலும் பற்பல செய்திகளை - நான் சேகரிக்க வேண்டியதாகி விட்டது.

சூர்தாசுடன் பிறந்த சகோதரர்கள் அறுவர் என்று ஸ்ரீநாத்சிங் போன்றவர்கள் கருதுகின்றார்கள். ஆனால் சூர்தாசுடன் பிறந்தவர்கள் ஐவர் என்று சரித்திர ஆசிரியர்கள் கருதுகின்றார்கள். ஒரு லட்சம் பாடல்களை சூர்தாஸ் எழுதியதாகவும், தற்பொழுது 7000 பாடல்களே கிடைக்கப் பெற்றுள்ளன என்றும் ஸ்ரீநாத்சிங் போன்றவர்கள் கருதுகின்றார்கள்.

சூர்தாஸ், பிறவியிலேயே குருடராக இருந்தார் என்றும், சூர்தாஸ் தன் காதலியை இருட்டில் தேடிச் சென்றபொழுது, கிணற்றில் விழுந்து கண்களை இழந்து விட்டார் என்ற கருத்தும் நிலவி வருகின்றன. சூர்தாஸ் நூறு வயதிற்கு மேல் வாழ்ந்தவர் என்பதில் வரலாற்று ஆசிரியர்கள் அனைவரும் உடன்படுகின்றார்கள்.

சூர்தாஸ் பின்வரும் 24 வகைப்பட்ட கவிதைகளைப் பாடி இருப்பதாகத் தெரிகிறது. அவை பின்வருமாறு:-

1. சூர்சாகர் 2. சூர்சராவலி 3. சாகித்ய லஹரி 4. பகவத் பாஷா 5. தசம ஸ்கந்த பாஷா 6. சூர்சாகர்சார் 7. சூர்ராமாயண் 8. பால்லீலா 9. ராதாரஸ் கேலி கட்டக் 10. கோவர்த்தன லீலா 11. தான்லீலா 12. பாவர் கீத் 13. நாகலீலா 14. பியாலோ 15. பிராண் பியாரி 16. திருஷ்டி குட்கே பட் 17. சூர்சாதி 18. சூர்பாசீசி 19. சேவா பால் 20. சூர்தாஸ் கே விணைய் கே பட் 21. ஹரி வம்ஷ டீகா 22. ஏகாதசி மகாத்மியா 23. நளதமயந்தி 24. ராமஜனம்.

ஆயினும் இலக்கியத் திறன் ஆய்வாளர்கள் - பின் கண்ட மூன்று பகுதிகளையே, சூர்தாசின் ஒப்பற்ற கவிதை

இலக்கியங்களாக கருதின்றார்கள்! அவை:- 1. சூர் சராவளி 2. சாகித்ய லஹரி 3. சூர்சாகர்

சூர்தாஸ் எழுதியுள்ள 'பிரம கீத்' என்ற பகுதி பக்தி மார்க்கத்திற்கு மிகச் சிறந்த எடுத்துக் காட்டாக விளங்குகின்றது. "பிரம்" என்ற இந்தி சொல்லுக்கு வண்டு என்பது பொருளாகும். "பிரமகீத்" என்ற பதத்திற்கு, வண்டு விடுதூது என்பது பொருள் ஆகும்.

நிர்மலமான நிஷ்காமிய பக்தனுக்கு, பக்தியில்கூட ஆணவம் ஏற்பட்டு விடக் கூடாது என்ற அதி அற்புதமான தத்துவார்த்தத்தை - பிரமகீத் என்ற படைப்பின் வழியாக, பக்த சூர்தாஸ் ஒரு கதை வடிவில் மிக அழகாகவும், தெளிவாகவும் எளிமையாகவும், தன் மனக் கண்ணில் கண்ட கற்பனைக் காட்சியாக-பக்திக் கவிதைகளால் ஓவியமாக சித்தரிக்கின்றார். அவையாவன:-

ஸ்ரீகிருஷ்ணாவதாரத்தில், ஆயர்பாடி கோகுலத்தில் ஒளிந்து வளர்ந்த கண்ணன், பிறகு கம்ச வதத்திற்குப் பின், மதுராபுரியின் மன்னனாகிப் பல ஆண்டுகள் ஆகிவிட்டன. கண்ணனின் குழந்தைப் பருவத்தில் அவனைக் கொஞ்சிக் குலவி அணைத்து பிரேம மழையைப் பொழிந்து கொண்டிருந்த கோபியர்களைக் கூட - மதுராபுரி மன்னன் பகவான் கண்ணன், தேடி வந்து ஒருமுறை கூட அவர்களைப் பார்க்கவில்லை.

இத்தகைய சூழ்நிலையில், பகவான் கிருஷ்ணனிடம் அளவு கடந்த பக்தி உடைய உத்தவர் என்ற அமைச்சர் விளங்கினார். இவர் கண்ணனின் தந்தையாகிய வசுதேவனின் தம்பி தேவபாகனின் மகன் ஆவார். உத்தவர், கண்ணனைப் போல் ஒரு உருவம் செய்து பூஜை செய்து வந்தவர். இவர் மகாபாரத வரலாற்றில், தர்ம

தேவனாகிய விதுரனுக்கே ஞானம் உபதேசித்த, மகாதத்துவ ஞானி. இவருக்கு கிருஷ்ண பக்தியில்-தான் தான் மேலானவர் என்ற ஆணவமும், பக்திச் செருக்கும் நிறைந்திருந்தன.

எம்பெருமான் பகவான் கிருஷ்ணன், உத்தவரின் ஆணவத்தை எப்படி ஒழிப்பது என்று சிந்தித்து - பிறகு உத்தவரை அழைத்து, கோகுலத்தில் தன் இளமைக் காலத்தில் தன்னோடு பழகிப் பாசத்தோடு விளங்கிய கோபியர்களிடம் சென்று, தான் கோபியர்களை விசாரித்ததாகச் சொல்லிவிட்டு வருமாறு, உத்தவருக்கு ஆணையிட்டார்.

உத்தவர்-ஞான பக்திச் செருக்கில் இருந்ததால், கல்வியறிவற்ற கோபியர்களிடம் கண்ணனுக்காக தூது செல்வதை அவர் விரும்ப வில்லை. ஏதோ சிறு பிராயத்தில் கண்ணனோடு பழகிய கோபியர்கள் - இவ்வளவு காலத்திற்குப் பின்பு, பகவான் கிருஷ்ணனை மறந்தே போயிருப்பார்கள் என்று தனக்குள்ளாகக் கற்பனை செய்து கொண்டு - ஆனாலும், கண்ணனின் வார்த்தையைத் தட்ட முடியாமல், கோபியர்களைத் தேடி கோகுலத்திற்குச் சென்றார்.

ஆனால் - கோகுலத்தில் உத்தவர், கண்ணனின் மீது பிரேமை கொண்ட கோபியர்கள் எப்பொழுதும் கண்ணனின் நினைவுடன் வாடி வதங்கி, நைந்து நலிவுற்று, செயலிழந்து கிடந்த சோகமயமான காட்சியைக் கண்டதும், உத்தவர் திடுக்கிட்டு பேரதிர்ச்சி அடைந்தார்.

கண்ணனிடமிருந்து உத்தவர் தங்களை நோக்கி தூது வந்துள்ளார் என்று தெரிந்ததும் - கோபியர்கள் கண்ணனே தங்களைத் தேடி வந்ததாக பாவனை செய்து கொண்டு, உத்தவரின் கண்களைப் பார்த்து "ஆ! தங்கள் கண்கள், ஒவ்வொரு நாளும்

பகவான் கண்ணனை தரிசித்துவரும் மகாபாக்கியம் பெற்றவைகளா? தங்கள் கண்களை எங்கள் கோகுலக் கண்ணனாகவே எண்ணி, நாங்கள் நமஸ்கரிக்கின்றோம்! என்று உத்தவரை கோபியர்கள் அனைவரும் நமஸ்கரித்தார்கள்.

உத்தவரும், பகவான் கண்ணனைப் போன்ற கரிய நிறம் உடையவர்-கோபியர்கள், உத்தவரை ஒரு கரிய வண்டாக பாவித்துக் கொண்டு-தங்கள் பிரேமைகளையும், விரக தாபங்களையும் பக்திச் சுவைபட எடுத்து விளக்கி, உத்தவரை, கோபியர்கள் பிரேமையின் தூதாக, ஒரு வண்டை அனுப்புவதைப் போலப் பாடப் பெற்ற பகுதிதான் பிரமகீத்! கோபியர்களின் பிரமகீத்தைக் கேட்ட உத்தவரின் ஆணவமும், பக்திச் செருக்கும் அழிந்தன!

சூர்தாஸ்-கண்ணனின் மீது கோபியர்கள் கொண்டிருந்த விரகதாபத்தை, பிரமகீத்தில் பின்வரும் கருத்துக்கள் அடங்க, மிக உருக்கமாகப் பாடியுள்ளார். அவற்றில் சில, பின்வருமாறு:-

"உத்தவரே! கண்ணனைக் கண்ட உங்கள் கண்களின் வழி, எங்கள் கண்ணனையே தரிசித்து விட்டோம். எப்படி என்றால் -

காற்றின் வழி மலர் மணம் வருவதைப் போல! வண்டு மலரைத் தீண்டும் பொழுது மலருக்கு ஏற்படும் மகிழ்ச்சியைப் போல! எங்கள் விரகதாபமும் பறந்து விட்டன!

உலகில் பிரேமை கொண்டவர்கள் பெரும்பாலும், சுகம் பெறுவதில்லை. கதிரவனின் கிரணங்கள் எந்த எந்த பக்கங்களில் எல்லாம் வீசுகின்றனவோ, அங்கெங்கெல்லாம் திரும்பும் தாமரையைப் போல் நாங்கள் இருக்கின்றோம். தாமரை இரவில், எப்படி பிரிவுத் துயரால் வருந்துகின்றதோ, அதே நிலையில் நாங்கள் இருக்கின்றோம்!

வேடன், மானைத்துரத்தும் பொழுது - வீணையின் இன்னிசை எழுந்தால், மான் மகிழ்ச்சி அடையும். ஏனென்றால், வீணையின் இன்னிசையில், வேடன் தன்னை மறந்து விடுவான் அல்லவா? அதைப்போலவே-கண்ணனும் எங்களைக் குழலோசையால் மயங்க வைத்துவிட்டு எதுவும் சொல்லாமல் போய்விட்டான்! இதே நிலையில் தற்போது நாங்களும் உள்ளோம்! நாங்கள் கண்ணன் மீது மோகத்தோடு இருக்க, அவனுக்கோ எங்கள் மீது மோகம் இல்லை! நாங்கள் தாம் இரவுபகலாக, கண்ணனின் பிரிவுத்துயரால் கண்ணீர் பெருக்கி அழுது கொண்டிருக்கிறோம்!

கண்ணனைக் காண்பதற்காக அவர் வரும் மதுவனத்தின் பாதையைப் பார்த்துப் பார்த்து எங்கள் கண்கள் களைத்து விட்டன! கண்ணனைக் காணாமல் - நாங்கள் கோழைகளைப் போல் தற் கொலைக்கும் தயாராகிவிட்டோம். அவன் பிரிவுத்துயரைத் தாங்காமல் உயிரை விட்டுவிடுவோம் என்று சென்றால் - கடைசி நிமிடத்திலாவது அவன் வந்து விட மாட்டானா? அவனைப் பார்த்து விட்டுச் சாவோம் என்று-போவதும் வருவதுமாக காலம் கழிக்கின்றோம்.

கண்ணனைக் காணாத நந்தவனம், எங்களுக்கு வெப்பத்தை விளைவிக்கும் பகைவனாக உள்ளது. கண்ணனைக் காண்பதை நினைக்கும் பொழுது, செடிகளில் படரும் கொடிகளைப் போல் துளிர்க்கின்றோம். அதேசமயம், அவன் பிரிந்து விட்டதை நினைத்து பார்க்கும் பொழுது - அக்னி ஜுவாலையில் நெய் ஊற்றி எரிப்பதைப் போன்ற வெப்பத்தால் கருகுகின்றோம்!

எங்கள் கண்கள் அனாதைகள் ஆகிவிட்டன! மதன கோபாலன், எங்களை விட்டு தூரச் சென்று விட்டான்! கண்ணன் தண்ணீர்! நாங்கள், கண்ணனைப் பிரிந்த ஏழை மீன்கள்!

கண்ணன், நீலநிற மேகம்! நாங்களோ, மேகத்திற்காக ஏங்கும் சாதகப் பறவை! தாமரை மூடி இருக்கும் இரவில், வண்டு பயன் இல்லாமல் தாமரையைச் சுற்றி ரீங்காரம் இடுவதைப் போல, நாங்கள் ஏமாற்றத்தில் வாடுகிறோம்!

காற்று, தண்ணீர், கற்பூரம், சஞ்சீவனி ஆகியவை குளுமையானவை. ஆனால் விரகதாபம் மிக்க எங்களுக்கு அவைகளும் துன்பம் தருகின்றன. குளிர்ந்த நிலவொளியும் சூரிய வொளியைப் போல் எங்களைச் சுடுகின்றது. விரகதாபம் என்ற சூரிய கிரணங்களால் பாதிக்கப்பட்ட நகரமுடியாத நொண்டியைப் போல-கண்ணன் வரும் வழியைப் பார்த்துப் பார்த்து கண்கள் பூத்து விட்டன!

சூர்தாஸ்-தம் பிரமகீத்தில் - உத்தவரின் கண்களில் கோபியர்கள் கண்ணனைக் கண்டு தரிசித்ததாகப் பாடியுள்ளார். ஆனால், அவரே-தம் பூர்வ ஜென்மத்தில் அக்ரூவராக விளங்கிய பொழுது, சத்தியபாமாவின் விரகதாபத்தைப் போக்கத் தானே பகவான் கிருஷ்ணனுடைய வடிவத்தில் சென்று தரிசனம் தந்ததற்காக, பகவான் கிருஷ்ணனின் கோபத்திற்கு ஆளாகி சபிக்கப்பட்டு கண்களை இழந்த சூர்தாஸாகப் பிறந்தார் என்று அவர் வரலாறு கூறுகின்றது. அப்படியானால்-

கோபியர்கள், உத்தவரின் கண்களில் கண்ணனை தரிசித்தது-உத்தவரை, கண்ணனாகிய பரமாத்மாவாக எண்ணி தரிசித்த நிலையில், குற்றம் ஆகாதா? சத்தியபாமா மட்டும் - அக்ரூவரை, பகவான் கிருஷ்ணனாக தரிசித்தது மட்டும், குற்றம் ஆகிவிடுமா?

கோபியர்கள் - உத்தவரை உத்தவராகத் தான் கண்டார்கள்! அதே சமயத்தில், உத்தவரின் கண்களில் கண்ணனைத் தரிசித்தது, தாசானு தாச பக்திப் பிரவாகம்! ஆனால் -

சத்தியபாமாவை ஏமாற்ற, ஒரு ஜீவாத்மாவாகிய அக்ரூவர் பரமாத்ம சொரூபத்தில் தரிசனம் தந்தது குற்றமே! சத்தியபாமாவும் ஒரு ஜீவாத்மாவை, பரமாத்மாவாக பாவித்ததும் குற்றமே! வைணவ சம்பிரதாயப்படி-ஜீவாத்மா பரமாத்மா ஆகிவிட முடியாது என்ற தத்துவார்த்த சாரத்தின் பிரதிபலிப்பே - மகாகவி பக்த குர்தாஸ் என்ற இந்நூல்!

குற்றங்களில் இரண்டு வகை - ஒன்று, தெரியாமல் செய்வது! மற்றொன்று, தெரிந்தே செய்வது! இவற்றுள் -

தெரிந்து செய்த குற்றம் - தண்டனைக்குரியது! மன்னிப்பிற்குரியது அல்ல! தெரியாமல் செய்யப்படும் குற்றமோ, மன்னிப்பிற்குரியது! ஆனாலும், அளவான தண்டனைக்கு உரியதாகி - பிறகு பாப விமோசன நிலைக்கு உரியது! உதாரணமாக-

அகலிகையின் சாப விமோசனப் பகுதியில் - பதி விரதா சிரோமணி அகலிகையின் மீது காமமோகம் கொண்ட தேவேந்திரன் தான் செய்யப் போவது மாபெரும் பாவம் என்று தெரிந்தே, கௌதமரிஷியின் வடிவத்துடன் சென்று அகலிகையின் கற்பைச் சூறையாடினான். தெரிந்து செய்த குற்றத்திற்காகவே கௌதமரால், தன் உடலெல்லாம் பெண்குறிகளாக மாறிவிடும் நிரந்தர சாபத்திற்கு ஆளானான்! அப்படியானால், தன் கணவன் கௌதமராக தேவேந்திரனை நம்பிய அகலிகைக்கும் - ஏன் கௌதமர் சாபம் தந்தார்?

தேவேந்திரன் தன்னைக் கூடும் துவக்க நிலையில் - அகலிகை, தேவேந்திரனை கௌதமராகத்தான் முதலில் நம்பினாள்! ஆனால் - பிறகோ, தனக்குச்சிற்றின்ப சுகம் தந்து கொண்டிருப்பவன், கௌதமரே அல்ல என்று தெரிந்து கொண்டும் கூட -தெரிந்து

கொண்டதைத் தெரியாதவளைப் போல, நடித்துக் கொண்டிருந்தாள்! அகலிகை, கற்பழிந்ததில், முதல் பாதியில் தெரியாமல் செய்து கொண்டிருந்த குற்றத்திற்கும், பிற்பகுதியில் தெரிந்தே செய்த குற்றத்திற்கும் ஆளானாள். அதனால்தான் கௌதமரால் தெரிந்து செய்த பாவத்திற்காக சாபத்தையும், தெரியாமல் செய்த குற்றத்திற்காக சாப விமோசனத்தை (மன்னிப்பு)யும்பெற்றாள்!

ஆனால் - அக்ரூவரும், சத்தியபாமாவும் தங்களுக்குள் நிறைந்துள்ள பரமாத்ம நிலையைப் பக்தி அனுபவத்தில் உணர்ந்திருந்தும் கூட, ஜீவாத்மாவிற்கு பரமாத்ம ஸ்தானத்தைத் தந்து - ஒருவரை ஒருவர் ஏமாற்றிக் கொண்டு, பகவான் கண்ணனின் சாபத்திற்கு ஆளாகி விட்டார்கள்! இதுவே, இந்நூலின் தத்துவ விளக்கம்!

நம் தமிழ்மொழி, உயர்தனிச் செம்மொழியாயினும் இம்மா பெரும் ஏற்றத்தைப் பெற்றமைக்குக் காரணமாக, தமிழ்ப் புலமையின் அளவிற்குப் பிறமொழிகளில் புலமை கொண்டவர்களும் விளங்கியுள்ளார்கள் என்பதை, நாம் மறந்து விடக்கூடாது.

வடமொழி, தென் மொழிகளில் வல்ல அகத்தியரின் மாணவர் தொல்காப்பியர் - இந்திரனின் ஐந்திர வியாகரணத்தைத் தழுவியே தொல்காப்பியத்தை உருவாக்கினார்! வால்மீகியிடமிருந்து, வழி நூலாகக் கம்பனும் - வியாசனிடமிருந்து வழி நூலாக வில்லியும் இலக்கியம் கண்டனர்! சிலம்பு, மணிமேகலை, சிந்தாமணி - ஆகியவை, புத்த, சமண அறிஞர்களின் தமிழ்ப்பணி! பெருங் கதையின் மூலம் - பைசாச மொழி! குறளிலும் கூட - வட மொழியிலுள்ள இந்திரனின் கதை முதலியன இடம்பெற்றுள்ளன! சிறந்த உரையாசிரியர்களாகிய பரிமேலழகர், சேனாவரையர், நச்சினார்க்கினியர், சிவஞான முனிவர் முதலியோர் வடமொழியில் மிக்க புலமை மிக்கவர்கள்! மனோன் மணீயம் - சுந்தரம் பிள்ளையின்

மேலை நாட்டுப் புலமையின் பிரதிபலிப்பு! தேம்பாவணி, சீறாப் புராணம், சதுரகராதி, கால்டுவெல் ஒப்பிலக்கணம் மொழியியல் உருபனியல் ஆய்வுகள், இலக்கியத் திறனாய்வு புதுக்கவிதை- போன்றவைகளும், இலக்கிய வரலாறுகளும் - பிறமொழியாளர் களின் தமிழாக்கங்களே!

தனித்தமிழ்ச்சுவையில் தோய்ந்த மறைமலையடிகளாரும், வடமொழி காளிதாஸனின் சாகுந்தலத்தையே நாடகமாக்கினார்! இப்படி எண்ணற்ற எடுத்துக் காட்டுக்கள்!

இந்தி மொழியின் இன்றைய விஸ்வரூப வளர்ச்சிக்குரிய காரணம்-சமஸ்கிருதம், உருது, பாரஸீகம் ஆகிய மொழிகளின் கலப்பு!

நம் தமிழ் இலக்கியச் செல்வங்கள் - உலக மொழிகளில் எல்லாம் ஏற்றுமதியாக வேண்டும் அதைப்போலவே, உலக மொழி களிலுள்ள இலக்கிச் செல்வங்களெல்லாம்-நம் தமிழில் இறக்கு மதியாக வேண்டும்! அப்பொழுதுதான்-

தேமதுரத்தமிழோசை உலகமெல்லாம் பரவும்! இல்லை என்றால் - பாரதி கூறியதைப் போல 'மெல்லத் தமிழ் இனிச் சாகும் நிலை' ஏற்பட்டு விடும்! இத்துடன் என்னுரையை முடித்துக் கொண்டு இந்நூலை அங்கீகரித்து, வெளிவரத்துணை செய்த திருப்பதி திருமலை தேவஸ்தானத்தவர்கள் -

இந்தி மொழியிலுள்ள பல செய்திகளை எனக்குத் தொகுத்துத் தந்த என் மகள் செல்வி, மங்கைபேகம்

இந்நூல் உருவாக எனக்குப் பெருந்துணை செய்த அண்ணாமலைப் பல்கலைக்கழக இந்தி மொழித்துறைத் தலைவர், பேராசிரியர் டாக்டர். அகமது உசேன் அவர்கள், அச்சுப்படிகளைத் திருத்தித் தந்த என் மனைவி பாக்கியம், மகன் இளங்கவிஞன்

வெங்கட், எழுத்துப்படிகளை செவ்வனே எழுதிக்கொடுத்தும், அச்சுப்படிகளைத் திருத்தியும் உதவிய என் உதவியாளர், லலிதா, இந்நூலை அழகிய முறையில் அச்சிட்டுதவிய எமரால்டு அச்சக உரிமையாளர் திரு. ஒளிவண்ணன்-

இந்நூலை விமர்சித்து வாழ்த்தியுள்ள அறிஞர் பெருமக்கள்- ஆகிய அனைவருக்கும் படைப்பாளனின் நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

சூர்தாஸ் பஜனாவளியின் தமிழாக்கம் பாடல்களைப் பற்றி:-

1. பஜனாவளியின் நேரடியான, முழுமையான தமிழாக்கப் பாடல்கள் அல்ல! - நாடக அமைப்பிற்கு ஏற்பத்தழுவி - படைப் பாளியின் கற்பனையும் கலந்து அமைக்கப் பெற்றவை!

2. ஆயினும் - சூர்தாஸ் காட்டிய உவமைகள், பெரும்பாலும் எடுத்தாளப் பெற்றுள்ளன!

3. பஜனாவளியின் அவ்வளவு பாடல்களுமே (நாடக அமைப்பின் அடிப்படையில்) மொழியாக்கம் செய்யப்படவில்லை!

4. காட்சி-9 (பக்கம் 20)ல் உள்ள பாடல், படைப்பாளனின் கற்பனையே! இப்பாடலை, சூர்தாஸ் பாடல்களுள் காண இயலாது!

குற்றம் களைந்து, குணம் கோடல் - கற்றறிந்தோர் கடன்.

29(4) சேயோன் தெரு,
M.M. நகர், வளசரவாக்கம்,
சென்னை - 600 087.

தாஸானு தாஸன்,
ஆர். இராமானுஜம்
படைப்பாளன்.

## நாடகத்துள் குறிப்பிடத் தக்க நாடக மாந்தர்

1. மகாகவி பக்த சூர்தாஸ்
2. வல்லபாச்சாரியார்
3. ராதை
4. பகவான் கண்ணன்
5. கோபியர்கள்
6. முகலாயப் பேரரசர் அக்பர்
7. கவிஞர் டான்சேன்
8. ஹரிதாஸர்
9. மாய்பிரூபா
10. அந்தப்புர மகளிர்
11. பக்த மீரா
12. துளசிதாஸர்
13. அக்ரூவர்
14. சத்தியபாமா
15. சுவாமி விவேகானந்தர்

# மகாகவி பக்த சூர்தாஸ்

(நாடகம் - சூர்தாஸ் பஜனாவளியின்
தமிழாக்கப் பாடல்களுடன்)

## காட்சி - 1

இந்தியாவின் காட்சி, படமாக (Map) பெரிதாகக் காட்டப்படுகிறது. தொடர்ந்து கன்னியாகுமரியில் குமரியம்மன் கோவிலும் அலைகள் கடலில் ஆர்ப்பரிக்க, வைகறையில் சூர்யோதயக் காட்சி காட்டப்படுகிறது. பிறகு - விவேகானந்தர் பாறையும், அவர் சிலையும் காட்டப்படுகின்றன. சூர்யோதயத்தை உணர்த்தும் சாமவேத பூபாள முழக்கம், இசையின் பின்னணியாக எழுகின்றன.

## காட்சி - 2

ஒரு ஆஸ்ரமக் குடிசையின் வாசலில் விவேகானந்தர், நிவேதிதை மற்றுமுள்ள சில சிஷ்யர்கள் நின்று கொண்டிருக்கிறார்கள்.

ஒரு குஜராத்தி மாணவர் (குடும்பஸ்தர்) விவேகானந்தரின் காலைக் கட்டிக் கொண்டு கெஞ்சுகிறார்:-

குஜராத்தி மாணவர்: ஸ்வாமிஜி! அடியேனின் கிரஹத்தில் தங்கள் பாதங்கள் படவேண்டுமென்று பலகாலமாகத் தவம் கிடக்கிறேன், ஸ்வாமிஜி! என் பிரார்த்தனையை அங்கீகரித்து, இன்று என் வீட்டிற்கு விஜயம் செய்ய வேண்டும். என் குடும்பத்தவர்கள் தரும் விருந்தையும் பாசத்தோடு ஏற்று எங்களை

ஆசீர்வதிக்க வேண்டும், ஸ்வாமிஜி ! விருந்துக்கும் வீட்டில் எல்லா ஏற்பாடுகளையும் செய்து விட்டு வந்திருக்கிறேன், ஸ்வாமிஜி !

வீட்டிற்குப் போனால் உங்களுடன்தான் போவேன். நீங்கள் இன்று என்னுடன் என் கிரஹத்திற்கு விஜயம் செய்யா விட்டால் - இதே இடத்தில் நான் என்னையே பிராணதியாகம் செய்து கொண்டு விடுவேன் ஸ்வாமிஜி !

அடியேன் மீது கிருபை காட்டுங்கள் ஸ்வாமிஜி!

காட்சி - 3

(குஜராத்தி சிஷ்யரின் வீட்டில் சிஷ்யர்கள் விருந்து உண்கிறார்கள். விவேகானந்தர் பாலை மட்டும் பருகி விட்டு, குஜராத்தி குடும்பத்தினர்கள் தலையில் கையை வைத்து ஆசீர் வதிக்கிறார். அனைவரும் விவேகானந்தரின் காலைத் தொட்டு வணங்குகிறார்கள்.)

காட்சி - 4

(குஜராத்தி சிஷ்யரின் வீட்டில் மூடப்பட்டுத் தொங்கிக் கொண்டிருக்கும் பட்டுத் திரை விலகுகிறது. ஒரு மாபெரும் நடன அரங்கம், தரையில் அமைக்கப்பட்டுள்ளது. இன்னிசைக் கருவிகள் முழங்க, பாடகன் பாட, ஒரு தாசி கவர்ச்சி நடனம் ஆடுகிறாள். விவேகானந்தர் முகத்தைச் சுளிக்கிறார். அவர் முகம் கோபத்தால் சிவக்கிறது.)

(பெண்குரலில்) நடனப் பாடல் (இசைக் கருவிகளுடன்)

எத்தனை எத்தனை ஜென்மங்கள்
ஏங்கித் தவிக்கிறேன்? - பிரபு!
ஞானிக்குள் மேலான ஞானி நீ !
ஞான மோனயோகிக்கும் யோகி நீ !

எப்போதுன்னுடன் - சங்கமிப்பேன், பிரபு
    எப்போதும் உன் நினைவு
உருவில் சாகிறேன் - பிரபு
    உன் அருள் ஸ்பரிசம் தான் - இந்த
ஜனப் பிறவிக்கு ஏற்றம் - பிரபு
    விவேகக் கடல் முடிவே - ஆனந்தம்!
அறிவைக் கடந்த ஆனந்தன், நீ பிரபு!
    ஞானானந்தா! விவேகானந்தா!
அனைத்து ஆனந்த சுகம் தந்திட வா, வா! பிரபு!

(விவேகானந்தர் நடனத்தைப் பிடிக்காமல் எழுந்து செல்லத் தயாராகிறார். சிஷ்யர்கள் அனைவரும் அதிர்ச்சி அடைகின்றனர். ஆனால் தாசியின் நடனம் தொடர்கிறது. தற்பொழுது பாடகன் பாடலும் தொடர்கிறது. விவேகானந்தரின் முகம் மலர்கிறது. அமர்ந்து கண்களை மூடிய படியே, பாடலை தன்னை மறந்து ரசிக்கிறார்)

(ஆண்குரலில்)    நடனப்பாடல்    (இசைக் கருவிகள் முழங்க)

மகாப் பிரபு! மாதவா! மதுராபுரிமன்னா! கிரிதாரி!
    எதை விடுவேன்! எதைத் தொடுவேன்?
எனக்குள் இரு நெஞ்சம்!
    என் செய்வேன்? கிருஷ்ணா! கிருஷ்ணா!
எது புண்ணியம்? எது பாவம்?
    தர்மத்தில் பாவம்-தன்னலம்மிக்க பலன் கருதல்!
பாவத்தில் தர்மம் - பலர்க்கு உதவல்!
    தலையான தர்மம் தறிகெட்ட மாபாவம்!
எல்லாமே உனக்கொன்று தான் - பிரபு!
    எனக்குள் இரு நெஞ்சம்!

என் செய்வேன்? கிருஷ்ணா! கிருஷ்ணா!

எது சுகம்? எது துக்கம்?

சுகத்திலே துக்கம், அதிருப்தி! பேராசை!

துக்கத்திலே சுகம், உன்பக்தி!

சுகம் காணும் தாக மோகம்! துயரப் பெருங்கடல்

எல்லாமே உனக்கொன்றுதான்- பிரபு!

எனக்குள் இருநெஞ்சம்!

என் செய்வேன்? கிருஷ்ணா! கிருஷ்ணா!

நன்மை தீமையின் நாயகன் நீ தான் பிரபு!

பாவியும் பக்தனும் உனக்கொருவனே - முரளி!

சமதர்ஸன கிருபா கடாக்ஷப் பிரபு - நீ!

பார்வையிலாக் குருடன் நான்!

பாவத்தைப் பார்க்காதே - பிரபு!

எனக்குள் இரு நெஞ்சம்!

என் செய்வேன்? கிருஷ்ணா! கிருஷ்ணா!

பெண் குரலில்

ஒரே துண்டு உலோகம்தான்!

ஒரு பகுதி உன் வடிவில் - கோவில் விக்ரகம்!

ஒப்பற்ற பூஜைகள்! வழிபாடு!

மறுபகுதி உலோகமோ - கத்தி!

மனிதனையே கொலை செய்யும்! மகாபயங்கரம்!

அப்படித் தான் நானும்!

எனக்குள் இரு நெஞ்சம்!

ஒரு நெஞ்சில் பக்தி! மறு நெஞ்சில் மாபாதகம்!

இடையில் இருப்பதோ - நீ பிரபு!

என் செய்வேன்? கிருஷ்ணா! கிருஷ்ணா!

ஒரே ஊற்றில் இரு நதி!

ஒன்றிலே புண்ணிய புனித நீர்!
மற்றொன்றில் சாக்கடை! கழிவு நீர்!
இருநதிக்கும் சங்கமம் - ஒரே கடல்!
மாயை, கண்ணா! மாயை! மயங்கித்தவிக்கிறேன்!
எனக்குள் - இரு நெஞ்சம்!
ஒன்றிலோ உன் பக்தி!
மற்றொன்றில் - பாவசிந்தை!
மத்தியில் மாடு மேய்த்துக் குழலூதும்
கோவர்த்த நேசன், கோவிந்தன் - நீ பிரபு!
மோஹ மாய வெள்ளத்தில்
மூழ்கிச் சாகிறேன்! பக்தனைக்
காக்க ஓடி வா! பிரபு!
ஹரே கிருஷ்ணா! ஹரே கிருஷ்ணா! ஹரே கிருஷ்ணா! முராரி!

## காட்சி 5

(நாடகத்தின் ஆசிரியர் தோன்றிப் பேசுதல்)

பாரதத் திருநாட்டின் தவப்புதல்வனும் - ஆன்மீக ஞானத்தில் வீரத்தையும், மனிதகுல சேவையையும் இணைத்து புரட்சி முழக்க மிட்டவருமாகிய மகாதத்துவஞானி சுவாமி விவேகானந்தரின் நெஞ்சைக் கவர்ந்த இப்பாடலின் சொந்தக்காரர் தான் - மகாகவி பக்த சூர்தாஸ்!

எம்பெருமான ஸ்ரீ கிருஷ்ணபகவானின் திருநாமத்தால் மனித நேயத்துடன் பாரதத்திலுள்ள அனைத்து மனிதர்களையும் ஒரே சகோதரத்துவ சமதான பக்தி நெறிக்குக் கொண்டு வரப்பாடுபட்ட குருநானக், கபீர்தாஸ், சைதன்யப் பிரபு, துளசிதாஸ், ஷிப்ஷா, ஷேக் முகமது, ரோக் தாஸர், பனாரஸ்தாஸ் ஜெயின் போன்ற மனிதகுல

மாணிக்க விளக்குகள் - அணையாத நந்தா விளக்காக ஆன்மீக ஞான ஒளியைப் பரப்பிய பொன்னான காலம், கி.பி. 15ம் நூற்றாண்டு!

பாரத கலாசாரத்துடன் பக்தி நெறி குன்றாமல், இதே 15ம் நூற்றாண்டில் மொகலாய சக்ரவர்த்தி அக்பரின் காலத்தில் வாழ்ந்த மகாகவி சூர்தாஸ், கல்வி அறிவு பெறாதவர்! கண்களையும் இழந்தவர்! நூறு வயதையும் கடந்து 102 வயது வரை வாழ்ந்தவர்! ஆனாலும்-

மகாகவி காளிதாஸன், வால்மீகி, ஷேக்ஸ்பியர், மில்டன் முதலிய உலக மகாகவிகளுக்குச் சமமாக மதிக்கப்படும் மகாகவி!

கிருஷ்ணாவதார ஆதிமூலக்கருவில் ராதை என்ற பாத்திரமே படைக்கப்படவில்லை. ஆனால்- நாயக நாயகியர் சரணாகதித்துவ பக்தி லீலைகளுக்குரிய ராதையையும், பரம புருஷ கோபியர் காதலையும் - தம் சூரஸாகரமாகிய பஜனாவளிக் காப்பியப் பாடல்களில் மிக அழுத்தமாக அறிமுகப்படுத்திய ஞான பக்த சிரோண்மணியே- மகாகவிசூர்தாஸ் தான்!

மகாகவி பக்த சூர்தாஸின் வாழ்க்கை வரலாற்றை-இதோ நாடகமாகப் படைக்கின்றோம்.

## காட்சி 6

(சம்வட் கிராமத்தில் செல்வச் செழிப்புடைய இளைஞன் சூர்தாஸ் குருடனாகத் தடுமாறித் தடுமாறி நடந்து வருகிறார். உடன் இரு வேலையாட்கள் பெரிய மூட்டைகளைச் சுமந்து வருகின்றனர்)

வேலைக்:- ஸ்வாமி! நாம், சம்வட் கிராமத்திற்குள் நுழைந்து விட்டோம். யார் வீட்டிற்குப் போக வேண்டும்?

சூர்: ராம்சந்த் வீட்டை விசாரித்து, அங்கே கொண்டு போய் என்னை விட்டு விடுங்கள்!

(வேலைக்காரர்கள் விசாரித்து ராம்சந்த் வீட்டில் கொண்டு போய் விட்டுவிட்டு மூட்டைகளை இறக்கி வைக்கிறார்கள். சூர்தாஸ் மடியிலிருந்து முடிச்சை அவிழ்த்து நாணயத்தைத் தர, வேலைக் காரர்கள் போய் விடுகின்றார்கள். சூர்தாஸ் அமைதியாக வெளியே நிற்கிறார். பெரியவர் ராம்சந்த் கையில் தடியை ஊன்றியபடி வெளியே வருகிறார்.)

ராம் : பெரிய பிரபுவாக வந்திருக்கக்கூடிய நீங்கள் யார்? இந்த கிராமத்தில் யாரைத்தேடி வந்திருக்கிறீர்கள்?

சூர்: நீங்கள் யாரென்று முதலில் சொல்லுங்கள்! பிறகு நான் யாரைத் தேடி வந்தேன் என்று சொல்கிறேன்.

ராம்: இந்த வீட்டிலுள்ள ஒரே கிழவன், நான்தான். என் மனைவி இறந்து எவ்வளவோ வருடங்களாகிவிட்டன. எனக்கு ஆறு பிள்ளைகள்! ஆறு பேரும் ஆண்பிள்ளைகள் தான்! ஆனால் தற்பொழுது யாருமே இங்கு கிடையாது.

சூர்: உங்கள் பிள்ளைகள் என்ன ஆனார்கள்?

ராம்: விஷ்ணுசந்த், உத்தர்சந்த், ரூட்சந்த், புத்த சந்த், தேவசந்த் ஆகிய முதல் ஐந்து பிள்ளைகளையும் நான் தான் வளர்த்து வாலிபமாக்கினேன். ஐந்து பேரும் அரசாங்கத்தில் உள்ள படை வீரர்களாகச் சேர்ந்து - சண்டையில் செத்துப் போய் விட்டார்கள்.

சூர்: உங்கள் ஆறாவது பிள்ளை?

ராம்: என் ஆறாவது பிள்ளை சூரஸ்சந்த்...என் குடும்பத்தில் தாண்டவமாடிய பஞ்சம் பசியின் காரணமாக...சூரஸ்சந்த் தன்னுடைய ஆறாவது வயதிலேயே வீட்டை விட்டு யாருக்கும் தெரியாமல் ஓடிப் போய் விட்டான்...எல்லோரையும் இழந்த இந்த வயதான கிழவன் ராம்சந்த் மட்டும் சாகாமல் இன்னும் உயிரோடு இருக்கிறான்.

சூர்: (தடுமாறித் தடுமாறி ராம்சந்தின் கையைப் பிடித்து - பிறகு அவர் பாதங்களைத் தொட்டு வணங்குகிறார்.) நான் ஒரு கண்ணில்லாத குருடன் ! என்னை ஆசீர்வாதம் செய்யுங்கள்

ராம்:உங்களைப் பார்த்தால் பெரிய பிரபுவாகத் தெரிகிறது. நானோ, ஒரு பரம ஏழை, என்னுடைய ஆசீர்வாதம் உங்களுக்கு எதற்கு ?

சூர்: (குரல் தழுதழுக்க) அப்பா! நான்தான் உங்கள் கடைசி மகன் சூரஸ்சந்த்!

ராம்: (உடனே கட்டி அணைத்துக் கொண்டு முத்தமிட்டு) சூர்ஸ்சந்த் ! என் அருமை மகனே (கண்ணீர் வடித்த படியே) இந்தக் கிழவன் ராம்சந்துக்கு இந்தத் தள்ளாத காலத்தில் ஒரு குருட்டுப் பிள்ளையையாவது கடவுள் அனுப்பி வைத்தானே? (தலையி லடித்துக் கொண்டு) பகவானே ! என்னடா சோதனை இது? பிறந்த பிள்ளைகள் ஆறு! ஆறிலே ஐந்துக்கு சண்டையிலே சாவு ! ஆறாவது பிள்ளையோ கண்ணில்லாத குருட்டுப் பிள்ளை! உடம்பிருந்தால் உயிரில்லை! உயிர் இருந்தால் கண்ணில்லை! சூர்ஸ்சந்த் ! எப்படி டா நீ குருடனானாய்?

சூர்: எல்லாமே சொல்றேம்பா! உங்ககிட்ட சொல்லாம யார் கிட்ட சொல்லி என் ஆத்மாவை சாந்தப்படுத்த முடியும்? இந்த நிமிஷத்திலே என் வாழ்க்கையிலே என் தந்தை, தமையன், குரு, தெய்வம், சொந்த பந்தம்-எல்லாமே நீங்கதானே அப்பா?

(சூர்தாஸ் குரல் ஒலிக்க-நிகழ்ச்சிகள் மட்டும் திரையில் காட்சிகளாகத் தோன்றி தோன்றி மறைகின்றன)

நான் பிறந்த இந்தப் புனித மண்ணைவிட்டு, நான் பத்து மாசம் குடியிருந்த கோவிலாகிய என் தாயை விட்டு, என்னை உருவாக்கிய மூலவராகிய கடவுள் தகப்பனை விட்டு, தரித்திரம் இருந்தாலும் 'தம்பி, தம்பி' என்று கொஞ்சிக் குலாவி சந்தோஷப்பட்ட ஐந்து

அண்ணன்மார்களையும் விட்டு, நல்லது கெட்டது தெரியாத ஆறு வயசிலே- நான் வெளியேறியதை நினைச்சா...

(சூர்தாஸ் கட்டிய முமுத்துண்டுடன் வெளியேறும் காட்சி காட்டப்படுகிறது)

ஒண்ணே ஒண்ணு மட்டுந்தான் எனக்குப் புரியுது. அதாவது, அந்த ஆறு வயசிலே வீட்டை விட்டு வெளியேர்ற தைரியம் எனக்குக் கிடையவே கிடையாது. ஏதோ எனக்குள்ளே இருந்த ஒரு சக்தி தான், என்னை இங்கேயிருந்து பிரிச்சிருக்கு!

தாய், சோறு ஊட்டி விட்ர பிராயத்திலே-பசிக்குச் சோறு தேடி கிராமம் கிராமமா பிச்சை எடுத்தேன். நினைச்ச நேரத்திலே- கிடைச்ச இடத்திலே படுத்துத் தூங்கிக் காலத்தை ஓட்டினேன்.

(சூர்தாஸ் பல இடங்களில் பிச்சை எடுத்துத் தின்பதையும் படுத்துத் தூங்கி எழுவதையும் காட்சிகளாகக் காட்டப் படுகின்றன.)

நம்ம வீட்டிலே இருந்தப்பவாவது பட்டினி கிடந்திருப்பேன். ஆனால் பிச்சை எடுத்த காலத்திலே, தவறாம சோறு கிடைச்சது! நிம்மதியாகத் தூக்கம் தவறலே இதை எல்லாம் எனக்குத் தந்ததும் எனக்குள்ளே இருந்த ஒரு சக்திதான் காரணம்!

வருஷம் ஓட, ஓட, எனக்கு வயசும் ஓடிக்கிட்டே இருந்தது-

(சூர்தாஸ் வாலிபனாகும் வரையில் பல தோற்றங்கள் காட்சிகளாக விரிகின்றன)

வேத சாஸ்திரப் படிப்பு எதுவுமே எனக்குக் கிடையாது. எழுதப் படிக்கவும் எனக்குத் தெரியாது. இன்றைய வரையிலும் - பிச்சை எடுத்துப் பழகினப்போ, எவ்வளவோ மனிதர்களை சந்திச்சேன். எவ்வளவோ தெரிஞ்சுக்கிட்டேன். அதாவது, உலகத்தைத்தான் நான் படிச்சேன்...

(பல இடங்களில், பிச்சை எடுக்கும் சூர்தாஸின் பல வகைத்தோற்றங்களையும், பலவகைப்பட்ட மனிதர்கள் பலவகையாகப் பேசும் பேச்சுக்களையும் திரைக் காட்சிகளில் மௌனமாக விரிகின்றன)

வாலிப வயது வந்ததும் கிருஷ்ணபகவானின் கோவில் இருக்கக் கூடிய மதுராபுரிக்குப் போனேன். அங்கே ஒரு அற்புதமான குளம்! குளத்தின் கரையில் ஒரு அரச மரம்! இந்த அரசமரத்தின் அடியில் நான் சென்று உட்கார்ந்த போது, எனக்குள்ளாக ஏதோ ஒரு சுகம் தெரிந்தது!...

(சூர்தாஸ் வாலிபனாக மதுராபுரியில் உள்ள ஒரு குளக்கரையில் உள்ள அரசமரத்தடியில் அமரும் காட்சி விரிகின்றது.)

அரச மரத்தடியில் உட்கார்ந்திருந்த என்னிடம் வருபவர்களைப் பார்த்ததுமே, எனக்குள்ளாக அவர்களைப் பற்றிய மூன்று காலங்களும் தெரிந்தன. என் மனதில் பட்டதை - வாய்க்கு வந்ததையெல்லாம் சொல்லிக் கொண்டிருந்தேன்...

(அரசமரத்தடியில் சூர்தாஸ் அங்கு வருபவர் செல்பவர்களிடம் பேசும் காட்சிகள் விரிகின்றன)

ஆனால் - என்ன ஆச்சரியம்? நான் சொன்னதெல்லாம் அப்படி அப்படியே, அவரவர்களின் வாழ்க்கையில் நடை பெற்றது! எல்லோரும் என்னை ஒரு பெரிய ஞானியாகப் புகழ்ந்தார்கள்! செல்வத்தைக் கொண்டு வந்து கொட்டினார்கள்! என்னிடம் ஆசீர்வாதம் பெறத்துடித்தார்கள்! ஒரு சிலர் என்னைப் பார்த்து, கிருஷ்ணபகவான் தன்னை மரங்களில் அரசமரம் என்று சொல்லி இருப்பதால் - அரச மரத்தடியில் இருந்த என்னிடம் தெய்வ அம்சம் இருப்பதாக நம்பினார்கள்.

ஆனால், ஊர் உலகத்தில் உள்ளவர்களுக்கெல்லாம் முக்காலத்தையும் தெரிந்து சொல்லக்கூடிய சக்தியை, எனக்குள் தந்த எனக்குள் இருந்த இந்த மாபெரும் சக்தி-என்னைப் பற்றி நான் தெரிந்து கொள்ளக் கூடிய சக்தியை எனக்குத் தரவில்லை...

(மரத்தடியில் சூர்தாஸிடம் செல்வம் குவிகின்ற காட்சியும், ஒவ்வொருவரும் சூர்தாஸிடம் ஆசீர்வாதம் பெறும் காட்சியும், செல்வச் செழிப்புடன் சூர்தாஸ் விளங்கும் காட்சியும் விரிகின்றன.)

அரசமரத்தடியில் ராஜகுமாரனாக, சகல வசதிகளையும் கொண்டிருந்த என்னை, அழகு சுந்தரி ஒருத்தி காதலித்தாள். நானும் அவள் அழகில் மயங்கினேன்...

(அரச மரத்தடியில் சூர்தாஸ், ஒரு அழகியின் காதலில் மயங்கும் காட்சி விரிகிறது. இருவர்தம் விழிகளும் சந்திக்கின்றன. புன்முறுவல் பூக்கின்றனர்.)

ஒரு பெண்ணின் மீது நான் கொண்ட காதலின் பரிசுதான் - நான் என் கண்களைப் பறி கொடுத்தேன்...ஒரு நாள் நள்ளிரவில்—அதுவும் கும்மிருட்டில், அந்த அழகியின் மீது கொண்ட மோகத்தால் நான் காட்டு வழியில் அவளைத் தேடி தட்டுத் தடுமாறி நடந்து கொண்டிருந்தேன். பாதை தடுமாறி, ஒரு கிணற்றுக்குள் விழுந்து விட்டேன்...

(இருட்டில் காட்டு வழியில் தடுமாறி தடுமாறிச் செடிகொடிகளை விலக்கிக் கொண்டு சூர்தாஸ் செல்லும் காட்சியும் - ஒரு கிணற்றிற்குள் விழும் காட்சியும் விரிகின்றன.)

கிணற்றுக்குள் விழுந்த நான் ஒரு கல்லில், கடுமையாக மோதியதால் என் கண்கள் குருடாகி விட்டன. கிணற்றுக்குள்ளேயே ஏழு நாட்கள் வாடி வதங்கினேன். பிறகு தட்டுத் தடுமாறி, நானே கரையேறி வந்துவிட்டேன்...

(கண் குருடான சூர்தாஸ், கிணற்றின் கற்களைப் பிடித்துக் கொண்டு, மெல்ல மெல்லக்கரை ஏறும் காட்சி விரிகிறது)

கரை ஏறியதும் கண்கள் குருடாகி விட்டதை நினைத்துக் கதறி அழுதேன். கண் இல்லாத குருடனை எந்தப் பெண்ணும் இனி விரும்ப மாட்டாள் என்பதையும் உணர்ந்தேன். ஒரு பெண்ணோடு கூடி ஒரு ஆண் வாழும் வாழ்க்கை என்பது எனக்குள் அஸ்தமித்து விட்டது. ஆனால் எனக்குள்ளாகவே ஒரு அற்புதமான மாற்றம்! கல்வியறிவே இல்லாத எனக்குக் கவிபாடும் சக்தி பிறந்து விட்டது!

பகவான் ஸ்ரீகிருஷ்ணன், என் நெஞ்சில் நடமாடினான்! கண்ணனுக்கு என் கண்களைக் களபலி தந்தேன். கண்ணபிரான், என்னைக் கவிஞனாக்கினான்....

(குருட்டு சூர்தாஸ் கதறி அழுவதும்...பிறகு முகம் மலர மகிழ்ச்சியால் குதித்து ஆடுவதும்...ஆகிய காட்சிகள் மௌனமாக விரிகின்றன)

கவிபாடும் சக்தியை எனக்குத் தந்தது எந்த சக்தி? பாலகனாக வீட்டை விட்டு வெளியேறிய பொழுது என்னுடன் துணை நின்ற சக்தி எதுவோ -அரசமரத்தடியில் வருபவர் செல்பவர்களுக்கு முக்காலங்களையும் தெரியப் படுத்த துணை செய்த சக்தி எதுவோ - அதே சக்தி தான் கவிபாடும் சக்தியைத் தந்திருக்கிறது! அந்த சக்தியைத் தான், நான் இன்று வரை தேடிக் கொண்டிருக்கிறேன். அந்தமாபெரும் சக்தியாக ஸ்ரீகிருஷ்ணன் மட்டும், மானசீகமாக-என் காதில் குழலூதுகின்றான்! நெஞ்சில் நடமாடுகின்றான்! கவிபாடத் தெரிந்தால் போதுமா? யார்மீது பாடுவது? எதைப் பாடுவது? என்னை இது வரையிலும் ஆட்டிப் படைத்துக் கொண்டுள்ள சக்தியைக் கண்டு பிடித்து அந்த அதே சக்தி மீது தான்-நான் கவிதை

களைப் படைக்கப் போகிறேன்—அச்சக்தி, பகவான் கண்ணனாகக் கூட இருக்கலாம்! அச்சக்தியை இனி, தேடிக் கண்டு பிடிக்க வேண்டும்!—

*(ராம்சந்துடன் சூர்தாஸ் பேசும் காட்சியாக அமைகிறது)*

*சூர்தாஸ்: அப்பா! நான் கொண்டு வந்த மூட்டைகளைப் பிரித்துப் பாருங்கள்!*

*ராம்: (மூட்டைகளைப் பிரித்துப் பார்த்து ஆனந்தமும் துள்ளலும் அதிர்ச்சியுடன்) ஆ! ஒரே தங்கம்! நவரத்தினங்கள்! விலைமதிப்பற்ற பலவகைப்பட்ட நகைகள்! பொற்காசுகள்! மகாலக்ஷ்மியே இந்த மூட்டைகளில் தான் வந்து தங்கி விட்டாள். இவற்றை வைத்துக் கொண்டு, நம் வம்சம் பத்துத் தலைமுறைகளுக்குப் பஞ்சம் பசியில்லாமல் சுக போக வாழ்க்கை நடத்தலாமே?..*

*சூர்: அப்பா! இவ்வளவும் அரசமரத்தடியில் நான் வருபவர் செல்பவர்களுக்குச் சொன்ன முக்கால தீர்க்க தரிசனத்திற்குக் கிடைத்த பரிசுகள்!*

*ராம்: சூரஸ்சந்த்! நீதான் குபேரனாக ஆகிவிட்டாயே! கண்ணில்லாதது குபேர வாழ்வுடையவனுக்கு ஒரு குறையே இல்லை! நானே நம் ஜாதியில் ஒரு நல்ல கன்னிகையைப் பார்த்துக் கல்யாணம் செய்து வைத்து விடுகிறேன். தள்ளாத இந்த வயதில் என்னுடனேயே தங்கிவிடு. என்னோடு நம் வம்சம் அஸ்தமித்து விட்டதே என்ற குறையை உன்னால் தான் போக்க முடியும்....*

*சூர்: அப்பா! உங்களுக்கு இந்த செல்வம் மிகமிக உயர்வாகத் தெரியலாம்! ஆனால், எனக்கோ என்னை ஆட்டி வைத்துக் கொண்டிருக்கும், எனக்குள்ளே நடமாடும் அற்புதமான சக்திதான் பெரிதாகத் தெரிகிறது!—*

ராம்: மகனே! அப்படியானால் உன் முடிவு தான் என்ன? எனக்குப் புரியும்படி பேசு...

சூர்: அப்பா! எல்லாவற்றையும் நீங்களே வைத்துக் கொண்டு சுகபோகமாக வாழுங்கள். என் லட்சியமெல்லாம் இரண்டே இரண்டுதான்! ஒன்று-ஆட்டிப் படைக்கும் சக்தியைக் கண்டு பிடிக்க வேண்டும். இரண்டாவது - அந்த சக்தியை நான் எனக்குள்ளே அனுபவித்து என் அனுபவங்களைப் பாடல்களாகப் படைக்க வேண்டும்!

ராம்: அதற்காக?...

சூர்: நல்ல முறையில் உத்தரவு தந்து, என்னை அனுப்பி வைக்க வேண்டும். என்னால் குடும்பம் என்ற குறுகிய சூழ்நிலையில் இனி வாழ முடியாது. எனக்கு விடை கொடுத்து அனுப்பி வையுங்கள். நீங்கள் எனக்குச் செய்ய வேண்டிய மாபெரும் உதவி இது!

ராம: சூரஸ்சந்த்! நம் வம்சப் பெருமையைப் பற்றிப் புரியாமல் பேசுகிறாய் என்று நினைக்கிறேன்...

நாம், பிரம்ம பட்டா என்ற உயர்ந்த ஜாதியில் பிறந்தவர்கள். என் தாத்தாவிற்கும் தாத்தாவான சந்த பர்தாயி டில்லியில் சக்கரவத்தியாக விளங்கிய பிருதிவி ராஜாவின் மீது -'பிருதிவி ராஜ ராஸோ' என்ற மகா காப்பியத்தைப் படைத்த மகா ஞானி!அவருடைய இரண்டு பிள்ளைகளான குணசந்த், ஜலசந்த் ஆகியவர்களில் குணசந்த் வம்சமில்லாமல் போய்விட்டான். ஜலசந்திற்கு ஒரே பிள்ளை -- என் தாத்தா சீத்தா சந்த்! என் தாத்தாவிற்கும் ஒரே பிள்ளை, என் தந்தை வீரசந்த்! என் தந்தைக்கும் நான் தான் ஒரே மகன்! எனக்குத் நான் ஆறு பிள்ளைகள்! உனக்கு நான் கல்யாணம் செய்து வைக்காவிட்டால் உன்னுடன் நம் வம்சமே அஸ்தமித்து விடும்! நம் வம்ச அஸ்தமனம், உனக்குச் சம்மதமா? - சூரஸ்சந்த்?

சூர்: அப்பா! நம் மூதாதையர் சந்த பர்தாயிக்குப் பிறந்து இதுவரை பெருகியுள்ள ஐந்து தலைமுறைகளும் உண்மையான வம்சம் அல்ல என்பதை முதலில் புரிந்து கொள்ளுங்கள்! பிறகு எனக்கு இங்கிருந்து வெளியேற உத்தரவு கொடுங்கள். அப்பா! சந்த பர்தாயியின் உண்மையான வம்சம், அவர் படைத்த 'பிருத்வி ராஜ ராஸோ' என்ற மகா காவியம் தான்! சந்த பர்தாயியின் சரீரத்தில் வழி வழி பிறந்த ஐந்து தலைமுறையும் அவருக்கு ஏற்ற சரியான வம்சமே இல்லை... ஆனால் உங்கள் மகன் சூரஸ்சந்த் -சந்த் பர்தாயியின் உண்மையான வம்சமாக மாறி அவரைப் போல பல காவியங்களைப் படைத்து, நம் வம்ச விருட்சங்களை உருவாக்குவது என்று திட்டமிட்டு விட்டான்...

ராம்: (சற்று சிந்தித்து) என் மகனே! உனக்குள்ளே இருக்கக் கூடிய ஞானக் கண்ணின் மேதா விலாசம், எனக்கு இப்பொழுது தான் புரிகிறது. உன் லட்சியப் பாதையில் நான் இனி தடைக் கல்லாக நிற்க மாட்டேன். எல்லாமே பகவானின் சித்தம்! உன் விருப்பப்படியே செய்! உனக்குள்ளே உள்ள சக்தி, உனக்கு வழி காட்டட்டும்! அத்துடன் அமரர் சந்தபர்தாயியின் ஆத்மாவும், உன்னை ஞான வழியில் செலுத்தட்டும்!

சூர்: (கெஞ்சியபடி) அப்பா! ஒரு மண்சட்டி! அத்துடன் நீங்கள் கட்டி இருந்த ஒரு உடுப்பு! இவற்றை உங்கள் ஞாபகமாக எனக்குப் பிச்சை கொடுங்கள்! (தன் உடைகளைக் கழற்றி எறிகிறார்)

(ராம்சந்த் எந்த மறுப்பும் இன்றி ஒரு வேட்டி, துண்டு, மண்சட்டி இவற்றைக் கண் கலங்கத் தருகிறார் (பிறகு)

ராம்: (ஒரு துளசி மணி மாலையை சூர்தாஸின் கழுத்தில் அணிவித்து) இது ஒன்று தான் நம் வம்சாவளியின் சொத்து! இத்துளசி மாலை, சந்த பர்தாயி தன் ஆயுள் முழுவதும் தன் கழுத்தில்

அணிந்திருந்த பெருமைக்குரியது ! இந்த வம்ச சொத்து, உன் கழுத்தை அலங்கரிக்கட்டும்!

(பிறகு - சூர்தாஸ் பிச்சைக்காரன் வடிவில் கையில் சட்டி யுடன் வெளியேறுகிறார்.)

காட்சி - 7

(மதுராபுரியில் பசித்துக் களைத்த வறுமைக் கோலத்தில் சூர்தாஸ் வீடு வீடாகப் பிச்சை எடுத்துக் கொண்டிருக்கிறார். சில இடங்களில் சிறிதளவு சோறு போடுகிறார்கள். பலர் கையை விரித்து போ, போ! என்று விரட்டுகிறார்கள்.)

சூர்: அம்மா தாயே! பிச்சை போடுங்கள்! (சிலர் பாவனையால் இல்லை என்று கையை காட்டி விரட்டுகிறார்கள்)

சூர்: கோவிந்தா! கோபாலா! கிருஷ்ணா! கண்ணா! பிச்சை போடுங்கள்! (சிலர் பிச்சை போடுகிறார்கள்) (சூர்தாஸ் தன் மனத்திற்குள்ளாக நினைத்தல்:-

(இந்த உலகத்தில் - அம்மா, தாய் என்ற வார்த்தைகள் எல்லாம் ஜீவனில்லாத வார்த்தைகளாகி, செத்துப் போய் விட்டன! ஆனால் யாருக்குமே விளங்காதது! யாரும் பார்த்ததில்லை! இந்த வகையில் வரும் கோவிந்தன், கோபாலன், கிருஷ்ணன் ஆகிய வார்த்தைகளில் மட்டும் உயிர் இருக்கின்றது! இந்த வார்த்தைகள் பிச்சை எடுப்பவர்களின் வயிற்றுப் பசியைத் தீர்க்கவாவது பயன் படுகின்றன. இதெல்லாம் கூட எவ்வளவு பயன் படுமோ? உலகமே ஒரு ஏமாற்றுத் தனமான கூடநாடக மேடை! யார் இந்தகோவிந்தன்? கோபாலன்? கிருஷ்ணன்? கண்ணன்?...)

பிச்சை போடும் பணக்காரர் ஒருவர்:- என்ன ஸ்வாமி? அரசமரத்தடியில் உட்கார்ந்து கொண்டு தெய்வத்தைப் போல எதை

எதையோ சொன்னீங்க, குபேரனைப் போல அவ்வளவு செல்வம் குவிந்ததே. எல்லாம் என்ன ஆச்சு? கடைசியிலே கண்ணில்லாத குருடனாய்ட்டீங்களே? எல்லோர் வாழ்க்கையையும் அப்படி அப்படியே சொன்னீங்களே, கடைசியிலே உங்க வாழ்க்கையே உங்களுக்குத் தெரியலியே?

சூர்: உண்மைதான், நீங்க சொன்னது. தன்னைத் தான் முதல்லே தெரிஞ்சுக்கணும்! தன்னைப் பத்தியே தெரியாதவனுக்கு பிறரைப் பத்தித் தெரிஞ்சாலும் சொல்லக் கூடாது. தன்னையே தெரிஞ்சுக்காத நான், பிறரைப் பத்திப் பேசின அகம்பாவத்திற்குத் தண்டனைதான் - இன்னிக்குக் குருடனாகிப் பிச்சை எடுக்கிறேன்.

(அங்கே சிலர் ஓடி வருகிறார்கள்)

ஒருவர்:- மகாஞானி மகான் வல்லபாச்சாரியார் சுவாமிகள், தன் சிஷ்யர்களோடு வந்துகிட்டிருக்கிறார். எல்லாரும் போங்க! போய் ஆசீர்வாதம் வாங்கிக்குங்க!

மற்றொருவர்:- (சூர்தாஸைப் பார்த்து) ஏ குருட்டுச் சாமி! நீயும் போய் மகான் வல்லாபாச்சாரியார் கிட்டே ஆசீர்வாதம் வாங்கிக்க. உன் கஷ்டமெல்லாம் தீர்ந்து போயிடும்.

சூர்: யார் வல்லபாச்சாரியார்? மகான்னு வேறே சொல்றீங்க!

இன்னொருவர்: வல்லபாச்சாரியாரைத் தெரியாத நீ, என்ன சாமி? பெரிய மூடனாக இருக்கிறியே?

சூர்: இப்போ நீங்க சொன்னதுபோல் உண்மை! நான் மூடன் தான்! அதுவும் முழுமூடன்! என்னைப் பத்தி எதுவுமே தெரியாதவன்! ஆனால் வல்லபாச்சாரியாரை—நீங்களெல்லாம் மகான், ஞானின்னு சொல்றது தான் பொய்!

மற்: அட, குருடா! வல்லபாச்சாரியார்- தாய் தந்தை தெரியாத அனாதைக் குழந்தையாக விளர்த்தி மரத்தடியிலே விடப்பட்டார், பிறந்த போதே. சில வருஷங்கள் கழிச்சி பெற்றோர்கள் குழந்தையைத் தேடி வந்த போது அக்னி குண்டத்தின் மத்தியிலே விளையாடிக் கொண்டிருந்தார், வல்லபாச்சாரியார்! ஒரு பெரியசித்தர்! ஞானி! யோகி! எல்லாம் தெரிந்த வேதாந்தி! ஊர் உலகமெல்லாம் அவருக்கு சிஷ்ய கோடிகள்!...

சூர்: (கடகடவென்று சிரித்து) வல்லபாச்சாரியாரா? அப்படி ஒரு மகானா? அவர் ஞானியா..? நான் அரசமரத்தடியிலே கண்ணோடு இருந்த காலத்திலே என்னைக் கூடத்தான் எல்லாரும் மகாஞானின்னு சொன்னீங்க! இதோ-பிச்சை எடுக்கிற குருடனாய்ட்டேனே?... (மீண்டும் சிரித்தல்)

அது சரி- என் கேள்விக்கு முதல்லே பதில் சொல்லுங்க! வல்லபாச்சாரியாருக்கு, முதல்லே அவரைப் பற்றித் தெரியுமா? அல்லது என்னைப் பத்தித் தெரியுமா?

வேறொருவர்: டேய் குருடா, மகாஞானிகளை நிந்திக்காதே! வல்லபாச்சாரியார், கடவுளோட அம்சம்! தெரிஞ்சுக்க.

சூர்: வல்லபாச்சாரியா-கடவுளோட அம்சமா? அப்போ கடவுளைப் பத்தித்தான் தெரியுமா?

மற்றொரு: குருடா! உனக்குக் கண்தான் குருடுன்னு நெனைச்சேன்! உன் அறிவும் குருடாயிருக்கு. இல்லைன்னா, ஒரு பெரிய மகானைப் பத்திக் குறை சொல்லுவியா?

(சிறு கூட்டமே அங்கு கூடி விடுகிறது)

சூர்: எல்லோருமா இந்தக் குருடனைத் திட்டுங்க. எனக்குக் கோபமே வராது! குருடனுக்கு ராத்திரியும் ஒண்ணுதான் - பகலும்

ஒண்ணுதான்!சிரிப்பும் ஒண்ணுதான்-அழுகையும் ஒண்ணுதான! கல்லும் ஒண்ணுதான் - கடவுளும் ஒண்ணுதான்! பொன்னும் ஒண்ணுதான்! மண்ணும் ஒண்ணுதான்! கோபத்தைக் கடந்தவன் தான், இந்த குருடன்! படும் துன்பங்களை எல்லாம் இன்ப மயமான பாடலாக்கிப் பாடத் தெரிந்தவன்தான், இந்த குருடன்! மரணத்துக்கும் தயாரானவன் தான் இந்தக் குருடன்! தன்னை உணர்ந்து கொண்டிருக்கும் இந்த குருடனுக்குள்ளே இருக்கும் ஒரு சக்தியை, உங்கள் மகானால் காட்ட முடியுமா? சொல்லுங்கள்!

வேறொருவர்: டேய் குருடா!மகானுானிக்கு நீயாடா சவால் விடறே?- யார் யாரை விமசிக்கிறதுங்கற விவஸ்தையே கிடை யாதா?...குருடா, இப்பவே போய் மகான் வல்லபாச்சாரியார் சுவாமியின் சிஷ்யர்கள் கிட்டே உன்னைப் பத்திச் சொல்லி உனக்கு ஒரு முடிவு கட்டறேன்! (ஓடுகிறார். அலட்சியமாக, சூர்தாஸ் பிச்சையைத் தொடர்கிறார்.)

## காட்சி 8

(பிறகு சூர்தாஸ் வீடுவீடாக பிச்சைக்குச் செல்கிறார். கூட்டம்அவரைக் கீழே தள்ளிவிட்டுக் கொண்டு-வல்லபாச் சாரியாரைக் காணப் பரபரப்புடன் ஓடுகிறது. கீழே விழுந்த சூர்தாஸ் எழுந்து நடக்கிறார். அப்பொழுது ஏக ஆரவாரத்துடன் "ஜெய் குருவல்லபாச்சாரியார்ஜி! ஜெய ஜெய ஆச்சார்யஜி! ஜெய வல்லபதேவ குருமகான்ஜி!" என்ற சிஷ்ய முழக்கத்துடன் பல்லக்கில் வல்லபர் வருகிறார்.)

பல்லக்கிற்குள் ஒரு சிஷ்யர், வல்லபரிடம் ஏதோ ரகசியமாகச் சொல்லி சூர்தாஸைக் கைவிரலால் சுட்டிக் காட்டுகிறார். வல்லபர்-சூர்தாஸைக் கூர்ந்து கவனிக்கிறார். பிறகு வல்லபர், பல்லக்கை, விட்டுக் கீழே இறங்கி நிற்கிறார்.

வல்ல: (சிஷ்யர்களை நோக்கி-மெதுவான குரலில்) எல்லோரும் மதுராபுரி கோவர்த்தநேசனை சேவித்துக் கொண்டு நேராக ஆய்ப்பாடியில் உள்ள கோகுலத்திற்குச் செல்லுங்கள். எனக்கென்று சில ஆணைகளை எனக்குள்ளாக நம் நாயகன் கோகுலக் கண்ணன் உத்தரவிட்டிருக்கின்றான். அவற்றை முடித்துக் கொண்டு, நானே கோகுலத்திற்கு வந்துவிடுவேன். பல்லக்கு கூட வேண்டாம். நீங்கள் போகலாம்!

*(அனைவரும் செல்கின்றனர்)*

*(அமைதியாக சூர்தாஸைப்பின் தொடர்ந்து செல்கிறார், வல்லபர். சூர்தாஸ் ஒரு சிறு காட்டு வழியாக நடந்து ஒரு குளக் கரையில் உட்கார்ந்து கையிலுள்ள சட்டியைத் தடவித் தடவிப் பார்க் கிறார். அவர் கீழே விழுந்ததில் பாதிக்கு மேல் உணவு சிதறி மீதி சிறிய அளவிலேயே உள்ளது. அதை உண்ட சூர்தாஸ் குளத்தின் தண்ணீரைக் குடித்து விட்டு, குளக்கரையில் உள்ள அரசமரத் தடியில் மரத்தில் சாய்ந்து கொண்டு உட்கார்கிறார். பிறகு சட்டியில் தட்டிக் கொண்டு பாடுகிறார். வல்லபர் அமைதியாக உட்கார்ந்து பாடலைக் கேட்கிறார்)*

## காட்சி 9

பாடல்

ஜெகமே, கடவுள் இருக்கானா?
அவனா-உன்னை ஆள்கின்றான்?
பூமாதேவிக்குப் புருஷனா கடவுள்?
(கடகடவென்று சிரித்தல்)
புருஷன் பூமியைப் பார்த்தானா?
பூமியும் புருஷனைப் பார்த்தாளா?
இருவரும் இந்த குருட்டுப் பிள்ளையை

எங்கே பார்த்தார்?-எப்போது பார்த்தார்?
எதுவுமே இல்லை!
பார்க்காதவர்-குருடரா?
பார்வை இல்லாவன் நான் குருடனா?
(மறுபடியும் சிரித்தல்)

(கோபத்துடன்)

பூதேவி! தாயா-நீ எனக்கு?
பொல்லாதவள்! மகாபொல்லாதவள்!
நரகாசுரனைக் கொன்ற நங்கைதானே நீ?
நானோர் குருடன்! எப்படிப் பார்ப்பாய்?
பிச்சைக்கார பிள்ளை நான்! பேசுவாயா நீ?
தாயே பூமி! நானா குருடன்!
இல்லை! உன் புருஷனே, குருடன்!
அம்மா பூமி! நான் எடுப்பதா, பிச்சை?
எனக்கா பிச்சை? இல்லை இல்லை!
இல்லை! என் அப்பனுக்குத் தான் பிச்சை!
(உருகிப் பாடுகிறார்)

மதுராபுரி மன்னா! மாதவா! கண்ணா!
மாயவா! தேவா! மகாப்பிரபு!
குடிக்கக் கஞ்சி இல்லை எனக்கு!
கொப்பரை கொப்பரையாய் நிவேதனமோ-உனக்கு!
உடுக்கத் துணி இல்லை எனக்கு!
உனக்கோ-பீதாம்பர நவரத்தினாலங்காரம்!
நிற்கவும் இடம் இல்லை எனக்கு!
உனக்கோ-ஒரு கோடி கோயில்கள்!
அழுதழுத கண்ணீரா எனக்கு?
ஆனந்த சுகபோக மவ்வளவும் உனக்கு!
கண்ணா! ஹரே கிருஷ்ணா! கார்முகில் வண்ணா

கல்லான உனக்கு காத்திடும் கடவுள் என்ற பேரா?
மாதவா! மணிவண்ணா! மகாப்பிரபு!

குசேலனுக்குக் குபேர வாழ்வு!
இந்தக் குருட்டு சூர்தாஸோ-பிச்சைக்காரன்!

வள்ளலா நீ?- யாருக்கு வள்ளல் நீ?
பிள்ளையைக் குருடாக்கி பிச்சை எடுக்க விட்ட,
வன் நெஞ்சன் நீ! வள்ளலா நீ?
எல்லாமே பொய்! இரும்பு நெஞ்சம் உனக்கு!

கேசவா! மாதவா! கிரிதாரி! கிருஷ்ணா!
கேள்விக்கு பதில் என்ன பிரபு?
கோவர்த்தனேசா! கோவிந்தா! ஹரி! ஹரி!
கோகுலக் கண்ணா! கிரிதாரி! கிருஷ்ணா!

மானஸீகப் பார்வையில்-
மன்னவா! கண்ணா! உன் மங்கள திவ்யசேவை!
நீலமேகா! சியாமளா! நிர்மலா! பிரபு!
நின் பார்வை எனக்கில்லை என்றால் -
நீ தானே குருடன்?

(அழுது கொண்டே)

ஏன் படைத்தாய் பிரபு? ஏன் படைத்தாய் கண்ணா?
என்னை ஏன் படைத்தாய் கிருஷ்ணா?

குருடனாய் விதித்த நீ -
பசி எடுக்கும் வயிற்றை
ஏன் படைத்தாய், பிரபு - நீ?ஏன் படைத்தாய் பிரபு?
பேதமிலா நாயகனே! பெருமாளே! கிருஷ்ணா!
பிச்சைக்கார குருடன் நான் -
பெற்ற சாபமென்ன பிரபு?
செய்த பாவமென்ன பிரபு?

ஹரி கிருஷ்ணா !முராரி! ஆதி மூலநாயகா!
அம்மா! தாயே! குருடன்! என்றால் -
பிச்சையே கிடைப்பதில்லை - பிரபு! கிரிதாரி!

கண்ணா!கார்மேக வண்ணா! முராரி! முரளி!
என்றால் தான்-
பிச்சையும் கிடைக்குதடா பிரபு!

கண்ணா! கருமணியே! காயாம்பூவண்ணா ஹரே கிருஷ்ணா!
கண்ணைக் கெடுத்த நீ -
கலைஞானக் கல்வியே இல்லாது
கவிபாட வைத்தேன்-பிரபு?

பிச்சைக்குப் பாட்டென்றால்-
பிச்சையின் பாட்டெல்லாம் -
பிரபு! நீ யென்றால்-
இடும்பிச்சை உனக்குத்தான் கண்ணா!
குருடனுக்கிட்ட பிச்சை-
கோவிந்தனுக்குத்தான் பிரபு!
குருடனுக்கிட்ட பிச்சை-
கோபாலனுக்கே - பிரபு!
(புன்முறுவலுடன் பக்தி உணர்வுடன்)
சர்வ திருஷ்டியும் கொண்ட கண்ணா!
சகலமும் பார்க்கும் பிரபு!
சுந்தர லாவண்ய சொரூபமங்களா! சுயம்புநாதா!
கண்ணா! மணி வண்ணா! கார் மேகா!
சூர்தாஸ் உன் கண்ணில் படாதவரை -
முராரி! முரளி! கிரிதாரி! முகுந்தா! சியாமளா!
நீ தான் குருடன்!
பிரபுஜி ! - நீதான் பெரும் குருடன்!
நீயே பெரும் குருடன்! நீல மேகா! நீ-குருடன்!
குருடனுக்குத் தெரியுதடா, கோபாலன் குருடனென்று!

விட்டெறிக்கும் ஆதவனே! - நீ, குருடன்
விண்ணில் நீந்தும் வெண்மதியே!-நீ, குருடன்!
கண்சிமிட்டும் விண்மீன்கள்-தான் குருடு! கண் குருடு!
ஜோதிகளும் குருடு! சுந்தரா! கண்ணா! நீ-குருடு!
(இடி இடி என்று சிரிக்கிறார்)

(பாடலின் முதலில் ஏளன பாவம்! பிறகு கோப பாவம்! பிறகு பக்தி உருக்கமயமான பாடலை ரசித்து மகிழ்ந்த வல்லபர், சூர்தாஸிடம் மெதுவாகப் பேசத்தொடங்குகிறார்.)

வல்: ஆஹா! அதி அற்புதமான பாட்டு! அற்புதம்! அற்புதம்!

சூர்: (பரிதாபமாக) எழுத்தறிவே இல்லாத குருட்டுப் பிச்சைக்காரனின் பரிதாபத்திற்குரிய அனுபவங்களுக்குக்கூட பாராட்டுதல்களா? பலே! பலே!

வல்: பகவானின் படைப்பில் மனிதன் அனுபவித்துவரும் பஞ்சமும் பசியும், சத்தியம்! அதே மனிதனின் நெஞ்சின் ஆழத்தி லுள்ள பக்தியும் சத்தியம்! சத்தியங்கள் எல்லாம் சரித்திரங்கள்! சரித்திரங்கள் எல்லாம் அதி அற்புதப் பாட்டுக்களாக உருவெடுப்பதும் சத்தியம்தான்! பஞ்சம், பசியைப் பாட, பகவானின் பக்தியைப் பாடக் கல்வியறிவு எதற்கு?

சூர்: இந்தக் குருடனைப் பற்றிப் பாராட்டிக் கொண்டிருக்கும் உங்களைப் பற்றி நான் தெரிந்து கொள்ளலாமா?

வல்: சத்தியத்தைப் பாராட்ட சாட்சி வேண்டாம். அறிமுகம் தேவை இல்லை! பாட்டு சுகமாக இருந்தால் பறவையும் ரசிக்கும்! பசுவும் மயங்கும்! இந்தப் பட்டியலில் நான் உன் பாடலை ரசிக்கும் ரசிகர்களில் ஒருவன்!

சூர்: உங்கள் பெயரையாவது தெரிந்து கொள்ளலாமா?

வல்: கவிஞனே! நான் உன் பெயரைக் கேட்காத பொழுது, நீ ஏன் என் பெயரைத் தெரிந்து கொள்ள வேண்டும்? நம் சரீரத்திற்குரிய பெயர்களில் நாம் இல்லை. நாமே பொய். நமக்குள்ளிருக்கும் மெய்-உன்னைப் பாட வைக்கிறது! என்னைக் கேட்டு ரசிக்க வைக்கிறது! இரண்டு பேருக்குள்ளும் இருக்கக் கூடிய மெய் ஒரு மாபெரும் சக்தி! அந்த சக்தியை இதுவரையிலும் நானும் கண்டதில்லை! காணாத ஒன்றைப் பற்றி எப்படி உன்னிடம் சொல்வது!

சூர்: ஸ்வாமி! நீங்க யாராக இருந்தாலும் சரி, நீங்க என்னோட பேசும் போது வேத உபநிஷத்துக்களை எல்லாம் ஒரே சாறாகப் பிழிந்து குடிச்சிக்கிட்டிருக்கிற மாதிரி எனக்குள்ளாக உள்ள ஒரு சக்தி-எனக்கு வழிகாட்டுது. நீங்கதான் சுவாமி எனக்கு நல்ல வழியைக் காட்டி எனக்குள்ளே இருக்கக்கூடிய-எனக்கும் புரியாத சக்தியைப் புரிய வைக்கணும். என் குருட்டுக் கண்ணும் அச்சக்தியைப் பார்க்கும் படியாகக் காட்டணும்!

வல்: பகவான் கிருஷ்ணனுடைய கிருபை இருந்தா எல்லாமே நமக்கு நல்ல படியாக நடக்கும். பகவானுடைய திருநாமங்களெல்லாம் உன் பாட்டில் வந்ததே. இவையெல்லாம் உனக்கு எப்படித் தெரியும்? யார் சொல்லித் தந்தவை?

சூர்: இந்தக் குருடன் பிச்சைக்குப் போகும்போது இந்தச் சட்டியிலே கிடைக்கிறதோ சாப்பாடு! என் காதுக்கு கிடைக்கிறதோ, கண்ண பகவானோட திருநாமங்கள்! தின்னது மறந்து போச்சு! கேட்ட கிருஷ்ண நாமங்கள், பாட்டா மாறிடிச்சு! பாட்டெழுதுற படிப்பு, பாடற ராகம்—ஹூம்— எனக்குள்ளே ஒரு சக்தி இருந்துகிட்டு என்னைப் பாட வைக்குது! அந்த சக்தியைத் தான், நான் தேடிக்கிட்டிருக்கேன் ஸ்வாமி!

வல்: சூர்தாஸ்! நீ இப்போ சொன்னியே, உனக்குள்ளேயிருக்கிற உனக்குத் தெரியாத ஒரு சக்தி-அதே சக்தி தான் என்னை

உன்னை அழைச்சிக்கிட்டுப் போக அனுப்பியிருக்கு. இனி நீ பிச்சை எடுக்க வேண்டாம். என்னோடெ புறப்படு. நீ உலகமே புகழக்கூடிய ஒரு பெரிய மகாகவியாகப் போறே!

சூர்: ஸ்வாமி! தானே வந்து என்னை ஆட்கொண்டு அழைச்சுக்கிட்டு போக வந்திருக்கிற உங்களை..........

வல்: சூர்தாஸ்! நான்தான் வல்லபாச்சாரி!

சூர்: (அதிர்ச்சியுடன்) ஆ! மகாஞானியான ஒரு பெரிய மகானா இந்தக் குருட்டுப் பிச்சைக்காரனைத் தேடி வந்திருக்கிறீர்கள்? (தட்டுத்தடுமாறி அவர் பாதத்தைத் தொட்டு வணங்குகிறார்.)

வல்: சூர்தாஸ்! நீ கிருஷ்ணனுடைய பெயர்களை மட்டுமே தெரிந்து வைத்திருக்கிறாய். கிருஷ்ணசரிதத்தையும் தெரிந்து கொள், சொல்கிறேன். புறப்படு என்னுடன்.

(சூர்தாஸைத் தூக்கி விட்டு அழைத்துக் கொண்டு புறப்படுகின்றார்)

சூர்: (கைகுவித்து) ஸ்வாமி! எனக்குக் குருவாகி ஞானோபதேசமும் தீக்ஷையும் தரவேண்டும் என்பது என் பிரார்த்தனை.

வல்: பகவான் பரம புருஷன் நம் நாயகன் கண்ணனின் சித்தமிருந்தால், எல்லாமே நடக்கும்.

சூர்: சாஸ்திரங்களைக் கரைகண்ட ஞான சூரியர்களாக விளங்கும் உங்கள் சிஷ்யர்களின் மத்தியில்-கல்வியறிவே இல்லாத இந்தக் குருட்டுப் பிச்சைக்காரனும் ஒரு சிஷ்யனென்றால்...?

வல்: சூர்தாஸ்! என் சிஷ்யர்களிலேயே நீ தான் மகாகவிச் சக்ரவர்த்தியாகப் போகிறாய்! (நடந்து கொண்டே பேசுகின்றனர்)

சூர்: ஆறு வயது முதல் எனக்குள்ளாகவே எனக்குத் தெரியாமல் என்னை ஆட்டிப் படைத்துக் காப்பாற்றி வரும் அந்த மாபெரும் சக்திதான், என்னை உங்களிடம் சேர்த்திருக்கிறது.

வல்: நீ குறிப்பிடும் அந்த மாபெரும் சக்திதான்- பகவான் கிருஷ்ணன்! அவன் சிறைச்சாலைக்குள் பிறந்த ஜென்மபூமிதான் இந்த மதுராபுரி! இங்குதான் கிருஷ்ண லீலைகள் நடத்திய பிருந்தாவனமும்- தன் விரலால் தூக்கி, இடையர்குலத்தைக் காத்த கோவர்த்தனகிரியும் இருக்கின்றன. இந்தப் புனித மண்ணில் உள்ள பாலகிருஷ்ணனின் கோவிலில் உள்ள கண்ணனின் பெயர், கோவர்த்த நேசன். நாம் புறப்பட்டுப் போய் சேரக்கூடிய புனித மண் ஆய்ப்பாடி, கோகுலம் எனப்படும். கோகுலம் பகவான் கண்ணன், வளர்ந்த பூமி. கிருஷ்ணன் விளையாடியதால் அவன் நிறமாக மாறிப் போன யமுனை, இன்றைக்கும் கிருஷ்ண நிறத்தோடு ஓடுகிறது. கோகுலத்தில் உள்ள கண்ணனின் பெயர், நவமோகன கிருஷ்ணன். கோமதி நதி கடலில் சங்கமமாகும் கடலில் உள்ள புனித மண் தான், பகவான் கண்ணன் அரசாண்ட துவாரகாபதி. துவாரகாபதியில் உள்ள கண்ணனின் பெயர், துவாரகாதீசன். இப்புனித மண்ணில் உள்ள அரசமரத்தடியில் தான், கண்ணன் வைகுண்ட பதவியை அடைந்து தன் அவதாரத்தை முடித்துக் கொண்டார்.

சூர்தாஸ்! உனக்கும் கோகுலத்திற்கும் தொடர்பு இருக்கின்றது. போகப்போக உனக்கே புரியும். நவ மோகன கிருஷ்ணனின் சந்நிதானத்தில்தான், நீ மகா கவியாகப் புதுப்பிறவி எடுக்கப் போகிறாய்!

சூர்: ஸ்வாமி! இந்த குருட்டுப் பிச்சைக்காரனுக்குப் புதுப் பிறவியா? அப்படியானால்-இழந்த பார்வையை மறுபடியும் பெற்றுக் கண்களோடு இருப்பேனா, ஸ்வாமி?

வல்: (கடகடவென்று சிரித்துவிட்டு) சூர்தாஸ்! சரீரத்தில் ஆசை வைக்காதே! உன் புதுப்பிறவியில் தெரிய வேண்டியவை உனக்குத் தெரியும். மற்றவை தெரியாது. எப்படி இருந்தாலும் நீ மகாகவியாக மாறப்போவது சத்தியம்! நாம் கோகுலத்தைச் சென்று அடைவதற்குள், பகவான் கிருஷ்ணனின் சரித்திரத்தைத் தெரிந்து கொள், சொல்கிறேன்...

(கிருஷ்ண சரிதப் படங்கள் காட்சிகளாக விரிகின்றன. படங்களில் நடுவில் நிழலாக சூர்தாஸின் தலையும், வல்லபாச்சாரியாரின் தலையும் தெரிகின்றன)

காட்சி 10

(கோகுலம் நவமோகன கிருஷ்ணன் கோவிலின் வாசலில் சிஷ்யர்கள் சூழ-வல்லபாச்சாரியார், சூர்தாஸ் காணப்படுகின்றனர். உள்ளே கோவிலில் மணி ஓசை. யமுனை நதி பாய்ந்தோடும் அற்புதமான காட்சிகள்)

வல்: சூர்தாஸ்! கோகுலக் கண்ணனின் கோவிலின் வாசலுக்கு வந்து விட்டோம். முதலில் நீயாக மூலஸ்தானத்தை நோக்கி மெதுவாக நட..! போகும் பொழுது கைத்தடியையும் கீழே எறிந்து விடு! நீயாகத்தான் தட்டுத் தடுமாறி மூலஸ்தானத்திற்குப் போக வேண்டும். நாங்கள் யாரும் உன்னுடன் வரமாட்டோம். உன் கைகளை முன்னே நீட்டி நீட்டிச் செல்லும் வழியைத் தடவித் தடவிப் பார்க்காதே. இரு கரங்களையும் தலை மீது குவித்துக் கொண்டு நட..! தட்டுத் தடுமாறிக் கீழே விழுந்தாலும் பரவாயில்லை! எழுந்து நடந்து போ. ஒரு மனிதன் பகவானை நோக்கிப் புறப்பட்டுப் போகும்பொழுது, யாரையும், எதையும் தனக்குத் துணை தேடக் கூடாது. நேரக் கூடிய சோதனைகளை அவனே சந்திக்க வேண்டும்! அவனே தாங்க வேண்டும்! அவனே தாண்ட வேண்டும்!

சூர்: (தைத்தடியைக் கீழே போட்டுவிட்டு) ஸ்வாமி! உங்கள் ஆணையின்படியே பகவானை சேவித்து விட்டு வருகிறேன்.

வல்: பகவானை நீ சேவிக்கும்பொழுது உன் பக்தி நிஷ்காமிய மாக இருக்கட்டும். எதையும் உனக்காகக் கேட்டு விடாதே

சூர்: அப்படியே, சுவாமி! ஒரு தீர்க்கமான முடிவுடன் பகவானை நோக்கி நடக்கப் போகிறேன். அதுவும் ஒரு வகையான மன சாந்தியுடன்!

வல்: சொல் சூர்தாஸ்! சொல்.

சூர்: இந்தக் குருடனுக்குக் கிடைக்கக்கூடிய பகவானின் தரிசனம், பார்வையில் இல்லாவிட்டாலும் - என் இதயத்திற்குள் இருக்குமல்லவா? அது ஒன்றே எனக்குப் போதும்.

வல்: சூர்தாஸ்! பகவானை சேவிப்பதற்குரிய ஞான மனோபக்குவம் தானாகவே உனக்கு வந்து விட்டது. அதுவும், கோகுலக் கண்ணனின் கிருபாகடாக்ஷமே காரணம்! இனி, நீ மூலஸ்தான சேவைக்குப் புறப்படலாம். புறப்படுவதற்கு முன்பு உனக்கு ஞானோபதேசம் செய்து விடுகிறேன்!

(வல்லபாச்சாரியார், சூர்தாஸின் கழுத்தை அணைத்து, சூர்தாஸின் காதில் ஒரு கையை மறைத்துக் கொண்டு ஞானோபதேச மந்திரங்களை உபதேசிக்கிறார். சூர்தாஸின் முகம் ஒளி வீசுகிறது. அவர் தலையைச் சுற்றிக் கதிரவனின் கிரணங்கள் சுழலுகின்றன)

வல்: சூர்தாஸ்! புறப்படு! திரும்பி வரும் பொழுது ஒரு மகா கவியாக-பகவானின் ஞான ஒளியாக வந்து சேர்வாய்!

(மெல்லிய வீணைமீட்டும் ஓசை-'ஜல்-ஜல்' என்ற தாளஇசை-ராக பாவ பரதநாட்டியச் சிலம் பொலிகள் மானஸீகமாக எழுகின்றன)

வல்: சூர்தாஸ்! நவமோகன கிருஷ்ணன் மூலஸ்தானத்தி லிருந்து உன்னை அழைக்கின்றான்! போ! நீ கேட்கும் வீணையின் நாதத்தை சரஸ்வதி எழுப்பத் தொடங்கி விட்டாள்! விக்னேஸ்வரர் உன் பாடலை எதிர்நோக்கிப் போடும் தாளத்தையும், தேவலோக மாதர் உன் பாடலுக்கு ஆடத் துவங்கி விட்ட சலங்கைகளின் ஜதி ஓசையையும் மானசீகமாக, உனக்குக் கேட்கவில்லையா? உடனே போ! ராகம், தாளம்-எல்லாமே ஒரு மகாகவியின் பாடலுக்குத் தயாராகி விட்டன! முழங்கட்டும், கிருஷ்ண கானம்!

(உடனே சூர்தாஸ் தலைமீது கைகளைக் குவித்துக் கொண்டு உள்ளே நுழைந்து செல்கிறார். கூட்டத்தில் தடுமாறிக் கீழே சாய்கிறார்.)

பிறகு எழுந்து மூலஸ்தானத்தை நோக்கி அடிமேல் அடிவைத்து நடக்கிறார். மூலஸ்தானம் நெருங்குகிறது. மூலஸ் தானத்தில் மூலவரிடமிருந்து பேரொளி எழுகிறது. சூர்தாஸின் கண்கள் திறக்கின்றன. சூர்தாஸின் கண்களுக்குள் கோபாலன் குழலூதுகின்றான். பிறகு இருபுறமும் ருக்மணி, சத்தியபாமா, சமேதனாக சேவை தருகிறான். தரிசனம் மறைய, சூர்தாஸின் கண்களும் மீண்டும் குருடாகின்றன.

(கலைமகளின் வீணை இசை-
விநாயகரின் தாளம்-
கண்ணனின் குழலமுதகானம்-
விண்ணுலக மாதரின் நாட்டிய சலங்கையொலியுடன்
சூர்தாஸ் பாடத் தொடங்குகிறார்)

### காட்சி 11

(நவநீத கிருஷ்ணனின் சேவை கிட்டிய சூர்தாஸ் பாடும் பாடல்கள்)

ஆண்குரல்

(உருகி மெய் மறந்து பாடுதல்)

"ஆஹா! அற்புதம்! அற்புதம்! அதிரூபதரிசனம்,
ஆனந்தம்! ஆனந்தம்!
மதுராபுரி மன்னா! மாயவா! கண்ணா!
முகுந்தா! முராரி!முரளி! கிருஷ்ணா!
மகாப்பிரபு! உன் மணிமுடி மதுரம்!
மலர்விழியும் மதுரம்! மதுரம்!
பாசம் கனிந்தொழுகும் பார்வையும் மதுரம்! மதுரம்!
பவளவாயிதழ் மதுரம்! மதுரம்!
தோளிணைகள் மதுரம்! மதுரம் !
துயரொழித்த கரமலர்கள் மதுமம்! மதுரம்!
குழலோசை மதுரம்! கோபியர் லீலை மதுரம்!
ராதையின் சிணுங்கல் மதுரம்! மதுரம்!
காதலின் பாதையில் ராதை படுதுயரம்-மதுரம்! மதுரம்!
அஷ்ட லக்ஷ்மி சேர் அருளொழுகு மலர் மார்பும்
மதுரம்!மதுரம்
பிரமன் பிறந்த பெருவயிறும் மதுரம்! மதுரம்!
உலகளந்த பாத மலர், மதுரம்! மதுரம்!
கங்கை பிறந்த காலடிகள், மதுரம்! மதுரம்!
தாஸருக்கு சேவை தரும் தாளிணைகள், மதுரம்! மதுரம!
அணைத்துயிரும் சங்கமம் கொள் அடி இரண்டும் மதுரம்!
மதுரம்!
பிரபு! உன் பேரழகே மதுரம்! மதுரம்!
குருடனுக்கு சேவை தந்த குருபரா! நரநாராயணா!
மதுரம்! உன் நாமங்கள் ஆயிரமும் மதுரம்!
கோவிந்தா! பிரபு! குசேல நண்பா! மதுரம்! மதுரம்!
பாஞ்சாலி மானம் காத்த பார்த்தசாரதி! மதுரம்! மதுரம்!
கீதையும் மதுரம்! கீதையைக் கேட்பதும் மதுரம்!
விவேக யோகி ! உன் விஸ்வரூபம் மதுரம்!மதுரம்!

(ஆடிக் கொண்டே பாடுகிறார்)

கோபி கிருஷ்ணா!கோவர்த்த நேசா! ராதே கிருஷ்ணா!
கோபி கிருஷ்ணா! கோபால கிருஷ்ணா! ராதே கிருஷ்ணா!
ஹே, பிரபு! ஹே கிருஷ்ணா! ஹே, கண்ணா!
கிருஷ்ண கிருஷ்ண கிருஷ்ண பிரபு!
ஹரே, கிருஷ்ண கிருஷ்ண பிரபு!
கிருஷ்ண கிருஷ்ண கோபி கிருஷ்ண!
ஹரே கிருஷ்ண! ஹரே கிருஷ்ணா!
ஹரே கிருஷ்ண! ஹரே கிருஷ்ணா!

கிருஷ்ண கிருஷ்ண ராதே கிருஷ்ணா-
கிருஷ்ண ஹரே கிருஷ்ணா!

கண்ணன் பிறந்தான்! கண்ணன் பிறந்தான்!
என் கண்ணுக்குள்ளே கண்ணன் பிறந்தான்!
ஹரே கிருஷ்ணா, ஹரே கிருஷ்ணா, ராதே கிருஷ்ணா!
என் கண்ணுக்குள்ளே பிறந்தான் கண்ணன்!
என் கண்ணாகவே பிறந்தான் கண்ணன்!

கிருஷ்ண! கிருஷ்ண, கிருஷ்ண பிரபு!
கண்ணன் மறைந்தான்!
கண்ணன் எங்கே மறைந்தான்?

கிருஷ்ண கிருஷ்ண கிருஷ்ண பிரபு!
கண்ணன் மறைந்தான் ! - எங்கே மறைந்தான்?

எனக்குள் மறைந்தான்-கண்ணன்!
என்னுள் மறைந்தான் கண்ணன்! எனக்குள் நிறைந்தான்!

ராதே கிருஷ்ணா! கோபி கிருஷ்ணா!
ருக்மணி கிருஷ்ணா! பாமா கிருஷ்ணா!
பாஞ்சாலி கிருஷ்ணா! பாண்டவ கிருஷ்ணா!
குசேல கிருஷ்ணா! கோவர்த்ன கிருஷ்ணா!

கிருஷ்ண, கிருஷ்ண, கிருஷ்ண பிரபு!
கிருஷ்ண, கிருஷ்ண, கிருஷ்ண பிரபு!

என் கண்ணான கிருஷ்ணா! கண்ணா! கிருஷ்ணா!
கண்ணுக்குள் கிருஷ்ணா! கண்ணா! கிருஷ்ணா!
பார்க்கும் கண் -எனக்கெதற்கு கிருஷ்ணா?
பால கோபாலா! நீ போதும் கிருஷ்ணா!

எனக்குள், என்னைப் பார்க்கும் கிருஷ்ணா!
உனக்குள் என்னை உடைய கிருஷ்ணா!

உன் லீலை - எனக்குள் கிருஷ்ணா, கிருஷ்ணா!
கிருஷ்ணன் எனக்குள்-பிரபு! பிரபு!
கிருஷ்ணனுக்கே சூர்தாஸ்-பிரபு! பிரபு!

பெண் குரல்

(கோவிலுக்கு வெளியே ஓடிவந்து சூர்தாஸ் ஆடிக் கொண்டே பாடுகிறார்)

கொண்டாட்டம்! கொண்டாட்டம்!
கொண்டாட்டம்! கொண்டாட்டம்!

கோபாலன் பிறந்து விட்டான்!
கோவிந்தன் பிறந்து விட்டான்!
கொண்டாட்டம்! கொண்டாட்டம்!

கோபியரே! கொண்டாட்டம்!
சூர்தாஸின் கண்ணிலே சூராதி சூரனவன்·

கிரிதாரி பிறந்து விட்டான்! கிருஷ்ண பிரபு நிறைந்து விட்டான்!

கண்ணனுக்குப் பிறந்த நாள்! கண்ணனுக்குப் பிறந்த நாள்!
காத்திருந்த ராதையே! களித்துக் கொண்டாடு! கொண்டாடு!
பிறந்த நாள், கண்ணனுக்கு ! பிறந்து விட்டான், கிருஷ்ண பிரபு!

இடையரே, ஆடுங்கள்! இன்பமாய்ப் பாடுங்கள்!
கோடி தவம் செய்தவளே! யசோதா!

உன் கண்ணன் பிறந்த நாள்! கொண்டாடு!
உனக்கும் பால் சுரக்கும்! உன்னோடு-
பசுவெல்லாம் பால் கறக்கும்,
பசுங்கன்று வயிறாற!
பசுவெல்லாம் பால் கறக்கும்!
பஞ்சமில்லை பார் முழுதும்! பால் கிடைக்கும்!

கோபாலன் பிறந்து விட்டான்!
கொண்டாட்டம்! கொண்டாட்டம்!

பூத்துக் குலுங்கிச் சிரிக்கும் கொடி மலரே!
செடி மலரே! உங்களுக்கும் கொண்டாட்டம்!
வாழ்த்துரைத்து வானத்தில்
வட்டமிடும் வண்ணப் பறவைகளே!
உங்களுக்கும் கொண்டாட்டம்!
துள்ளி வரும் வெள்ளமே! தூய யமுனையே!
உன் நிறமாய் கோவிந்தன்-
எனக்குள்ளே பிறந்து விட்டான்!
பூரிக்கும் நுரைவெள்ளம் ,புதுமலராய்-
யமுனைக்கும் கொண்டாட்டம்!

கிரிதாரி பிறந்ததாலே
கிளுகிளுப்பு ராதைக்கு!

குழலமுத கானம் எழ-
கோகுலத்தில் கொண்டாட்டம்!

கடைந்தெடுக்கும் வெண்ணெயெலாம்
கண்ணனுக்குப் பிரசாதம்!

கண்ணனுக்கும் கொண்டாட்டம்!
கன்றுகளே! பசுக்களே!
உங்களுக்கும் கொண்டாட்டம்!

புண்ணிய புருஷரெலாம்-
நல்லவை நடக்குமென்று

பூ மணங்கள் பூத்திடுவார்! பூரிப்பார்!
பூலோகம் பூரிக்கும்!

கொண்டாட்டம்! கொண்டாட்டம்!
கோகுலத்தில் கொண்டாட்டம்!

கண்ணுக்குள் பிறந்த கண்ணா!
கவிபாடும் சூர்தாசோ, கண்ணிலாக் குருடன்தான்!

இல்லாத கண்ணுள்ளே கொண்டாட்டம் கொண்டாட்டம்!
இல்லாத கண்ணில் இருக்கும் கண்ணனுக்குக்
கொண்டாட்டம்! கொண்டாட்டம்!

இன்றுமுதல் கொண்டாட்டம்! பிறந்தநாள் கொண்டாட்டம்!

(பாடி முடித்த சூர்தாஸ் பக்தி பரவசமாகி, தன்னை மறந்து கீழே சாய்கிறார். வல்லபாச்சாரி சூர்தாஸைத் தூக்கி மடியில் சாய்த்துக் கொள்கிறார்.)

## காட்சி 12

(மாபெரும் மொகலாய ராஜசபையில் சர்வ மதத் தலைவர்களும் காஜி, மான்ஸிராட் பாதிரியார், சீக்கிய குரு ராமதாசர், டான் சேன், சாந்த் கான், சூரஜ்கான் ஆகிய கவிஞர்களும், அபுல்பாஸில், அபுல் பைஸி ஆகிய அறிஞர்களும், ராஜா தோடர்மால், மான்சிங், பீர்பால், பகவான்தாஸ் ஆகிய அமைச்சர்கள், திவான்கள், சுபேதார்கள், ஜாகிர்தார்கள், ஜமீன் தார்கள், நிலப்பிரபுக்கள் கூடியுள்ளனர். மொகலாய சக்ரவர்த்தி அக்பர் நுழைய அனைவரும் எழுந்து தலைவணங்குகின்றனர்)

தோடர்மால்: மஹா சக்கரவர்த்தி அக்பர் பாதுஷா வாழ்க! வாழ்க! சலாம்! சலாம்!

அக்பர்: உலகத்திற்கு ஒன்றான பரம் பொருளின் பெயரால் அனைவருக்கும் சலாம்! அமருங்கள்!

(அனைவரும் அமர்கின்றனர்)

தோடர்: இப்பெரும் தேசத்தில் வடக்கில் காஷ்மீரம், முதல் தெற்கே அகமது நகர், பேரார், கான்தேசம் வரை - மேற்கே காந்தகரர் முதல் கிழக்கே வங்காளம் வரையிலும் பரந்து வியாபித்துக் கிடக்கும் ஒரு ஈடுஇணையற்ற பெரிய சாம்ராஜ்யத்தில் - தங்கள் அதிகாரத்திற்குட்பட்ட எவ்வளவு சிற்றரசர்கள், எவ்வளவு திவான்கள், எவ்வளவு ஜமீன்தார்கள், எவ்வளவு சுபேதார்கள், எவ்வளவு ஜாகீர்தார்கள், எவ்வளவு பிரபுக்கள், வாழ்கிறார்கள்? எவ்வளவு மதங்கள், எவ்வளவு கலாசாரங்கள், எவ்வளவு பண்பாடுகள், எவ்வளவு வேறுவேறு வகைப்பட்ட மொழிகள், எவ்வளவு சம்பிரதாயங்கள்- இவ்வளவும் கொண்டுள்ள அவ்வளவு மக்களும், பாரபட்சமில்லாத தங்கள் கருணையை எவ்வளவோ புகழ்கிறார்கள் பாதுஷா!

அக்: தோடர்மால்! கருணைக்குரியவன், கடவுள் மட்டுமே, கடவுளின் கருணைக்குத் தான், நான் அடிமை! இந்த சாம்ராஜ்யத்தின் அரியணையை அலங்கரிக்கக் கூடிய கடமைக் குரியவன் தான் இந்த அக்பர்! ஆனாலும் என்றைக்குமே நான் உங்கள் ஊழியன்! சலாம் என்ற வார்த்தையைக் கேட்கும் பொழுதே எனக்குப் புல்லரிக்கிறது. ஏனென்றால், சலாம் என்றால் சாந்தியும், சமாதானமும் என்றுதான் அர்த்தம். இந்த சாம்ராஜ்ய ஆட்சிக்குட்பட்ட அனைவருமே சகோதரர்கள்! சமமானவர்கள்! நானும் உங்களில் ஒருவன்! கடவுளால் மனிதனாகப் படைக்கப் பட்ட ஒவ்வொருவனின் இதயத்திலும் சாந்தி தவழ வேண்டும்! மனித சமுதாயம் முழுவதும் சமாதானம் ஓங்கிப் பரவ வேண்டும்! ஆனாலும்...

தோடர்: சொல்லுங்கள், பாதுஷா?

அக்பர்: இவ்வளவு சொல்லும் நானே, சில நெருக்கடியான நிர்ப்பந்தங்களால் போர்க்களங்களில் ஈடுபட்டு மனித குல இரத்தம் சேற்றில் புரள வேண்டிய சந்தர்ப்பக் கோளாறுகளுக்கு ஆளாகி விடுகிறேன். அரசனுக்குரிய கடமை என்ற போர்வைக்குள்ளிருந்து மனித சமுதாயப் படுகொலைகளுக்கும் நான் ஆளாகி விடுவதை நினைத்து வேதனைப்படுகிறேன், தோடர்மால்! அதனால்தான் சர்வ சமய ஞானிகளையும் வருவித்து சாந்தியையும், சமாதானத்தையும் தேடுகிறான், இந்த அக்பர்!

மான்: பாதுஷா அவர்களே! தங்களைக் காண சீக்கிய குரு ராமதாஸர் வருகை தந்திருக்கிறார்!

அக்: (எழுந்து நின்று) குருஜி ராமதாஸருக்கு சலாம்! (வணங்குகிறார்)

ராம: (கையால் ஆசீர்வதித்து) சலாம்-அக்பர்-சலாம்!

அக்: குருமகான் அவர்களே! தங்களின் திவ்விய தரிசனத்தால் என் இதயமெல்லாம் சாந்தியும், சமாதானமும் பொங்கி வழிகிறது.

மான்: குருராமதாசர் சீக்கியர்களின் நான்காவது குருமகான்! இம்மகான், இங்கு வந்திருப்பதைப் பார்க்கும்பொழுது-ஆதி முதல்வர் குருநானக் மகானின் சமத்துவப் பாதையின் சமாதான உபதேசங்கள் பாதுஷாவின் நெஞ்சமெலாம் மகிழ்வூட்டக் கூடியவை!

அக்: எனக்கும் ஓரளவிற்கு குருநானக்கைப் பற்றித் தெரியும். நீங்களும் சொல்லுங்கள் மான்சிங்!

மான்: குருநானக் எவ்வளவு பெரிய மகான்? இந்து-முஸ்லீம்களின் ஒற்றுமை இணைப்புக்காக மாபெரும் ஆன்மீகப் பாலத்தைக் கட்டியவரல்லவா குருநானக்? அவர் இந்துவும்

அல்லாதவர்! முஸ்லீமும் அல்லாதவர்! ஆனால் இந்து முஸ்லீம்களை ஒன்றாக இணைப்பதில் தன்னையே அர்ப்பணித்தவர், அவர்! கடவுளை அடையும் பாதையை நன்றாகக் கண்டறிந்தவர் குருநானக்! முஸ்லீம்களோடு முஸ்லீமாக மெக்கா ஹஜ் யாத்திரைக்கும் சென்று வந்தவர் குருநானக்! ஹரி கிருஷ்ண பக்தராக இருந்தாலும், விக்கிரக ஆராதனையைக் கண்டித்தவர் குருநானக்!

ராம: தன்னை ஒரு சாதாரண மனிதனாகவே கருதியவர், குருநானக்! குருநானக்கின் உபதேசங்கள், சத்தியமானவை!

(குருநானக்கின் உபதேசப் படம் விரிகிறது. பின் குரலாக அவர் உபதேசங்கள் எழுகின்றன)

" மனித சமுதாயத்தில் வளமும், நலமும் பொங்க வேண்டு மென்றால் பின் வரும் ஐந்து வழிகளையும் பின் பற்றுங்கள்!

முதலாவதாக : காணமுடியாத இறைவனை இசையோடு பாடி வணங்குங்கள்!

இரண்டாவதாக : இரக்கத்துடன் மனித சமுதாயத்திற்கு சேவை செய்து உதவுங்கள்!

மூன்றாவது: காலையில் நீராடி உங்கள் உடலைத் தூய்மையாக வைத்துக் கொள்ளுங்கள்!

நான்காவதாக: கடவுளிடமும் மனிதனிடமும் வேறுபாடு பார்க்காமல் தொண்டு செய்யுங்கள்!

ஐந்தாவதாக: கடவுளின் நினைவோடு எப்பொழுதும் இருங்கள்! குரு என்றும் பீர் என்றும் சொல்லிக் கொண்டு பிச்சை எடுத்து வாழ்பவர்களின் பாதங்களை வணங்காதீர்கள்! சொந்த உழைப்பில் வாழ்வதோடு - எல்லோருக்கும் உதவி வாழும் வாழ்க்கையே ஞானநெறி!

மான்: பாதுஷா! சத்தியதர்ம வழி, அருள் வழி-அன்பு வழி-இவைகளே மகான் குரு நானக் வழி! மகான் குருநானக் மாபெரும் சமுதாய சீர்திருத்தவாதி. மூடநம்பிக்கைகளையும், வெளி வேஷத்தையும், தீண்டாமையையும் கண்டித்தவர் குருநானக். பிறரைக் குறை சொல்லாமல் - தன் குறையைத் தெரிந்து கொண்டு திருத்திக் கொண்டு மனித சேவையில் ஈடுபடுவதையே மகான் குருநானக் விரும்பினார். மகான் குருநானக்கின் 'சத்ஸநாம்' உபதேசங்கள் உலகிற்கு சகோதரத்துவ வழிகாட்டக் கூடியவை!

ராம: பாதுஷா! மகான் குருநானக் தான் மரணமடைந்த பிறகு கூட-மகானின் உயிர் பிரிந்த சரீரமும், இந்து முஸ்லீம் ஒற்றுமையை நிலை நாட்டியது.

அக்: உயிரைப் பிரிந்த மனித உடம்பு, வெறும் மரக்கட்டை தானே? நீங்கள் சொல்வது எனக்குப் புரியவில்லை, ராமதாஸரே!

ராம: இந்து மதத்தவர்களிலும், முஸ்லீம்களிலும் அளவில்லாத சிஷ்யர்கள் மகான் குருநானக்கிற்கு இருந்தார்கள். குருநானக் மரணம் அடைந்த உடனேயே அவர் உடல் மீது வெள்ளைத் துணி போர்த்தப்பட்டது.

(காட்சி விரிகிறது)

(குருநானக்கின் உடல்மீது வெள்ளைத்துணி போர்த்தப்பட்டு உள்ளது . இஸ்லாமிய, இந்து சிஷ்யர்கள் சூழ நிற்கிறார்கள்)

முஸ்: குருநானக் ஒரு முஸ்லீம்! எங்கள் முறைப்படி அடக்கம் தான் செய்ய வேண்டும்.

இந்: இல்லை! குருநானக் ஒரு இந்து. எங்கள் மத ஆசாரப்படி இவர் உடலைத் தகனம் தான் செய்ய வேண்டும்!

(இரண்டு கூட்டத்தினரும் வெறி கொண்டவர்களாகக் கத்துகிறார்கள்)

(பின்குரலில்) ராமதாசர்: எந்த மகான் இந்து முஸ்லிம் இணைப்புக்கும், சகோரத்துவத்துக்கும் பாடுபட்டாரோ, அதே மகானின் மரணத்தின் பொழுது மாபெரும் இந்து முஸ்லீம் கலவரம் உருவாகிக் கொண்டிருந்தது.

(காட்சி விரிகிறது. போர்த்தப்பட்ட குருநானக் உடல் மீதுள்ள துணியை இரு சார்பினரும் அகற்றுகிறார்கள். அங்கே சடலம் இல்லை! வெறும் பூக்களாகக் கிடக்கின்றன.)

முஸ்: மகான் எல்லோருக்கும் பொதுவானவர்!

இந்: ஆம்! அதனால்தான் அவர் உடல் மலர்களாக சிஷ்யர்களாகிய நமக்குப் பிரசாதமாகி விட்டது!

முஸ்: நாங்கள் பாதி மலர்களை எடுத்துக் கொண்டுபோய் அடக்கம் செய்யப் போகிறோம். இந்துமத சகோதரர்களே! நீங்களும் வந்து மலர் அடக்கத்தில் கலந்து கொள்ளுங்கள்!

இந்: நாங்களும் பாதிமலர்களை எடுத்துச் சென்று தகனம் செய்யப் போகிறோம். இஸ்லாமிய சகோதரர்களே! நீங்களும் வந்து நம் குரு மகானின் இறுதிச்சடங்கில் பங்கு கொள்ளுங்கள். (மலர்களை இரு சாராரும் எடுத்துக் கொண்டு ஒருவரை யொருவர் கட்டித் தழுவிப் பிரிகின்றனர்.)

அக்: ராமதாஸரே! ஆஹா! மகான் குருநானக்கின் மரணத்தின் பின்னணியிலும் ஒரு மனிதகுல சகோதரத்துவ சாட்சியா? ஆஹா! அற்புதம்! அற்புதம்! மதங்களைக் கடந்த மனித நேய அடிப்படையில் இந்து-முஸ்லீம் ஒற்றுமைக்குத் தன்னையே அர்ப்பணித்த மகான் குருநானக் போன்ற ஞானிகள் தாம், இந்த தேசத்தைப் பாதுகாக்க வேண்டும். மகான் குருநானக்கின் திருநாமத்தின் பெயரால் கேட்கிறேன். நீங்கள் செய்து வரும்

சகோதரத்துவ சேவைகளில் நான் செய்ய வேண்டிய கடமை ஏதாவது உண்டா, ராமதாஸரே!

ராம்: அதற்காகத்தான் சில உதவிகளை நாடித் தங்களிடம் வந்தேன் பாதுஷா!

அக்: கேளுங்கள்! எதை வேண்டுமானாலும் செய்யக் காத்திருக்கிறேன்.

ராம்: பாதுஷா! குருநானக்கின் கொள்கைகளைப் பரப்பி வாழும் சீக்கியர்களாகிய எங்களின் தனிப்பட்ட வழிபாட்டிற்கு ஒரு புனித கோவில் வேண்டும். அதை எழுப்புவதற்காக அமிர்தசரஸில் ஒரு பெரும் நிலப்பரப்பு வேண்டப்படுகின்றது.

அக்: அதற்கு நான் செய்ய வேண்டிய கடமை என்ன, ராமதாசரே?

ராம: தாங்கள் அதற்குரிய ஏற்பாடுகளைச் செய்தால் - ஒரு புதிய அமைப்பில் புனித குளம் ஒன்றைவெட்டி இணைத்து, விக்கிரக வழிபாடு இல்லாத எங்கள் கோட்பாடுகளின் படித் திட்டமிட்டு ஒரு அற்புதமான சீக்கியக் கோவிலை உருவாக்கிக் கொண்டு விடுவோம். இந்த நாட்டில் முதலாவது எழப்போகும் புனித சீக்கியக் கோவிலின் அஸ்திவாரமாக சரித்திரத்தில் தங்களின் சர்வ சமய கருணை இடம் பெற வேண்டும்! பாதுஷா!

அக்: இவ்வளவுதானே? மான்சிங்! குருராமதாசர் அமிருத சரஸில் தங்கள் சீக்கியர் கோவிலை எழுப்புவதற்கு எவ்வளவு நிலப்பரப்பை, எந்த இடத்தில் கேட்டாலும், உடனடியாக நீ உடன் சென்று சட்டப்படி உரிமை சாஸனம் செய்து கொடுத்து, எல்லாவிதமான உதவிகளையும் அவருக்குச் செய்து கொடுத்து விட்டுவா!

மான்சிங்: அப்படியே செய்கிறேன், பாதுஷா!

ராம்: பாதுஷா! சர்வ மதத்தவர்களையும் சமமாகப் பாவித்து அருளை காட்டும் தங்கள் மனம், பொன்மனம்! பொன்மனத்தில் வழிந்த கருணையின் துணையுடன் அமிர்தசரஸில் எழுப்பப்படும் எங்கள் புனித சீக்கியர் கோவிலை : எதிர்காலத்தில் தங்கள் நெஞ்சத்தைப் போலவே பொற்கோவிலாகவே மாற்றிப் போற்றிக் காப்போம்.

(ராமதாசரும், மான்சிங்கும் வெளியேறுகின்றனர்)

அக்: (எழுந்து நின்று) சபையோர்களே! சர்வ மதத் தலைவர்களே! இப் பாரத தேசத்தில் இவ்வளவு பெரிய ஒரு சாம்ராஜ்யத்தை இதுவரையிலும் எந்த அரசனும் ஆளவில்லை! யாருக்கும் கிடைக்காத ஒரு மாபெரும் சாம்ராஜ்யத்தின் அரியணை எனக்குக் கிடைத்துள்ளது என்றால், அது கடவுளின் சித்தம்! கடவுளின் சித்தப்படி இந்த சாம்ராஜ்யத்தில் வாழும் இந்துக்களா னாலும், இஸ்லாமியர்களானாலும், சீக்கியர்களானாலும், பௌத்தர்களானாலும், சமணர்களானாலும், கிறிஸ்தவர்களா னாலும்- எல்லோரும் கடவுளின் பிள்ளைகளே. அவர்களைக் கடவுளின் ஊழியனாகக் காக்க வேண்டிய நான், எந்த மதத்தையும் சார்ந்தவனல்ல. நான் எல்லோருக்கும் பொதுவானவன்!

பீர்பால்: பாதுஷா! உங்கள் சாம்ராஜ்யம் [illegible] சாம்ராஜ்யமும் அல்ல, இந்துமத சாம்ராஜ்யமும் அல்ல. நீங்கள் ஆட்சி செய்து வருவது - கடவுளின் சாம்ராஜ்யம்!

அக்: பீர்பால்! நீ சொன்னது கூடத்தவறு. கடவுளின் சாம்ராஜ்யத்தை மனிதன் ஆளமுடியாது. இந்த சாம்ராஜ்யத்தை ஆள நியமிக்கப்பட்ட கடவுளின் அடிமை நான்!

பீர்பால்: தாங்கள் சொல்வது சத்தியம் பாதுஷா!

அக்: சபையோர்களே! இன்றைய தலைமுறை மக்களுக்கு இந்து முஸ்லீம் ஒற்றுமைக்கு வழிவகுத்தவர், இந்துவாகப் பிறந்த

மகான் குருநானக். ஒரு நூறு வருஷங்களுக்கு முன்பு முஸ்லிமாக வாழ்ந்த கபீர்தாஸரும் ஏழை நெசவாளியாக இருந்து கொண்டு, இந்து முஸ்லீம் ஒற்றுமைக்குப் பாடுபட்டதை நாம் மறந்துவிடக் கூடாது. கபீர் நமக்கெல்லாம் கற்பித்த சர்வமத சமரச ஞான போதனைதான் 'ராம், ரஹீம்' ! அதாவது ராமனே ரஹீம்! ரஹீமே ராமன்! ஒருவனே கடவுள்! ஒன்றே மனித குலம்! இப்பாரதத்தில் கபீர்தாஸர், குருநானக் இருவருடைய காலடிகளும் படாத இடமே இல்லை. இவ்வளவுக்கும் இவர்கள் முறைப்படியாக கல்வியறிவு இல்லாதவர்கள்! ஆனால் இந்த தேசம் அமைதியாக இருக்க எப்படிப் பட்ட ஸகோதரத்துவ உறவும் சமாதானமும் இருக்க வேண்டும். என்பதைத் தங்கள் அனுபவங்களால், பக்தி ஞானமார்க்கத்தால், கடவுளின் அருளால் உணர்ந்தவர்கள் இவர்கள்.

அபுல்பாசல்: பாதுஷா – கபீரும், குருநானக்கும் கட்டிய இந்து முஸ்லீம்ஸகோதரத்துவ பாலத்தின் மீதுதான் இவ்வளவு பெரிய சாம்ராஜ்யத்தை எழுப்பி இருக்கிறார். பாதுஷாவும் -கபீரைப் போல, குருநானக்கைப் போலக் கல்வி அறிவு இல்லாதவர்தான். ஏன்? நபிகள் நாயகம் கூட கல்வியறிவு இல்லாதவர்தான்! கடவுளின் அருளுக்கு ஆளானவர்களுக்கு-கடவுளின் ஞான வழியும், கடவுள் படைத்த மனிதகுல சேவையும் தான் கல்வி! இதுபோதும், இவர்களுக்கு!

அக்: ஸகோதரர்களே! எதிர்கால பாரத தேச சரித்திரத்திலும் சரி- இந்த தேசம் எந்த மதத்திற்கும் சொந்தமாகி விடக்கூடாது. அப்பொழுது தான் சாந்தியும், சமாதானமும், ஸகோதரத்துவமும் மனித சமுதாயத்தில் தவழ முடியும். இத்தகைய என் அனுபவங்கள் எதிர்கால பாரதத்திற்குத் தக்க பாடமாக இருக்கட்டும்!

அபுல்பாசல்: உண்மைதான் பாதுஷா! அரசியலில் ஆன்மீகம் நுழையலாம். ஆனால் ஆன்மீகத்தில் அரசியல் நுழைந்து விடக்

கூடாது. அரசியலில் ஆன்மீகம் நுழைந்த பொழுதுதான் நாம் ராஜ ரிஷிகளாகிய ஜனகர், அசோக மகாச் சக்கரவர்த்தி கௌதம புத்தர் களைக் காண முடிந்தது. ஆன்மீகத்தில் அரசியல் நுழைந்தால், தனிப் பட்ட மதங்கள் மேலோங்கும். மதத் தலைவர்கள் அரசர்கள் ஆவார் கள். இக்கொடுங்கோல் மன்னர்கள், மற்ற மதத்தவர்களை மனித நேயமில்லாமல் வாட்டி வதைத்துச் சித்திரவதை செய்வார்கள்!

அக்: அதனால்தான் சர்வ மதங்களும் எனக்குச் சமம். இந்து மதத்திலுள்ள இராஜபுத்திரப் பெண்களைக்கூட மணந்து கொண்டி ருக்கிறேன். நெற்றியில் சந்தனப் பொட்டும் வைத்திருக்கிறேன். இந்துக்கள், முஸ்லீம்கள், கிறிஸ்தவர்கள் - எல்லோரையுமே ஒரே கடவுள்தான் படைத்தார். கடவுள், மனிதனைத்தான் படைத்தார். மனிதன்தான்-மதங்களைப் படைத்து விட்டான்.

அபுல்: பாதுஷா! எல்லாமதங்களுமே புனிதமானவை! மதவாதிகள் வியாபாரிகள்! மதத்தை அரசியலாக்குகின்றவன், மனித குலத்தை சமாதானமாக வாழவே விட மாட்டான்!

அக்: மதங்கள் கூட எனக்கு முக்கியமல்ல, மதங்களில் குறிப்பிடப்படும் கடவுளின் வடிவம் கூட எனக்குத் தேவை இல்லாதவை! ஆனால் கடவுள் நம்பிக்கையையும், கடவுளை எண்ணி வழிபடும் வழிபாடுகளையும் நான் மதிக்கிறேன். உள்ளத்தை உருக்கும் பக்தி மயமான சங்கீதப் பாடல்களில் , நான் என்னை மறந்து ரசிக்கிறேன். மனித நெஞ்சத்தில் சந்தோஷத்தையும் சமாதான சாந்திகளையும் இறைவன் மீது பாடப்படும் பாடல்கள் ஏற்படுத்தி விடுவதால் - இசையின் நாத வெள்ளத்தில் இறைவன் தவழ்வதை உணர்கிறேன். எனக்கு இத்தகைய கடவுளின் சுக அனுபவத்தை பாடல்களின் வழியாகக் காட்டியவர், இங்குள்ள ஆஸ்தான கவியும் நவரத்தினங்களுள் ஒருவருமாகிய டான்சேன்!

பீர்பால்: பாதுஷா அவர்களே! இந்து மதத்தைச் சார்ந்த யாத்திரிகர்களின் சார்பில் என்னுடைய ஒரு தாழ்மையான விண்ணப்பம்.

அக்: சொல்லுங்கள்.

பீர்: பாதுஷா! இந்து மத யாத்திரிகர்களுக்கு அவர்கள் செல்லும் ஒவ்வொரு யாத்திரை ஸ்தலங்களிலும், நாம் 'ஜஸியா' என்ற வரியை வசூலித்து வருகின்றோம். பெரும் பாலான யாத்திரிகர்கள் பிச்சை எடுக்கக் கூடியவர்களாகவும், தர்ம சத்திரங்களில் தங்கும் இலவச உணவை உண்பவர்களாகவும் இருந்து வருகின்றார்கள். அவர்களுக்கு விதிக்கப்படும் ஜஸியா வரியைச் சிறிது குறைத்து நீதி வழங்க வேண்டும், பாதுஷா!

அக்: இந்துமத யாத்திரிக பக்தர்களின் பக்திக்கெல்லாம் வரியா? பக்திக்கு வரி விதிப்பது பெரும் அநீதி! எனவே, இன்றுமுதல் இந்து மதயாத்திரிகர்களுக்கு விதிக்கப்படும் ஜஸியா வரியை அறவே நீக்கி விடுமாறு உத்தரவிடுகின்றேன்.

பீர்பால்: பக்திப் பாதையில் இருந்த தடுப்புச் சுவர்கள் தூள் தூள்களாகி விட்டன. இனி பக்தர்கள் எங்கெங்கும் பயணம் செல்லலாம். நன்றி பாதுஷா, நன்றி!

அபுல்பாசல்: பாதுஷா! தங்களைக் காண கோவாவிலிருந்து மான்ஸிராட், அக்குவாவிவா ஆகிய கிறிஸ்துவ பாதிரியார்களும் தங்களைக் காண வந்திருக்கின்றார்கள்.

அக்: கிறிஸ்தவத் துறவிகளே! தேவகுமாரனின் பெயரால் உங்களை இதயம் மகிழ வரவேற்கிறேன்.

மான்ஸிரேட்: ஓ! தேவகுமாரன்! பாதுஷா கிறிஸ்துவ மதத்தையும் நன்றாகத் தெரிந்து வைத்திருக்கிறீர்களே?

பீர்பால்: எல்லாமே எங்கள் பாதுஷாவிற்குக் காதால் கேட்ட கேள்வி ஞானம்தான்! பாதிரியாரே! நீங்கள் இந்தியாவில் சந்தித்து வரும் மன்னர்களை விட, எங்கள் பாதுஷா ஒரு வித்தியாசமானவர். அரசியல் நுணுக்கத்திலும் சரி - ஆன்மீகத்திலும் சரி-எங்கள் பாதுஷா ஒரு மாமேதை, பாதிரியாரே!

மான்ஸிரேட்: அப்படியானால், பாதுஷா அவர்களிடம் மதங்களைப் பற்றிய சில சந்தேகங்களைக் கேட்கலாமா?

அக்: பாதிரியார்களே! தாராளமாக எதை வேண்டுமானாலும் கேளுங்கள். தெரிந்ததைச் சொல்கிறேன். தெரியாததைத் தெரிந்து கொள்கிறேன்.

மான்ஸிராட்: பாதுஷா! நீங்கள் முஸ்லீம் மதத்தவர்தானே?

அக்: நான் முஸ்லீம் மதத்தைச்சேர்ந்தவனே அல்ல!

மான்ஸி: எனக்குப் புரியவில்லையே பாதுஷா?

அக்: இஸ்லாமியம் என்பது ஒரு மதமே அல்ல! அது ஒரு மார்க்கம்! அதாவது பரம் பொருளிடம் சென்று சேரும் ஒரு மனிதகுலப்பாதை! எல்லா மதங்களுமே பரம்பொருளை அடைய ஒவ்வொரு பாதையை அமைத்திருக்கின்றன.

அக்குவாவிவா: எலலா மதஙகளும, மாாககஙகளும சொல்லும் நீதிகளில் உங்களுக்குப் பிடித்தமான ஒரு பொது வாசகத்தைச் சொல்லுங்கள்! பாதுஷா!

அக்: 'பயப்படாதே' என்ற வார்த்தைதான் அது! பகவத் கீதையிலும் பைபிளிலும் குர்ஆனிலும் மற்ற மதங்களிலும் மனிதனுக்குக் கடவுளால் உணர்த்தப்பட்ட வார்த்தை தான் - 'பயப்படாதே'! பயம் கொண்டவன், தன் வாழ்வின் குறிக்கோளை எட்ட முடியாது.

அக்குவாவிவா: எல்லா மதங்களின், மார்க்கங்களின் முடிந்த முடிவான கடவுளின் உத்தரவு எது பாதுஷா!

அக்பர்: மனிதகுல சேவை! இல்லாதவனிடம் இருக்கின்றவன் காட்டும் இரக்கம்! தான் அழிந்தாலும் - மற்றவனை வாழ வைக்கும் தியாகம்! சுருக்கமாகச் சொன்னால் - மனித நேயம்!

மான்ஸிராட்: கடவுளைப் பற்றிய தங்கள் பொதுவான கருத்தைச் சொல்லவேண்டும் பாதுஷா!

அக்: கடவுளைப் பற்றியே நான் கவலைப்பட்டு அலட்டிக் கொள்வதில்லை. கடவுள் மனிதனைப் படைத்த தந்தை! கடவுள், மனிதனுக்கு எஜமானன்! நம் தந்தையையும், எஜமானனையும் விமர்சிக்க நமக்குத் தகுதி இல்லை. நமக்குள்ளாக, நாம் மனித நேயத்துடன் கரைந்தால் - நமக்குள்ளேயே கடவுளை உணர முடியும். கடவுளின் பெயரால் மதத்தைத் தேடி மனிதன் ஓடக்கூடாது. மதத்தைக் கடந்தால் தான் - கடவுள் நம்மைத் தேடி ஓடி வருவார், நமக்குள்ளேயே இருந்து, துணை செய்வார்!

மான்ஸிராட்: இந்துக்கள் வழிபடும் சூரிய வழிபாட்டை பாதுஷா அவர்களும் செய்து வருவதாகக் கேள்விப்பட்டேன்.

அக்: வானமோ, சூரியனோ, சந்திரனோ, நட்சத்திரங்களோ அல்லது பஞ்ச பூதங்களோ எந்த மதத்திற்கும் சொந்தமல்ல!

மான்ஸிராட்: எப்படி பாதுஷா இப்படி ஒரு முடிவிற்கு வந்தீர்கள்?

அக்: சூரியனின் கணக்கு- வருஷங்கள்! சந்திரனின் கணக்கு மாதங்கள், நாட்கள்! நட்சத்திரங்களின் கணக்கு பல காலங்கள்! மதங்களின் தர்ம நிலையில் - மாத வழிபாட்டில், வருஷங்களில் தெய்வ வணக்கம் செய்யும் இந்து, சூரியனை வணங்குகிறான்!

நாள்தோறும் செய்யும் தொழுகைகளின் கணக்கில்- மாதங்களில் வணங்கும் இஸ்லாமியன் சந்திரனைத் தொழுகின்றான்! நட்சத்திர அசரீரிகளின் அடிப்படையில் வணங்கும் கிறிஸ்தவன், சிலுவையை நோக்கி, நட்சத்திரங்களைக் கணக்கு வைத்து மண்டியிடுகிறான்!

அபுல்பாசல்: எல்லா மதத்தவர்களின் கடவுள் வணக்கங்களுமே-வானத்தில்தான் பாதுஷா!

அக்: கடவுளை வணங்குவதிலும் கூட - பஞ்சபூத இயற்கை வழிபாடுதான்! இஸ்லாமியனின் தொழுகை வானத்தை நோக்கி! கிறிஸ்தவனின் தொழுகை மண்ணில் மண்டியிட்டு! இந்துவின் வணக்கம் அக்னிக்குள் - நதிகளின் நீரில் - காற்றில் கலந்து கோஷமிடும் வேதக் காற்றில்!

அபுல்பாசல்: பாதுஷாவின் விளக்கம் , அதி அற்புதம்!

அக்: மான்ஸிரேட் பாதிரியாரே! நானும் மனிதன்தானே? நான் ஏன் சூரியனை வணங்கக் கூடாது? சந்திரனையும் வணங்குவேன்! நட்சத்திரங்களையும் வணங்குவேன்! மண்ணையும் வணங்குவேன்! விண்ணையும் வணங்குவேன்! அக்னியையும் வணங்குவேன்! ஆறு, கடலையும் வணங்குவேன்! ஆகாயக் காற்றையும் வணங்குவேன்!

மான்ஸிரேட்: எங்கள் மதத்தவர் வழிபடும் ஏகபெருமானைப் பற்றிய பாதுஷாவின் கருத்தை, நாங்கள் தெரிந்து கொள்ளலாமா?

அக்: இஸ்லாமியமே ஏகபெருமானை ஈசாநபி என்று ஒத்துக் கொண்டிருக்கும் போது - இரண்டாவது கருத்தாக நான் எதையும் சொல்ல விரும்பவில்லை ஏசுவின் போதனைகள் உலகம் உள்ளளவும் மனித குலத்திற்குப் பயன்படும். இதைத்தான் என்னால் விமர்சிக்க முடியும்.

மான்ஸி: சர்வசமய பொது நோக்குடைய பாதுஷா அவர்களிடம் சவால் விடுவதைப் போன்ற ஒரு விண்ணப்பத்தைக் கூற விருப்பப்படுகிறேன்.

அக்: அகமும், புறமும் ஒன்றான என்னிடம் எதை வேண்டு மானாலும் சொல்லுங்கள், பாதிரியாரே!

மான்ஸி: எங்கள் கிறிஸ்துவ மதக் கொள்கையில் மனம் ஈடுபட்டு உங்கள் குடும்பத்தில் உள்ள யாராவது கிறிஸ்தவராக மாற விருப்பப்பட்டால்- உங்கள் தீர்ப்பு எதுவாக இருக்கும் பாதுஷா?

அக்: எனக்கு உலகம்தான் குடும்பம்! ஆகவே உலகத்திற்கு வழங்கப்படும் நீதிதான், என் குடும்பத்திற்கும்! யார் வேண்டு மானாலும் உங்கள் மதத்தைத் தழுவ நான் தடையாக இருக்க மாட்டேன். வேண்டுமானால்...மகன் மூராதை.... சபைக்கு வரச் சொல்லுங்கள், தோடர்மால்! (மூராது சபைக்கு வருகிறான்)

அக்: மகனே மூராது! இவர் கிறிஸ்தவமதத்தை - சேர்ந்த பாதிரியார், மான்ஸிரேட் கோவாவிலிருந்து நம் சபைக்கு வந்திருக்கிறார். நீதான்- மத, மார்க்க தத்துவ விசாரணைகளில் ஆழ்ந்த ஈடுபாடு கொண்டவனாயிற்றே? நீ உடனே இவருடன் சென்று கிறிஸ்தவ மத போதனைகளைத் தெரிந்து கொள். பிறகு நீயாக விருப்பப்பட்டால் நீ கிறிஸ்தவனாக மதமாற்றமாவதில் எனக்கு ஆட்சேபணையே இல்லை.

மான்ஸிரேட்: (கைதட்டி) சபாஷ்! சபாஷ்! (எழுந்து நின்று) பாதுஷா! உங்கள் பெருந்தன்மையை அளக்கும் கருவியே இந்த உலகில் இல்லை! நீங்கள் மனித நேய மலையாகத் தோற்றமளித்து விட்டீர்கள். உங்கள் உத்தரவுடனேயே, மூராதை எங்களுடன் கோவாவிற்கு அழைத்துச் செல்கின்றோம்.

அக்: அப்படியே ஆகட்டும்!

தோடர்: சபையோர்களே! இன்று இத்துடன் நம் பாதுஷா அவர்களின் சக்ரவர்த்தி தரிசனதர்பார் கலைகின்றது.

(அனைவரும் எழுந்து நிற்க - அக்பர் வெளியேறுகின்றார்)

காட்சி 13

(இடம்: கோகுலம், சூர்தாஸ் தன்னை மறந்த ஆனந்தத்தில் ஈடு பட்டவராய், தன்னை மறந்து உட்கார்ந்துள்ளார். வல்லபாச்சாரியார் வருகிறார்.)

வல்: மகாகவி சூர்தாஸ்-கற்பனை வானத்தில் தனக்குள்ளாகக் கண்ணனின் புகழைக் கவிதைப் பூக்களாக்கிக் கொண்டு தன்னை மறந்து ஈடுபட்டிருக்கிறார் என்று நினைக்கிறேன்.

சூர்: யார்? குருமகான் ஸ்வாமிகளின் குரலல்லவா கேட்கிறது? குருதேவா! உங்கள் பாத தாமரைகளுக்கு இந்தக் குருடனின் நமஸ்காரங்கள்!

ஸ்வாமி! சில சந்தேகங்களைக் கேட்டுத் தெரிந்து கொள்ள உங்களிடம் வரலாமென்று இருந்தேன்! கோகுலக் கண்ணனோ, குருநாதரையே என்னிடம் கொண்டு வந்து சேர்த்துவிட்டான்!

வல்: சூர்தாஸ்! உன் சந்தேகங்களைச் சொல்.

சூர்: குருதேவா! கண்ணன் பிறந்த ஜென்மபூமி மதுராபுரி! வளர்ந்து லீலாவிநோதங்களைச் செய்த இந்தக் கோகுலம்! ஆண்டு அரசோச்சிய துவாரகை! இவற்றிலுள்ள சில மகிமைகளைச் சொல்லுங்கள், சுவாமி!

(பின்னணிக் காட்சிகள் விரிகின்றன)

வல்: சொல்கிறேன்! கேள்! கிருஷ்ண ஜென்மபூமியாகிய மதுராபுரியில் கண்ணன் ருக்மணியுடன் ஏகபத்தினி சமேதன்!

இந்தக் கோகுலத்திலே ருக்மணியுடன் சத்தியபாமா சமேதன்! ஆட்சி நடத்திய துவாரகையில் எட்டு பட்ட மகிஷிகள்! மதுராபுரியில்-தான் ஜென்மமெடுப்பதற்குக் காரணமான தாய், தந்தையர்கள் தேவகிக்கும் வசுதேவருக்கும் தரிசனம்! இந்தக் கோகுலத்திலோ கண்ணன் மீதும் கூட பாசபந்தங்களைக் கடந்த வளர்ப்புத் தந்தை கர்மயோகி-நந்த கோபனுக்குத் தரிசனம்!

பாசமுடன் பாலூட்டி வளர்த்த யசோதைக்குக் கூட இங்கு தரிசனம் தரவில்லை! நந்தகோபனோடு-கிருஷ்ண சரிதத்தில் தற்பொழுது மகாகவியாக இடம் பெற்றுள்ள உனக்கும் இங்குதான் தரிசனம்! அதுவும் சமீபத்தில்!

சூர்: கிருஷ்ண தரிசனம் கிடைக்க மாதவம் என்ன செய்தேனோ, தெரியவில்லை!

வல்: துவாரகையிலோ, தங்கை முறை கொண்ட திரௌபதிக்குத் தரிசனம்! கிருஷ்ணனின் தரிசனங்கள் முழுவதுமே தன்னிடமும் கூட நெருங்கிப் பழகாத பாசபந்தங்களைக் கடந்த மனோபக்குவம் கொண்ட கர்மயோகிகளுக்குத் தான் கிடைத்தன! இத்தகைய யோக மாயை தான், நம் கோகுலக் கண்ணன்!

சூர்தாஸ்: கிருஷ்ணா! சேவை தந்த உன் திருவடிகளுக்கு நான் அடிமை!

வல்: மதுராபுரியில் கண்ணன் பிறந்த சிறைச்சாலையும்-துவாரகையில் கண்ணன் வைகுண்டம் செல்லு முன்பு தங்கிய அரச மரமும் இருக்கின்றன!

தாயின் வயிற்றில் நாம் இருப்பதும் சிறை! பிறகு வளர்ந்து வாழ்ந்து நடமாடும் இவ்வுலகமும் ஒரு சிறை! இச்சிறைச் சாலைகளையெல்லாம் கடந்த பிறகே, கண்ணனின் பாததாமரையை அடையமுடியுமென்று தான் கிருஷ்ணஜென்ம பூமியில் கண்ணன்

அவதரித்தது-சிறைக்குள்! மரங்களில் நான் அரசமரம்! -என்பது கண்ணனின் கனியமுதவாக்கு! அதன்படியே அரச மரத்தடியில் துவாரகையில் கிருஷ்ணன் வைகுண்ட பயணத்தைத் தொடர்ந்தார். பரமபதம் செல்லும் துவாரமாக துவாரகையும் அமைந்துவிட்டது. அதே அரசமரத்தடியில் வாழ்ந்து வந்த உன்னையும் இங்கே அழைத்துக் கொண்டு வந்து, மகாகவியாக்கி விட்டான் அந்த மாயவன்!

சூர்: கிருஷ்ணசரிதத்தில் -மகாப்பிரபு கண்ணனுக்கு எத்தனை மனைவியர்கள், குருநாதா?

வல்: ஆதிமூலநாயகனுக்கு, நாயகியர்களுக்கா பஞ்சம்? பாற்கடலில் பத்தினி ஒருத்தி! வராகவதாரத்திற்குப் பூதேவி! நரசிம்மத்திற்கு ஆதி லெட்சுமி! பரமபதத்திலோ மூவர்! வாமன, பரசுராம அவதாரங்களில் பத்தினியே இல்லை! இராமாவதாரத்தில் ஏகபத்தினி! கிருஷ்ணாவதாரத்திலோ ருக்மணி, சத்தியபாமா, ஜாம்பவதி, காளிந்தி, மித்திரவிந்தை, பத்திரை, லக்ஷ்மணை-இவர்கள் மட்டுமா? நரகாசுரனை சிறைவைத்திருந்த பதினாறாயிரம் தேவியர்! நப்பின்னை! நரகாசுரனையின் புத்திரிகள் பதின்மர்! பகதத்தன் பட்டணத்தில் சிறைமீட்ட பதினொரு ஆயிரத்து அறுநூறு அரச கன்னிகைகள்! இவர்கள் மட்டுமா நம்கிருஷ்ணனின் தேவியர்கள்!? இதே கோகுலத்தில்-பிருந்தாவனத்தில் நம் நாயகன் கிருஷ்ணனோடு கொஞ்சிக் குலவி ஆடிப்பாடிக் களித்த கோபியர்கள் எல்லோரும் கூட, கண்ணனின் காதலில் உருகியவர்கள்தாம்! கோபியர்களிலும் ராதை கண்ணனுக்குள்ளேயே கரைந்து-கண்ணனோடு கண்ணனானவள்! ராதை, கண்ணன் தனக்கே என்று கண்ணனுக்குள் தன் ஜீவனை சமாதி செய்து விட்டு நடமாடியவள்! கண்ணனுக்குப் ராதை என்றால் அவ்வளவு ஆசை! கண்ணன்-ராதையின் காதலின் ஆழம்-ஆத்ம பரமாத்தும பாவத்தை எட்டும் வழிகாட்டுவது (ராதாகிருஷ்ண லீலைகளின் படங்கள், சிலைகள் மாறி மாறி

விரிகின்றன) பரமாத்ம பிரேமையின் மறுபெயர்தான் - ராதை! நாமெல்லாம் கூட அந்த ஆதிமூல பரமபுருஷன் கிருஷ்ணனுக்கு நாயகியர்களே! நாமேல்லாம் ராதையாக மாறிக் காதல் செய்தால்தான் -கண்ணன் என்ற மகாப் பிரபுவைக் கலக்க முடியும்!

சூர்: ஸ்வாமி! ராதையின் காதல் வழிக்கு நாம் முக்கியத்துவம் தர வேண்டிய காரணத்தை விளக்கமாகச் சொல்லுங்கள், ஸ்வாமி!

வல்: சூர்தாஸ்! ராதையின் காதல் வழியில் ஆசாரமில்லை, அனுஷ்டானமில்லை, பூஜை புனஷ்காரம் இல்லை! ஜாதிமத பேதமில்லை! சாஸ்திரிய சம்பிரதாயமும் இல்லை! கிருஷ்ணனோடு கலக்கக் கூடிய பிரேமைதான் முக்கியம்! சூர்தாஸ்! ராதையைப் பற்றிய சில சத்திய உண்மைகளைத் தெரிந்து கொள்!

கிருஷ்ணனை மணந்தவர்கள், காதலித்தவர்கள்-அனைவருமே எம்பெருமான் நாராயணனுடன் சங்கமம் ஆகிவிட்டார்கள். ஆனால் ராதை இன்னும் சங்கமமாகாமல் இதே லோகத்தில்தான் கண்ணனின் பிரேமையாகத் தவழ்ந்து கொண்டிருக்கிறாள்! ராதை-பக்திக்கு வழிகாட்டியாய் வாழ்கிறாள்!

சூர்: ஸ்வாமி! ராதை இன்னும் இதே உலகத்தில் வாழ்வதாக எப்படிச் சொல்கிறீர்கள், ஸ்வாமி!

வல்; சூர்தாஸ்! நீ கேட்ட தெய்வரகஸ்யத்தைச் சொல்கிறேன், கேள், அந்தக் காலத்தில் ராதையோடு கண்ணன் கூடிக்குலாவிய பொழுது-கங்கையும், விரஜையும் வேறு கண்ணன் மீது மோகம் கொண்டார்கள். கங்கையோ கண்ணனின் காலடியில் பிறந்த அவன் மகள்! விரஜையோ பரமபதத்தைச் சுற்றி ஓடும் மற்றொரு மகள்! இதைத் தெரிந்த ராதை மிகுந்த கோபத்திற்கு ஆளானாள். கிருஷ்ணன், கோபியர்கள் அனைவருக்குமே சொந்தமானவன்! கிருஷ்ணன் சோபை என்ற கோபியுடன் தனிமையில் கொஞ்சிக்

குலவிய பொழுது ராதை கோபம் கொண்டு சந்திர மண்டலத்தை அடைந்தாள்!

பிரமை என்ற கோபியுடன் கண்ணன் கூடியபொழுது-ராதை மேலும் கோபமடைந்து, ராதை ஒரே தேஜஸ் மயமான பிரகாசமாகி சூரியனுக்குள் மறைந்து-சூரியனின் ஒரு கிரணமாக மாறினாள்!

சாந்தி என்ற கோபியுடன் கண்ணன் கூடி மகிழ்ந்த பொழுது-ராதை, கோபதாபத்துடன் மோகமும் பெற்று-ஆற்றாமையும் அழுகையும் கொண்ட கோலத்துடன் கண்ணனுக்குள்ளேயே கரைந்து ஒன்றி விட்டாள்!

கண்ணனோ, ராதையைத் தனக்குள் ஜீரணித்துக் கொண்ட நிலையிலேயே க்ஷமை என்ற கோபியைக் கூடிக் கொஞ்சிக் குலவினான்!

கண்ணனுக்கே ராதை! ராதைக்கே கண்ணன்! என்று இது வரையிலும் பிரேமை கொண்டிருந்த ராதைக்கு கண்ணனுடன் தானும் சேர்ந்து க்ஷமையைக் கூடியபொழுது-க்ஷமையின் இன்ப சுகத்தையும், கண்ணனின் பரமாத்ம சுகத்தையும் ஒரு சேர அனுபவித்தாள்! நாயகியின் சுகமும், பரமபுருஷனின் பரமாத்ம சுகமும் ராதைக்குப் புரிந்தது!

ராதையின் பொறாமை அகன்றது! தான் பெற்ற சுகத்தைக் கண்ணனிடம் பக்தி கெண்டவர்களும் அடையட்டும் என்ற நிலையில் கண்ணனுக்கே ராதை! கண்ணனுக்கே உலகம்! -என்ற ஞானம் பெற்றாள் ராதை! கண்ணனின் இன்பமெல்லாம் ராதைக்கே! பிரேமையே பக்தியாக கண்ணனைக் கலந்து பக்தர்கள் தரும்-கண்ணன் பெறும் இன்பமும் கூட ராதைக்கே! -என்ற மனோநிலைக்கு ஆளான ராதை, தன் பிரேமையில் சாந்தி பெற்று, பூமிக்குள்ளேயே மறைந்து கொண்டாள். நாமெல்லாம் கண்ணனை அடையும் பாதைக்கு வழி காட்டியவளே, ராதை தான்!

சூர்: ஸ்வாமி! 'கண்ணனுக்கே உலகம்' என்ற ராதையின் பக்திக்குள் 'உலகமெல்லாம் கண்ணன்!' என்ற எதிரொலி கேட்கிறதே ஸ்வாமி?

வல்: உண்மைதான் சூர்தாஸ்! ராதை ஒரு சாதாரண கோபி அல்ல! ராதை கண்ணனுக்குள் அடங்கிய ஒரு பக்தி ஞானவித்து! அதுமட்டுமல்ல - ஐந்து பிரகிருதிகளில் ராதையும் ஒருத்தி என்ற ரகஸ்யமும் உனக்குத் தெரியுமா?

சூர்: பிரகிருதியா? அப்படி என்றால்-எனக்குப் புரிய வில்லையே ஸ்வாமி!

வல்: சூர்தாஸ்! சிருஷ்டிப்புக்கு முதலானவைகளின் பெயர் தான், பிரகிருதிகள்! இவை-துர்க்கை, லக்ஷ்மி, சரஸ்வதி, சாவித்திரி, ராதை என்ற சக்திகள்.

(ஒவ்வொரு பிரகிருதியின் படமும் காட்டப்படுகிறது)

உலகத்தின் சகலசக்திகளின் ஆதிமூலசிருஷ்டிப்புப் பிரகிருதி-துர்க்கை !

உலக செல்வங்களின் ஆதிமூலசிருஷ்டிப்புப் பிரகிருதி-லக்ஷ்மி!

உலகத்திலுள்ள கல்வி, கலைகளின் ஆதிமூல சிருஷ்டிப்புப் பிரகிருதி-சரஸ்வதி!

நான்கு வேதங்கள், சாஸ்திரங்கள், பரதம், நான்கு யுகங்கள் ஆகியவற்றின் ஆதிமூலசிருஷ்டிப்புப் பிரகிருதி-சாவித்திரி!

இவற்றைப் போலவே-பரம்பொருளோடு உயிரினங்கள், சங்கமமாகும் காதல் பிரேமையின் ஆதிமூலசிருஷ்டிப்புப் பிரகிருதி ராதை!

சூர்தாஸ்! (கண்ணன் ராதையை பூஜை செய்வதும், பிறகு கோபியர்கள் ராதையை பூஜிப்பதும் காட்சிகளாக விரிகின்றன.)

ஒரு முறை கோலோகத்தில் ராஜமண்டலத்தில் கார்த்திகை மாத பூரணையில் மகாப்பிரபு கிருஷ்ணனே, ராதையை பூஜித்தான்! பிறகு கோபியர்களும் ராதையை பூஜித்து வணங்கினார்கள். கண்ணனுக்கே எல்லாம்! என்ற பக்தி அர்ப்பண சரணாகதித்துவ காதல் பிரேமையே ராதையின் பக்தி நெறி!

ஒரு முறை கண்ணனுக்காகப் பிறந்த துளஸியையே சபித்தவள், ராதை!

(காட்சி விரிகிறது. துளஸி சென்று கொண்டிருக்கிறாள். சுகர்மன் என்ற இடையன் துளஸியைப் பின் தொடர்ந்து வந்து)

சுகர்: துளஸி! நான் உன்னைக் காதலிக்கிறேன்!

துளஸி: சுகர்மா! நான் கண்ணனை அடையவே பிறந்தவள்! என்னைப்பின் தொடராதே! (இருவர் உரையாடலையும் கேட்டுக் கொண்டே வருகிறாள், ராதை)

ராதை: (கோபத்துடன் இருவரையும் சபிக்கிறாள்)

துளஸி!, நீ கண்ணனுக்காகவே அவதரித்தவள்! சுகர்மா! நீ துளஸியை மனதால் காதலிக்க நினைத்தது கூடப்பெரும் பாவம்! கண்ணனுக்குரிமையாக வேண்டியவள், சுகர்மாவின் கண்களில் கவர்ச்சிகரமாகத் தோன்றியது துளஸி செய்த பாவம்!

கண்ணனின் பிரேமையைக் களவாடலாம்! ஆனால் கண்ணனுக்குரிமையானவைகளைக் களவாடக்கூடாது!களவாட அனுமதிக்கவும் கூடாது! எனவே துளஸியும், சுகர்மாவும் பெரும் பாவத்திற்கு ஆளாகி விட்டார்கள்!

கர்மாவால் மோகிப்பட்ட துளஸியின் சரீரம் பாவத்திற்கு ஆளாகிவிட்டது! பரிசுத்தமற்ற உடலில், கண்ணனின் ஸ்பரிசம் படக்கூடாது!

எனவே-துளஸி! சுகர்மா! உங்கள் இருவரையும் மீண்டும் பிறவி எடுக்குமாறு சபிக்கிறேன்!

(காட்சி முடிகிறது)

சூர்: ஆஹா! ராதையின் பிரேமைக்கு ஈடான கிருஷ்ண பக்தி உலகத்திலேயே இல்லை. சுவாமி!

வல்: சூர்தாஸ்! ராதாகிருஷ்ண பக்தி மார்க்கம் எவ்வளவோ காலத்திற்கு முன்பே கண்டுபிடிக்கப்பட்டு கடைப் பிடிக்கப்பட்டு வருகின்றது.

மகான் ஜயதேவர், வித்யாபதி, சண்டிதாசர், மாதவேந்திரபுரி, கமலாக்ஷபட்டாச்சாரியார், ஈஸ்வரபுரி நித்யானந்தர் போன்ற ஞானிகள் ராதாகிருஷ்ண பக்தி மார்க்கத்தை வளர்த்தார்கள். இவர்களின் பட்டியலில் இறுதியாக இப்பக்தி மார்க்கத்தில் மிகத் தீவிரமாக ஈடுபாடு கொண்டு-ராதாகிருஷ்ண பிரேமைக்குள் தன்னையே அடிக்கடி சமாதியாக்கிக் கொண்டிருந்த மகாஞானி சைதன்ய மகாப்பிரபு, எண்ணற்ற சோதனைகளை சந்தித்தோடு அர்த்த மற்ற ஜாதி பேதங்களையும், ஆண் பெண் என்ற பேதத்தையும் கூட உடைத்தெறிந்து ஸ்ரீ கிருஷ்ண பக்தியை நிலைநாட்டினார்!

(சைதன்யரின் படம் காட்டப்படுதல்)

சைதன்யப் பிரபு, கிருஷ்ணன் ஒருவனே நாயகன் என்றும் எல்லா பக்தர்களுமே கோபியர்கள் என்றும், பஜனைகளைச் செய்ததோடு, ராதையின் பிரேமைக்குள் மற்றொரு ராதையாக மாறிய மகான்! பெண்களைக் கண்டால், தனக்குள்ளாக

ஆண்மையின் உணர்வு தலைதூக்கி பக்தியைப் பாழாக்கி விடுமோ என்று-பெண்களையே நெருங்கவிடாமல் - பெண்ணுக்கும் மேலான பெண் நாயகியாகிய ஒரு கோபியாக மாறியவர் சைதன்ய பிரபு!

சூர்: ஸ்வாமி! எனக்குள்ளாக ஒரு சந்தேகம்...

வல்: சொல், சூர்தாஸ் !

சூர்: குருதேவா! மதுராபுரியிலும், இங்குள்ள கோகுலத்திலும், துவாரகையிலும் உள்ள கோவில்களில் பக்தி ஞான பிரேமையின் சொரூபமான ராதையின் வடிவம் பிரதிஷ்டை செய்யப் பட வில்லையே ஸ்வாமி!

வல்: சூர்தாஸ்! ராதைக்கு வடிவமேது? கண்ணன்தான் ராதை! ராதைதான், கண்ணன்! கிருஷ்ண கானங்களுக்குள் பரம பாகவத பக்தர்களின் சரீரங்களுக்குள் கண்ணனோடு இணைந்து கீத நாதமாக நர்த்தனம் ஆடுபவளல்லவா, ராதை? பக்தர்களின் பஜனாவளிகளில் பிரதிஷ்டை ஆன ராதைக்குக் கோவிலுக்குள் தனி பிரதிஷ்டை - எதற்கு சூர்தாஸ்?

சூர்: தங்கள் வாக்கு சத்திய மொழி, குருதேவா! இக்கோகுலத்தில் கிருஷ்ண தரிசனத்தில் ருக்மணியையும், சத்தியபாமாவையும் தான்-நான் பார்த்தேன். ராதையையும் நான் பார்க்க வேண்டாமா? ஸ்வாமி?

வல்: சூர்தாஸ்! நீ ஒரு மகாகவி! நீ நினைத்தால் இதே இடத்தில் இப்பொழுதே ராதையைப் பார்க்கலாமே? ருக்மணிபாமா சமேதனாக உனக்கு தரிசனம் தந்தான் நவமோகனகிருஷ்ணன்! அவனருகில் உள்ள பாமாவை நீயே உன் ஞானத்தால் அகற்றி விட்டு, ராதையை நிறுத்திப் பாடு! உன் பாடலில் ராதை தவழ்வாள்!நீ ஞானக் கண்ணால் தரிசி! உன் பாடலுக்குள்-நான்

ராதையை என் காதல் சேவிக்கிறேன்!

சூர்: ராதையை நாம் பார்க்க வேண்டுமென்பதற்காக-நான் கோகுலக் கண்ணனிடமிருந்து பாமாவைப் பிரிக்கலாமா, ஸ்வாமி?

வல்: சூர்தாஸ்! தாராளமாகப் பிரிக்கலாம்! தற்பொழுது பாமா கண்ணனோடு இல்லை! இல்லாத பாமாவை நீயே ஒருநாள், இதே பிறவியில் நேருக்கு நேராகப் பார்க்கப் போகிறாய்! மகாகவி! உன் பூர்வ ஜென்ம ரகஸ்யமே எனக்குத் தெரியும்!-நம் கோபாலனின் சரிதத்தில் நீயும் இடம் பெற்றவன்! போகப்போக-காலம் உன் பூர்வ கதையை உனக்குச் சொல்லும்!

தற்பொழுது பாமாவின் இடத்தில் ராதையை வைத்து ஜீவ கவிதை ஒன்று பாடு!

## காட்சி 14

சூர்: (பாடத் துவங்குகின்றார். பாடலுக்குரிய காட்சிகள் விரிகின்றன. கண்ணனின் மதி மயக்கும் குழலோசையுடன், கலை மகளின் வீணாகானம், தேவலோக மாதரின் நாட்டிய சலங்கை ஒலி, விநாயகரின் ஜால்ரா இசை-இசைக்கு ஏற்ப தானாகவே பின்னணியாக எழுகின்றன.)

ஆண் குரல்

கண்ணா! நீ ஊதும்
குழலமுத கானமழை
யாருக்குச் சொந்தமடா? கண்ணா!
ராதைக்கே சொந்தமடா! ராதைக்கே சொந்தம்!
புல்லாங்குழலே கண்ணன் என்றால் -
பொங்கி எழும் கானவெள்ளம், ராதையடா!ராதை!
கான வெள்ளம் கண்ணா! நீ என்றால்-கான மதில் நடமாடும்

இசையின் ஸ்வரம் ஏழும் - ராதையடா! ராதை!

ராதே கிருஷ்ணா ! ராதைக்குள் கிருஷ்ணா !

ராதைக்கே கண்ணன் !ராதே கிருஷ்ணா! ராதையில் கண்ணன்!

கண்ணனில் ராதை! கண்ணனுக்கே ராதை ! கண்ணா! ராதா!

கோவிந்தா! கோபாலா! கோகுலம் ஒர்கடல் ! கோபிகள் முத்து !

ராதே கிருஷ்ணா! ராதையாம் முத்து வலம்புரி முத்து !
ராதைக்குச் சொத்தே கண்ணன் ! சுகமெலாம் கண்ணன்!
சொத்தே! சுகமே! சுந்தரா! சியாமளா!
கண்ணா ! உன்னைக் காணாத ராதைதன் கண்எலாம்
கொதி நீரால் ஆனகுளம் ! - கோபியர் கிருஷ்ணா !
தாமோதரா! கண்ணா! உன் தரிசனம் தானே-
ராதையின் கண்ணுள் குளுமை, குளுமை!
நீல மேக அலைகடலே ! சியாமளா !நிர்மலா!
நீலக்கடலுள் நீந்திடும் மீனடா, ராதை ! மீன்விழி ராதை!
கண்ணா! நீ பிரிந்தால் -கார்மேகா! நீமறைந்தால்-
ராதைக்கு உயிர் எதற்கு - பிரபு?உயிர் எதற்கு பிரபு?
கோபம் தான் ராதைக்கு ! கோபாலா! உன் மீது-
கோபத்திலும், கோடி முத்தம் கண்ணனுக்கு ! கோடானு
கோடி முத்தம் கண்ணனுக்கு!
பால கோபாலனிடம், ராதைக்கு
பயமில்லை, கண்ணா! பயமில்லை கண்ணா!
பாசமலர் ராதை! பக்திப் பூ, ராதை ! பா மாலை, பூ மாலை
எல்லாமே ராதை!
உரிமையுடன் திட்டுவாள் ராதை! ஓடி விரட்டிப்
பிடிப்பவளும் ராதை!
உன்னையும் அடிப்பாள் - பிரபு ! அடித்ததற்கு மேலாக
அணைப்பவளும் ராதை!

உனக்குள் தன்னைத் தந்தவள், ராதை ! உன் நினைவெலாம்,
ராதை!
தனக்குள் உன்னைக் கொண்டவள் - ராதை ! தானே,
கண்ணன் ஆனவள் ராதை!
பிரியாதே பிரபு! -பிரியாதே பிரபு ! பெண்மையால்
பிரதிஷ்டை - நீதான், பிரபு!
கிருஷ்ணா ! உனை ஆட்டிப் படைப்பவள் யார்? அதே
நேரம்-
அடிமையாய்க் கிடப்பவள் யார்? அடியாருக்கு அடியாள்
யார், நீ பிரபு?
இரண்டுமே தானானாள் ! உனக்குள் ஒன்றானாள்!
இரண்டில் ஒன்று! இரண்டுமே ஒன்று! எல்லாமே ஒன்று!
ராதைதான் கிருஷ்ணா! ராதே கிருஷ்ணா ! ரம்ய கிருஷ்ணா !
ராதே கிருஷ்ணா!
கோபிராதை கொஞ்சி மகிழும் குழந்தை கிருஷ்ணா!
கோகுல கிருஷ்ணா!

அதோ...அதோ...அதோ...

(கண்ணனின் இருபுறமும் ராதையும் ருக்மணியும் நிற்கும் காட்சி, சூர்தாஸின் மனக் கண்ணில் தெரிகிறது.)

பெண்குரல்

(கைகளைத் தட்டிக் குதித்துக் கொண்டே பாடுகிறார்)
ராதே கிருஷ்ணா ! ருக்மணி கிருஷ்ணா!
!கிருஷ்ணா!கிருஷ்ணா! கிருஷ்ணா! கிருஷ்ணா!
ராதே கிருஷ்ணா ! ருக்மணி கிருஷ்ணா ! கிருஷ்ணா!
கிருஷ்ணா! கிருஷ்ணா! கிருஷ்ணா!
கண்ணா !உடலினுள், ராதை ஒரு பாதி ! மீதியே- ருக்மணி !
இரண்டுடல்கள் உன்னுடலில் சங்கமித்த கோலம் -
சாந்த காந்த ஸ்வரூபா ! சியாமளா! ஜாதிப் பூ இரண்டு !
கோபமில்லை ! தாபமில்லை ! கொஞ்சிக்குலவுதே!

கிருஷ்ணா!

தாயொருத்தி பெற்ற சோதரியோ - ராதா ருக்மணி!
ஆஹா! அழகுக்கழகு ! அற்புதம் ! அற்புதம்! அதி அற்புதம்!
குருடன் நான் பெற்ற சேவை -
ஒரு கோடி விழிகளில் அடங்காது-கிருஷ்ணா !
பார்வையிலாக் கண்ணில் பார்த்தவனும் கிரிதாரி !
தெரியாத கண்ணில் தெரிந்த திவ்ய தரிசனமும், கிரிதாரி !
பாத சேவையின் சங்கம முக்திக்குப்
பாடிப்பாடி ஏங்குகிறேன் - பிரபு !
பாட்டின் கவித்வ சக்தியும் நீதான் - கிருஷ்ணா !
ராதே கிருஷ்ணா ! ருக்மணி கிருஷ்ணா !கிருஷ்ணா!
கிருஷ்ணா! கிருஷ்ணா! கிருஷ்ணா!
ராதே கிருஷ்ணா ! ருக்மணி கிருஷ்ணா ! கிருஷ்ணா!
கிருஷ்ணா! கிருஷ்ணா! கிருஷ்ணா!

## காட்சி 15

(இருண்ட வானத்தின் இருள் அகல அகல- பறவைகள் பறக்கின்றன. சேவல் கூவுகின்றது. காகங்கள் கரைகின்றன. ராஜ மாளிகைக்குள் அக்பர் பாதுஷா ராஜகட்டிலில் படுத்து உறங்கிக் கொண்டுள்ளார். பக்கத்தில் இருபெண்கள் பெரிய கவரியை வீசிக் கொண்டிருக்கின்றனர்.

அவர் உறங்கும் அறையின் வெளியில், பாடகர்கள் சாந்த்கானும், சூரஜ்கானும் மெதுவாக பேசிக் கொண்டிருக்கின்றார்கள்)

சாந்த்: சூரஜ்கான் ! டான்சேன் எவ்வளவு பெரிய மகாகவி?

சூரஜ்: பாதுஷாவின் ராஜசபையில் நவரத்தினங்கள் என்று கௌரவிக்கப்பட்டவர்களுள் ஒருவரல்லவா, அந்த மகா மேதை ?

சாந்த்: நாமெல்லாம் கவிஞர்கள்,ஏராளவுக்குப் பாடக் கூடிய

வர்கள்—ஆனால் டான்சேனோ, மகா கவிஞர்! அதே சமயத்தில் அதி அற்புதமான பாடகர்!

சூரஜ்: டான்சேன் பாடினால்-அவர் பாட்டைக் கேட்டு மதி மயங்கிப் பறவைகளும், மிருகங்களுமல்லவா அப்படியே அசையாமல் நின்று விடும்?

சாந்த்: ஒரு முறை பாதுஷாவின் பட்டத்து யானைக்கு மதம் பிடித்துப் பாகர்களால் கூட அடக்க முடியவில்லை. ஆனால் மகாகவி டான்சேன் தன் இன்னிசையை எழுப்பி, மதங்கொண்ட யானையையே தன் சங்கீதத்தால் அடக்கி விட்டாரே? பாகருக்கு அடங்காததை, பாடகர் அடக்கி விட்டார்!

சூரஜ்: இத்தகைய மகாகவி டான்சேனை, பாதுஷா சபையை விட்டு வெளியேற்றிவிட்டாரே?

சாந்த்: ஆனாலும் டான்சேனைப் பார்க்காமல் சில நாட் களாகப் பாதுஷா தனக்குள்ளாகத் தவிக்கும் தவிப்பு நமக்குப் புரியாமல் இல்லை!

சூரஜ்: மகாகவி டான்சேன் இல்லாத ராஜசபையில் களையே இல்லை!

சாந்த்: பாதுஷா, டான்சேனை சபையை விட்டு விரட்டுவதற்கு ஆதிகாரணமே நாமாகத் தானே ஆகிவிட்டோம்?

(அடுத்த காட்சி விரிகின்றது)

(அக்பரிடம் சாந்த்கானும், சூரஜ்கானும் வருகின்றனர்)

சாந்த்: சலாம் பாதுஷா, சலாம்!

அக்: கவிஞர்கள் இருவருக்கும் சலாம்! ஏதோ அவசரமான செய்தியோடு வந்திருப்பதாகத் தெரிகிறது. அப்படித்தானே ?

சூரஜ்: ஆம் பாதுஷா! நாமெல்லாம் மதங்களைக் கடந்தவர்கள்! கலைகளைப் போற்றிக் கண்களாகப் பாதுகாத்து வருகின்றவர்கள். எம்மதமும் சம்மதம் என்று பண்டித திவாகராகசாஸ்திரங்களைக் கரைத்துக் குடித்து நான் சூரஜ்கானாக மாறிவிட்டேன். அதைப் போலவே கவிஞர் சோமநாத்தும் சாந்த்கானாக மாறிவிட்டார். எங்கள் பட்டியலில், எங்களையெல்லாம் விட சர்வ சமய நோக்கத் தோடு ஆதிமூலப் பரம்பொருளை அறிந்து கொண்ட சூழ்நிலையில் வளர்ந்து மகாகவியாக மாறியவரல்லவா டான்சேன்!

சாந்த்: ஆம் பாதுஷா! இஸ்லாமிய மகாகவி மகான் முகமது காஸின் ஆசிகளோடு, இந்து மதத்தைச் சேர்ந்த முகண்ட மிஸ்ராவின் மகனாகப் பிறந்த டான்சேன், இயற்கையில் மறைந் துள்ள கடவுளை இசைமயமாகக் கொண்டு, பிருந்தா வனத்தில் வாழ்ந்த மகான் ஹரிதாசரை ஆதிகுருவாகக் கொண்டு, பத்து வருஷங்கள் ஏழு இசைகளின் ராகங்களையும் கற்றார். பிறகு, தான் பிறக்க ஆதி காரணமான மகான் முகமது காஸியிடம் மூன்று வருஷங்கள் பயிற்சி பெற்ற ஹரிதாசரிடம் கற்ற சங்கீதப் புலமையை மெருகேற்றிக் கொண்டு, முகமதுகாஸியின் செல்வத்திற்கும், ஞானத்திற்கும், கலைகளுக்கும் வாரிசாகி விட்டார்.

சூரஜ்: அந்தக் காலத்திலேயே-குவாலியரை அடுத்த ரேவாவின் ராமச்சந்திரரே-டான்சேனின் இசையில் மயங்கி ஆயிரம்தங்க மோகராக்களைப் பரிசாக வழங்கியதோடு ஆஸ்தான கவிஞராகவும் ஆக்கிக் கொண்டு விட்டாரே-பாதுஷா ?

அக்: ஆம்! உணர்ச்சிகொண்ட ஜீவராசிகளுக்கெல்லாம்- இசைகான இன்பத்தில் தவழும் சாந்தியில் கடவுள் வாழும் அற்புதத்தைக் காட்டிய மாயச் சித்தரல்லவா, மகாகவி டான்சேன்?

அதனால்தான்-படுக்கும்பொழுதெல்லாம் அவர் பாடல்களைக் கேட்டுக் கொண்டே என் ராஜ பாரம்பரிய கவலைகளை மறந்த

நிம்மதியாகத் தூங்குகிறேன். அதைப் போலவே தூக்கம் கலைந்து எழும் பொழுதும், அதிகாலையில் டான்சேனின் இசை இன்பத்தைக் கேட்டுக் கொண்டே சாந்தியடைந்த நெஞ்சத்துடன் கண் விழிக்கிறேன்.

சூரஜ்: இப்படிப்பட்ட பெருமைகளைக் கொண்ட நம் டான்சேன், தற்பொழுது பொருளாசைக்கு அடிமையாகிக் கிடக்கிறார், பாதுஷா !

அக்: நீங்கள் சொல்வது—

சாந்த்: உண்மைதான் பாதுஷா! டான்சேனின் மகாகவித்துவ மேன்மைக்காகத் தாங்கள் விலைமதிப்பற்ற வைரங்கள் பதித்த பதக்கத்தைப் பரிசளித்தீர்கள் அல்லவா?

அக்: ஆம்! அதற்கென்ன?

சூரஜ்: அந்த வைரப்பதக்கத்தை ஒரு வியாபாரியிடம் சொல்ல முடியாத அவ்வளவு விலைக்கு டான்சேன் விற்றிருக்கிறார் பாதுஷா!

சாந்த்: என்னதான் மகாகவியானாலும் - தாங்கள் தந்த வைரப் பதக்கத்தை விற்றது - தங்களையே விற்றதைப் போல் ஆகிறது-ஷா இன் ஷா!

அக்: என் கழுத்திலிருந்த அந்தப் பதக்கத்தில் உள்ள வைரங்கள், என் தனி உடைமை அல்ல! அவ்வைரங்கள் இந்த சாம்ராஜ்யத்தின் வழி வழிச் சொத்து! அதைப் போலவே மகாகவியும் இந்த சாம்ராஜ்யத்தின் சொத்து! சொத்தோடு சொத்து சேர்வதில் உள்ள நியாயத்தை நினைத்தே, டான்சேனுக்கு அந்த வைரப் பதக்கத்தைப் பரிசளித்தேன்.

சாந்த்: இந்தப் பதக்கத்தை - பாதுஷாவின் பாசத்தை விற்கக் கூடிய அளவிற்கு டான்சேனுக்கு வறுமையா வந்து விட்டது?

சூரஜ்: தான் என்ற புகழ்போதை, டான்சேனின் தலையில் ஏறி இருக்க வேண்டும் அல்லது பொருளாசை அவரை அடிமையாக்கி இருக்க வேண்டும்.

அக்: (மௌனமாக சிறிது இருந்து) உண்மையைத் தெரிந்து கொண்டு டான்சேனின் போக்கிற்கு ஒரு முற்றுப் புள்ளி வைக்கிறேன்!

(கைதட்ட காவலர்கள் வருதல்) ஆஸ்தான மகாகவி டான்சேனை அழைத்து வாருங்கள்!

(காவலர்கள் சென்று, டான்சேனுடன் வருகின்றனர். டான்சேனின் கழுத்தில் வைரப் பதக்கம் இல்லாததை, அக்பர் ஆழ்ந்து கவனிக்கிறார்)

டான்: பாதுஷா அவர்களுக்குப் பல்லாண்டு பல்லாண்டு கூறுகின்றேன்! சலாம், பாதுஷா!

அக்: டான்சேன்! என் கழுத்தில் அணிந்திருந்த எங்கள் வம்சாவளிச் சொத்தும் விலை மதிப்பற்றதுமாகிய வைரப் பதக்கத்தைத் தங்களின் இசைப் புலமையில் மேதா விலாசத்திற்காகத் தங்கள் கழுத்தில் பரிசாக வழங்கினேன் என்பது நினைவிருக்கிறதா?

டான்: ஆம், பாதுஷா!

அக்: எங்கே அந்த வைரப் பதக்கம்?

டான்: (தன் கழுத்தைப் பார்த்து விட்டு தடுமாறியபடி) தற்பொழுது என் கழுத்தில் காணோமே?

அக்: என்ன கவிஞரே, ஒரே அடியாக சமாளிக்கிறீர்? உங்கள் கழுத்தில் வைரப் பதக்கம் இல்லாததைத் தற்பொழுது தான் கவனிக்கின்றீரா?

டான்: ஆம் பாதுஷா! ஆம். நீங்கள் நினைவு படுத்திய பிறகு தற்பொழுது தான் கவனித்தேன்.

அக்: ஒரு வேளை உங்கள் கவிதைகள், நீங்கள் பாடும் பொழுது காற்றில் கலப்பதைப் போல–இந்தப் பதக்கமும் காற்றோடு காற்றாகக் கரைந்து விட்டதோ?

டான்: பாதுஷா அவர்கள், பதக்கத்தைப் பரிசளித்தது உண்மை தற்பொழுது அந்தப் பதக்கம் என் கழுத்தில் இல்லை என்பதும் உண்மை! இரண்டு உண்மைகள் ஒரே மனிதனிடம் எப்படி மாறுபட்டு நிற்கின்றன என்பது தான் எனக்குப் புரியவில்லை. பொய் என்ற முடிவு கூட சில சமயங்களில் உண்மை ஆகலாம்! ஆனால் உண்மை எப்பொழுதும் பொய்யாகவே ஆகாது! உண்மை, உண்மைதான்! சத்தியம், சத்தியம்தான்! அப்படி இருக்க என் கழுத்தில் இருந்த பதக்கம் எப்படி மறைந்தது என்றே எனக்குப் புரியவில்லையே பாதுஷா ?

அக்: டான்சேன்! உங்கள் வாதமும், தத்துவ விளக்கமும் எனக்குத் தேவை இல்லாதவை! நான் தந்த பதக்கத்தில் உள்ள வைரங்கள் வைரங்கள் அல்ல! அவை இந்த பாதுஷா உங்கள் பாடல் களுக்கு அடிமைப்பட்ட பாசத்தின் ராஜ வம்ஸ சாசன முத்திரை! அந்த வைரப்பதக்கமில்லாமல் நீங்கள் ராஜசபைக்குள் நுழையக்கூடாது என்று உத்தரவு பிறப்பிக்கிறேன்! நீங்கள் போகலாம்! (டான்சேன் சிந்தனையுடன் அகல்கிறார்)

(காட்சி முடிகிறது)

சாந்த்: சூரஜ்கான்! தற்பொழுது டான்சேன் எங்கே சென்றார் என்றே தெரியவில்லையே!

பாதுஷாவைப் பாடித்துயில் எழுப்பும் டான்சேனின் பணி, நம் மீது விழுந்து விட்டது.

சூரஜ்: எவ்வளவு அற்புதமாக நாம் பாடினாலும் கூட-டான்சேன் தன் பாடலால் பாதுஷாவை மயக்கியதைப் போல நம் பாட்டால் மயக்க முடியாது - சாந்த்கான்!

சாந்த்: டான்சேன் என்ன நம்மைப் போன்ற சாதாரண கவிஞரா? சங்கீதக் கவிதா மண்டல உலகத்தில் பல ஆயிரம் வருஷங்களுக்கு ஒரு முறை பூக்கும் பூவல்லவா, டான்சேன்?

சூரஜ்: சாந்த்கான்! நீங்களும், நானும் பாதுஷாவைத் தேடி வந்து அரும்பாடுபட்டுப் பாடிப்பாடி-இறுதியில் ஆஸ்தான கவிஞர்களாக ஆக்கப்பட்டவர்கள்! ஆனால் டான்சேனோ-பாதுஷாவே தேடிச் சென்று ரேவா ராஜசபையில் இருந்து பெரும் புதையலாகக் கொண்டு வரப்பட்டு, ஆஸ்தான கவிஞரானவரல்லவா?

சாந்த்: டான்சேனின் காலில் உள்ள தூசிற்குக் கூட நாம் சமமாக முடியாது.

சூரஜ்: நம் பாதுஷா பரிசளித்த பதக்கம், டான்சேனின் கழுத்தில் இருக்கக் கூடாது. டான்சேனின் பாதங்களில் கவிச் சக்ரவர்த்தி என்ற தண்டையாக விளங்குவது தான் பொருத்தம். இதை நிரூபிக்கவே நாம் டான்சேனின் வைரப் பதக்கத்தைத் திருடினோம்.

சாந்த்: நம் விளையாட்டு, விபரீதமாகியதால்-டான்சேனையே நாம் பிரிந்து விடும் நிலைக்கு ஆளாகி விட்டோம்.

சூரஜ்: டான்சேன் என்ன ஆனாரோ? எங்கிருக்கிறாரோ, எதுவுமே புரியவில்லையே?

(அப்பொழுது பள்ளி வாசலின் தொழுகை ஒசை எழுகிறது. தொடர்ந்து கிறித்துவ தேவாலய மணி ஒசை கேட்கிறது. அதைத் தொடர்ந்து இந்து கோவிலின் பூஜைமணி ஒசை கேட்கிறது. அக்பர், புரண்டு புரண்டு படுக்கிறார். கவிஞர்கள் இருவரும் பள்ளி எழுச்சிப் பாடலைப் பாடத் தயாராகின்றார்கள். அப்பொழுது வைரம் பதித்த மிதியடியுடன் ஒருவர் நடந்து வருவது தெரிகிறது.

பிறகு முழு உருவமும் தெரிகிறது. கையில் தம்புராவுடன் டான்சேன் நுழைகிறார். கவிஞர்கள் சலாம் செலுத்த, டான்சேன் சூர்தாஸின் பாடல் ஒன்றைப் பாடி பாதுஷாவைத் துயில் எழுப்புகிறார்.)

பாடல் காட்சி

(பின்னணி - இயற்கைக் காட்சிகள்-பூபாள ராகத்தில் கோபியர் நடனக் காட்சிகள், கற்பனை வடிவில்)

கண்ணா! முகுந்தா! காயாம்பூ வண்ணா! கார்மேகக் கண்ணா! கனி வாயிதழமுத முத்தம் தாடா! தாடா!

கிருஷ்ணா! மங்களம்! கிரிதாரி! மங்களம்! கேசவா! மங்களம்!

மாயவா மங்களம்! மகாப்பிரபுமங்களம், மங்களம்!மாதவா மங்களம்! மங்களம், மங்களம்!

கண்துயிலும் கண்ணா! கண் மலர்வாய் பிரபு! கண் மலர்வாய்பிரபு!

குருடன் எனக்குத் தான் -

இரவேது? பகலேது? எல்லாமே ஒன்றுதான் ! - ஆனால்

கனவில் -நினைவில்-நெஞ்சில் நிறைந்தவன் நீ-பிரபு!

எந்த யுகம்? எவ்வுலகம்? என்ன நாடு?

எல்லாமே எனக்குள் நீ தான்! கண் மலர்வாய் கண்ணா! கண்ணாளா!

பரமபத இளவரசா! பார்த்திட என்னை, எழுந்திரு கிருஷ்ணா!

காதெனக்குக் கண் ! கருணைபொழி கண்ணா! நீ என் கண்மணி! கண்ணின் கருமணி!

கண்ணா! கண்மலர்வாய்!

பெண்குரல்

(சூர்தாஸின் பாடல் பெண்குரலில் எழுகிறது. கண்ணனின் கையில் தாமரைப்பூ உள்ளது. கண்ணன் தொட்டிலில் உறங்குகிறான்)

கைதனில் கமலப்பூ! கரங்களும் தாமரை!
உன் பூ விழியோ பூத்த அரவிந்தம்!
கண் விழிப்பாய் கண்ணா! - கண் மலர்ந்தால் கண்ணா!
மண்ணுலகில் தர்மம் கண் விழிக்கும் மாயவா!
இருள் எங்கோ ஒளிந்தது ! - இருளோடு வனவிலங்கு
ஆந்தை, கோட்டான் அனைத்துமே மறைந்தன! மறைந்தன!
அல்லிப் பெண் கண் வளர்ந்தாள்! அழகு மலர் துயில் கொண்டாள்!
அருணோதயக் காட்சி! ஆஹா அற்புதம்! அற்புதம்!
தடாகத்துத் தாமரையாள் முகம் பூத்துத் தாலாட்டி, முத்தமிட
கண் மலர்வாய் கண்ணா! என் கனி அமுதே! காயாம் பூ வண்ணா!
கொடி மலர்கள் பூப்பூத்து ஆடி அழைக்குதடா, கிருஷ்ணா!
கூவிடும் பறவையெலாம் பூபாளம் பாடுதடா!கண் விழிப்பாய்!
குழலமுத கான மழை! கோபியர்தமை இழப்பார்! தமை மறப்பார்!
மடையென மடியெலாம் பால்பொங்கும், மாட்டினமும்!
பாற்கடல் பொங்குதடா, பசுவின் பால்மடிக்குள்!
இணைந்தோடி ஆடிப்பாடும் இடைச் சிறுவர் எல்லாம்
எழுந்து விட்டார்-உனக்காக!
கண் விழிப்பாய், கண்ணா! கண் மலர்வாய் கிருஷ்ணா!
காலை இளஞ்சூரியனும் கிரணமெனும் கைவிரலால்
காதலுடன் கண்ணா! உன் காலடியை வருடுதடா!
கிரண வழிவந்த ராதையவள்-
கிள்ளுகிறாள் உன்னையடா, கிளுகிளுத்து!
கண்மலர்வாய் கண்ணா! கண் விழிப்பாய்!

(கண்ணன் கண் விழித்துச் சிரித்து-கையசைத்து ஆட்டுவ தோடு காணுதைக்கும் காட்சி)

காட்சி 16

(டான்சேனின் பாடலைக் கேட்ட அக்பர் படுக்கையினின்றும் எழுகிறார். டான்சேன் தன் இடது கையால் அக்பரை நோக்கி, சலாம் செலுத்துகிறார்.)

டான்: சலாம், பாதுஷா! (தன் காலிலுள்ள பாதுகைகளைக் கழற்றி அக்பர் முன் வைத்து) இதிலுள்ள வைரங்களை நான் பறி கொடுத்த வைரங்களுக்குப் பதிலாக எடுத்துக் கொள்ளுங்கள்!

அக்: (பாதுகைகளில் பதித்துள்ள வைரங்களை உற்று நோக்கி விட்டு) ஆஹா! அற்புதமான வைரங்கள்! நான் பரிசளித்த பதக்கத்தி லிருந்த வைரங்களை விட உயர்ந்தவை! ஆனாலும் இந்த அற்ப வைரங்களுக்குள், நான் உங்கள் மீது கொண்டிருந்த பாசத்தை மதிப்பீடு செய்ய முடியுமா ? டான்சேன்!

டான்: நான் கொண்டு வந்துள்ள வைரங்களில் ஷாஇன்ஷா வின் பாசத்தை வைத்து மதிப்பிட முடியாவிட்டாலும், இவ்வைரங் களுக்குள் இந்த ஏழைக் கவிஞன்-ஷா இன்ஷா மீது கொண்ட பாசம் குடிகொண்டிருக்கிறது. ஷா இன் ஷா !

வைரங்களை வைத்து மதிப்பிடாதீர்கள். ஷா இன் ஷா! நம் இருவருடைய பாசங்களை மட்டுமே நட்புத் தராசில் உள்ள இரண்டு தட்டுக்களிலும் வைத்து நிறுத்து முடிவு செய்யுங்கள். உயர்ந்து நிற்பது உங்கள் பாசமா அல்லது என் பாசமா என்பதுதான் என் வழக்கு தீர்ப்பு வழங்க வேண்டியவர். ஷா இன் ஷா!

அக்: (எழுந்து டான்சேனைக் கட்டித் தழுவிய படியே) மகாகவி! நீங்கள் ஜெயித்து விட்டீர்கள்! தோல்வி எனக்குத்தான்!

சாந்த்: ஷா இன்ஷா! உங்கள் பாசமும் எங்கும் போய் விடவில்லை. (மடியிலிருந்து வைரப் பதக்கத்தை எடுத்து) ஷா இன் ஷா! இதோ நீங்கள் மகாகவி டான்சேனுக்குப் பரிசளித்த வைரப் பதக்கம்! (பதக்கத்தை தருகிறார்)

சூரஜ்: ஷா இன்ஷா! இந்தப் பரிசுப் பதக்கத்தை நாங்கள் தான் திருடியவர்கள்! எங்கள் திருட்டிற்கும் ஒரு காரணம் உண்டு.

அக்: கவிஞர்களாக இருந்தும்கூட செய்திருப்பது திருட்டு வேலை! அந்தத் திருட்டிற்கும் ஒரு நியாயம்! நீதியாகக் காரணம் சொல்லலாமா கவிஞர்களோ? மகாகவி 'டான்சேன் மீது' நீங்கள் கொண்ட பொறாமைதான் காரணமாக இருக்க வேண்டும்.

சாந்த்: ஷா இன்ஷாவை மயங்க வைத்து வைரப்பதக்கத்தைப் பரிசளிக்கச் செய்த மகாகவி டான்சேனின் அதே பாடல்கள் தாம், எங்களைக் கொண்டு இந்தப் பதக்கத்தையும் திருட வைத்தன.

அக்: விளக்கமாகச் சொல்லுங்கள், கவிஞர்களே!

சூரஜ்: ஷா இன்ஷா! டான்சேனைப் பார்க்க ஒருநாள் நாங்கள் சென்றிருந்த பொழுது, டான்சேன் தன்னை மறந்து பாடிக் கொண்டிருந்தார். அப்படிப்பட்ட வேளையில் தான், நாங்கள் நேருக்கு நேராகவே அவர் கழுத்திலிருந்த வைரப் பதக்கத்தைத் திருடினோம். நாங்கள் அவர்முன் நின்றதையோ, அவர் கழுத்திலுள்ள பதக்கத்தைத் திருடுவதையோ கூடக் கவனிக்கும் உணர்ச்சியில்லாமல், தன்னை மறந்த நிலையில் பாடிக் கொண்டிருந்தார், டான்சேன்.

சாந்த்: பிறகு, பல நாட்களாகக் கூட இந்தப் பதக்கத்தின் நினைவில்லாமலேயே நடமாடிக் கொண்டிருந்தார்-டான்சேன்! அப்பொழுது நாங்கள், இம் மகாகவியின் தேனமுத இசை கானத்திற்குப் பரிசாக இவர் கழுத்தில் நாங்கள் வைரப் பதக்கம்

அணிவித்ததைவிட, தன்னை மறந்து இசையிலேயே மூழ்கிக் கிடக்கும் இவர் காலிற்குத் தாங்கள் வைரத் தண்டையையே அணிவித்துச் சிறப்பித்திருந்தால் மேலும் சிறப்பாக இருக்குமே என்று கூட விமர்சனம் செய்தோம், ஹா இஸ்ஹா !

சூரஜ்: பிறகுதான்-நாயகன் டான்சேனைத் தன் நிலைக்குக் கொண்டு வரும் ஒரு திடீரென்ற அதிர்ச்சி வைத்தியமாக-உங்களிடமே இவரைப் பற்றி வீணான பொய் கூறி, சபைக்குள்ளும் நுழையாமல் செய்து விட்டோம். ஹா இஸ் ஹா ! ஆனாலும்-நாங்கள் எப்படி நினைத்தோமோ, அதைப்போலவே வைரம் பதித்த மிதியடியுடன் கவிச்சக்கரவர்த்தியாகி-புவிச் சக்ரவர்த்தியாகிய தங்களைக் காண வந்து, இன்றைய தங்கள் பள்ளி எழுச்சிப் பாடலையும் பாடி விட்டார்!

அக்: (வைரப் பதக்கத்தை டான்சேனின் கழுத்தில் அணிவித்துக் கட்டித் தழுவி) டான்சேன்! நீங்கள் மகாகவிச் சக்ரவர்த்தி!

டான்: (வைரம் பதித்த மிதியடியை அக்பரின் காலில் அணிவித்தபடியே) நான் கவிச் சக்ரவர்த்தி என்பது உண்மையானால், இக்கவிஞனின் காணிக்கையாக பாதுஷா இதை ஏற்றுக் கொள்ள வேண்டும்!

அக்: மகாகவி டான்சேன்! இந்த வைரப் பாதுகை வந்த கதையை நான் தெரிந்து கொள்ளலாமா?

டான்: அதையும் சொல்கிறேன்.

(காட்சி விரிகிறது)

(பின்குரலாக டான்சேனின் குரல் ஒலிக்க, காட்சி மௌனமாகச் செல்கிறது.)

"ஹா இன் ஷா! தங்களை விட்டுப் பிரிந்து சென்ற நான், நேராகக் குவாலியரை அடுத்துள்ள ரேவா நாட்டிற்குச் சென்றேன். என்னை முன்பு ஆஸ்தான கவிஞராக நியமித்திருந்த ராமச் சந்திர ராஜாவைச் சந்தித்துஇங்கு நடந்த எல்லா நிகழ்ச்சிகளையும் விவரமாகக் கூறினேன். பிறகு ராஜாவின் மீது சில பாடல்களைப் பாடினேன். ராஜா அளவற்ற மகிழ்ச்சி அடைந்து விலை உயர்ந்த வைரங்கள் பதித்த இப்பாதுகைகளை என் காலில் அணிவித்து பல்லக்கில் ஏற்றி அனுப்பி வைத்தார்.

ஷா இன் ஷா ! பல்லக்கில் வரும் எனக்கு ஒரு புல்லரிக்கும் நிகழ்ச்சி-பாசத்தின் சுக அனுபவமாக ஏற்பட்டது.

பல்லக்கு வந்து கொண்டிருந்த பொழுது, தற்செயலாக பல்லக்கின் திரையை விலக்கிக் கொண்டு எட்டிப் பார்த்தேன். ராமச் சந்தர ராஜாவும் தன் வலது தோளில் என் பல்லக்கைச் சுமந்து வந்து கொண்டிருந்தார்.

உடனே பல்லக்கிலிருந்து கீழே குதித்து-ராஜாவின் பாதங்களை என் கண்ணீராலும், கவிதைகளாலும் பூஜை செய்து விடை பெற்றுக் கொண்டு வந்தேன்.

தன் வலது தோளில் என்னை ராஜா சுமந்ததால்-என் வலது கரத்தை அவருக்கென்றே எவக்குள்ளாக அர்ப்பணித்துக் கொண்டேன்.

இனி-என் வாழ்நாளெல்லாம் என் வலதுகை, ராமச்சந்திர ராஜாவைத்தான் வணங்கும். மற்றவர்களுக்கெல்லாம் இனி என் இடது கரத்தால்தான் சலாம் செய்வேன். தங்களையும் சேர்த்துத் தான் சொல்கிறேன். இனி உங்களுக்குக் கூட என் இடது கையால் தான் வணக்கம்! என்னைத் தவறாகத் தாங்கள் நினைத்து விடக்கூடாது.

அக்: (டான்சேனைத் தழுவிய படியே) மகாகவி! உங்கள்

கவிதைகளுக்குள் நான் ஒரு அடிமை! என் இதயத்தில் நீங்கள் ஒரு கவிச் சக்ரவர்த்தி! நமக்குள் என்ன உயர்வு, தாழ்வு? இனி என்னை விட்டுப் பிரிந்து விடாமல் என்னோடு தாங்கள் வாழ்நாளெல்லாம் வாழ்ந்து வந்தாலே-அதுவே நான்பெற்ற மகாபாக்கியம்!

சூரஜ்: மகாகவி! இன்று பாதுஷாவைப் பள்ளி எழுப்பத் தாங்கள் பாடிய பாடல் மகா அற்புதம்! இதுவரையிலும் தாங்கள் இப்படி ஒரு பாடலைப் படைத்ததே இல்லை! மகாகவி!

டான்: கவிஞர்களே! இன்று நான் பாடிய பாடலின் படைப் பாளி, நான் அல்ல. இன்றைய பாடலைப் படைத்தவர் என்னை விடவும் சிறந்த ஒரு மகாகவி.

அக்: இந்த உலகத்தில் டான்சேனை விடவும் சிறந்த ஒரு மகாகவி இருப்பதாக டான்சேனே கூறுவது மட்டும்-நம்பமுடியாத ஒன்றாக இருக்கிறது.

டான்: என்னைவிடச் சிறந்த ஒரு மகாகவி-பிறவிக்கவிஞர் இருக்கிறார். சந்தர்ப்பம் வரும்பொழுது நானே அவரை அறிமுகப் படுத்துவேன்.

## காட்சி 17

(பிருந்தாவனத்தில் யமுனை நதிக்கரையில், ஹரிதாசர் அமர்ந்துள்ளார். டான்சேன் கையில் பூக்கூடையுடன் வருகிறார்)

ஹரி: (மலர்ந்த முகத்துடன்) வா, டான்சேன்! வா! சர்வ மங்களங்களும் உனக்கு ஏற்படுவதாகுக! (கையை உயர்த்தி ஆசீர்வதிக்கிறார். டான்சேன் தன் தலைப்பாகையைக் கழற்றித் தரையில் வைக்கிறார். பிறகு பூக்கூடையையும் கீழே வைக்கிறார். ஒரு பாத்திரத்தில் யமுனையின் நீரைக் கொண்டு வந்து

ஹரிதாசரின் பாதத்தைக் கழுவி , பூக்களைக் கொட்டி பாத பூஜை செய்து தொழுகை செய்யும் நிலையில் வணங்குகிறார்.)

டான்: என் குருதேவரின் பாத தாமரைகளை நமஸ்கரித்துக் கொள்கிறேன். குருநாதரைக் கண்டு எவ்வளவோ வருஷங்கள் ஆகிவிட்டன.

ஹரி: டான்சேன்! என்னைப் பொறுத்த மட்டிலும் நான் ஒவ்வொரு நாளும் உன்னை என் மனக்கண்களில் பார்க்கிறேன். மானஸீகமாக உன் சங்கீதத்தை எனக்குள்ளாகவே கேட்கிறேன்!

டான்: (குருவின் பாதத்தைத் தொட்டுக் கண்களில் ஒற்றிக் கொண்டு) தங்கள் கிருபை-நான் பெற்ற மகா பாக்கியம், குருதேவா!

ஹரி: டான்சேன்! உன்னை மாணவனாகப் பெற்றதில் நான் பெருமிதம் கொள்கிறேன். சங்கீத சாம்ராஜ்யத்தில் பாடல்களைப் படைப்பதில்-நீ மகாகவிச் சக்ரவர்த்தி! பாடுவதிலோ இன்னிசை யின் கந்தர்வ கானப் பேரரசன்! ஆக இரு பெரும் ராஜ அம்சங் களோடு நீ விளங்கி வருவதையும் அடிக்கடி பலர் என்னிடம் பெருமையோடு சொல்கிறார்கள், டான்சேன்!

டான்: எல்லாமே தங்கள் ஆசீர்வாதங்கள்தாம் குருதேவா!

ஹரி: டான்சேன்! உன்னிடமிருந்து இசை, கான மழையாகப் பொழிய ஆரம்பித்துவிட்டால்-பறவைகளும், மிருகங்களும் கூட தன் நிலை இழந்து மயங்கி-உன் பாடலில் கட்டுண்டு விடுகின்றன என்பதையும் சிலர் என்னிடம் கூறினார்கள்.

டான்: எல்லாமே, தங்கள் ஆசிகள்தாம் காரணம், குருதேவா!

ஹரி: டான்சேன்! உன் கான மழையில் வானத்துப் பறவைகளும், கானத்து மிருகங்களும் மயங்குவது எனக்கு மட்டும் ஆச்சரியமாகப் படவில்லை. நான் இவையெல்லாம் நடக்கும் என்பது

எவ்வளவோ வருஷங்களுக்குமுன்பே, நான் எதிர்பார்த்த ஒன்று தான்!

டான்: குருதேவா! தங்கள் தீர்க்க தரிசனம் பொய்யாகாமல் மெய்யாகிவிட்டது, ஸ்வாமி!

ஹரி: என் எதிர்பார்ப்பில் எந்த விதமான தீர்க்க தரிசனமுமே இல்லை, டான்சேன்! இசை ஞானத்தின் இயற்கை ரகசியமே இதுதான்! இசை ஞானம், ஒரு பொங்குமா கடல்! அதன் ஆழத்தை எவருமே கண்டதில்லை! காணவும் முடியாது!

டான்: அந்த ரகசியத்தை எனக்கும் சிறிது புரியவையுங்கள், குரு தேவா!

ஹரி: சொல்கிறேன், நீ சிறுவனாக துள்ளித் திரிந்த காலத்தில் எப்படிப்பட்ட சூழ்நிலையில் எனக்கு அறிமுகமானாய் என்பதை நன்றாக முதலில் நினைத்துப் பார். அந்தக் காலத்தில் உன் பெற்றோர் கற்பித்தக் கல்வியறிவில் நீ கவனம் செலுத்தாமல் எங்கு திரிந்தாய், என்ன செய்து கொண்டிருந்தாய், என்னை எப்படி சந்தித்தாய் ? என்பதையெல்லாம் நன்றாக நினைவு படுத்திப்பார்.

டான்: ஆம்! அந்தக் காலத்தில்...

(காட்சி விரிகிறது. காடு, மலை, நதி அடி வாரங்களில் சிறுவன் டான்சேன், தன்னந்தனியாகத் திரிகின்றான். பறவைகளின், மிருகங் களின் சப்தங்களைக் கவனிக்கிறான். பிறகு அவைகளைப் போல் அவனும் ஓசைகளை எழுப்பித் தனக்குள் மகிழ்ச்சி அடைகிறான்.

காக்கை கரைகிறது. இவனும் காக்கையைப் போல் கரைகின்றான் . சேவல் கூவுகின்றது. இவனும் சேவலைப் போலக் கூவுகிறான். குயில் கூவுகிறது. இவனும் குயிலைப் போல் கூவுகிறான். இதைப்போலவே- குருவி, புறா, மயில், கருடன், கழுகு

இவை எழுப்பும் ஓசைகளைக் கேட்டுக்கேட்டு அவைகளின் ஓசைகளையும் எழுப்புகின்றான். பிறகு-

மாடு, ஆடு, மான், புலி, சிங்கம், யானை, நரி-இவற்றின் சப்தங்களையும் கேட்டுக் கேட்டு, அவைகளைப் போலவும் சப்த ஓசைகளை எழுப்புகின்றான், சிறுவன் டான்சேன்.

அப்பொழுது-காட்டின் வழியே ஹரிதாஸர் தம்புராவுடன், தன் சிஷ்யர்களுடன் வந்து கொண்டிருக்கிறார். டான்சேன் புதர்களின் மறைவில் நின்று கொண்டு புலியைப் போல் பயங்கரமான சப்தத்தை எழுப்புகிறான்.

சிஷ்யர்கள் பயந்து நடுங்கி நிற்கும் பொழுது-ஹரிதாஸர் மட்டும் அங்கும் இங்கும் நடந்து நடந்து சப்தம் எழுப்பிய ஓசையை நோக்கிச் சென்று புதர் மறைவில் நின்று கொண்டிருந்த டான்சேனைப் பார்க்கிறார். டான்சேன் ஹரிதாஸரைக் கண்டு பயப்படுகின்றான்)

ஹரி: (டான்சேனைத் தட்டிக் கொடுத்து) மகனே! தற்பொழுது நாங்கள் கேட்ட முழக்கத்தை எழுப்பிய புலி , நீ தானா மகனே!

டான்: ஆம் சுவாமி! எல்லோரையும் பயமுறுத்தியதற்காக, என்னை மன்னிக்க வேண்டும்.

ஹரி: (புன்முறுவலுடன் ) எதற்காக மன்னிப்பு? மகனே! நீ மிக மிக அற்புதமாக-புலியைப் போல முழங்கக் கற்றுக் கொண்டிருக்கிறாய். இதைப் போல்...

டான்: எல்லா மிருகங்களின், எல்லாப் பறவைகளின்-சப்தங்களையும் எழுப்பவும் தெரிந்து வைத்திருக்கிறேன்.

ஹரி: சபாஷ்! எங்கே, அவைகளை எல்லாம் செய்து காட்டு.

டான்: (ஒவ்வொரு பறவையின் சப்தத்தையும் செய்து காட்டி)

—இது காக்கை!
—இது குருவி!
—இது புறா!
—இது குயில்!
—இது கருடன்!
—இது மயில்!
—இது கழுகு!
—இது சேவல்!

(பிறகு மிருகங்களின் சப்தங்களையும் ஒவ்வொன்றாகச் செய்து காட்டி)

—இது ஆடு!
—இது மாடு!
—இது யானை!
—இது மான்!
—இது சிங்கம்!
—இது புலி!
—இது நாய்!
—இது பூனை!

எந்த சப்தத்தைக் கேட்டாலும் அதைப்போலவே செய்து காட்டவும் என்னால் முடியும்!

—இது இடி மேகம்!
—இது பொங்கும் கடலலைகளின் ஆர்ப்பாட்டம்!
—இது சூறாவளிக் காற்று!
—இது அருவியின் ஓசை!

ஹரி: சபாஷ்! சபாஷ்! கேட்ட கேட்ட சப்தத்தை அப்படியே காட்டும் அற்புதமான கலையை, உனக்கு யார் சொல்லிக் கொடுத்தார்கள்?

டான்: நானே தான் சுவாமி, கேட்டுக் கேட்டுப் பழகிப் பழகிப் பழக்கத்தால் கற்றுக் கொண்டேன்.

ஹரி: ஆஹா! அற்புதம்! அதி அற்புதம்! கடவுளின் அம்சம் கொண்டவன் நீ! உன் பெயரென்ன மகனே, உன் பெற்றோர்கள் எந்த ஊரில் இருக்கிறார்கள்?

டான்: ஸ்வாமி, என் பெயர் டான்சேன்! குவாலியரில் உள்ள பெரிய செல்வந்தரும், கவிஞருமாகிய முக்சந்த் மிஸ்ராதான் என் தந்தையார்.

ஹரி: உன் தந்தையாரின் பெயரைப் பார்த்தால் இந்துவாகவும்-உன் பெயரைப் பார்த்தால், முஸ்லீமாகவும் தெரிகிறதே? ஒரு வேளை நீ-கவிஞர் மிஸ்ராவின் வளர்ப்பு மகனா?

டான்: (சிரிக்கிறான், கலகலவென்று. பிறகு) சுவாமி! எங்களுக்கு எம்மதமும் சம்மதம்! நான் என் தந்தையாரின் சொந்த மகன் தான்! சுவீகார மகன் அல்ல! என் தந்தையாரின் மதம் தான் நான்! என் மதம் தான் என் தந்தையார்!

ஹரி: டான்சேன்! மதங்களை சமமாக பாவிக்கும் ஒரு மகா ஞானியின் வம்சத்தில் பிறந்த கலைஞான பொக்கிஷம். நீ! நீ என்னுடன் வந்து விட்டால், உன் தந்தைக்குரிய வம்ச விருக்ஷமாக, ஒரு மகா கவிஞனாக என்னால் உன்னை மாற்ற முடியும்!

டான்: என் தந்தையிடம் அனுமதி கேளுங்கள், சுவாமி! உங்களுடன் வரத் தயாராக இருக்கிறேன்,

(காட்சி மறைந்து-மீண்டும் காட்சி விரிகிறது-குவாலியரில்-கவிஞர் முக்சந்த் மிஸ்ராவின் வீட்டில் ஹரிதாஸர் சிஷ்யர்கள் சூழ அமர்ந்துள்ளார். டான்சேன் கைகளைக் கட்டிக் கொண்டு நிற்கிறான். மிஸ்ராவும், திருமதி மிஸ்ராவும் காட்சியில் உள்ளனர்)

*மிஸ்ரா: மகாஞானி ஹரிதாஸ் சுவாமிகளே! வம்சமே இல்லாமல் ஏங்கிக் கிடந்தோம்., நாங்கள்! பிறகு கடவுள் அருளாலும்-மகாகவியும், மாபெரும் மகானுமாகிய முகமது கானின் ஆசீர்வாத அனுக்கிரஹத்தாலும் பிறந்த எங்கள் ஒரே மகன்தான்-டான்சேன்!*

*டான்சேனுக்குக் கல்வி கற்பதில் ஆர்வமே இல்லை! சதா நேரமும் எங்காவது காடு, மலை, நதி என்று சுற்றித் திரிந்து கொண்டிருப்பான்.*

*திருமதி மிஸ்ரா: ஆனால் இன்றைக்கு ஒரு மாபெரும் மகானையே, நாங்கள் தரிசிக்கும் பாக்கியத்தையே எங்கள் மகன் தான் ஏற்படுத்தித் தந்திருக்கின்றான்.*

*ஹரி: கவிஞரே! தங்கள் ஏக புத்திரன் டான்சேனிடம், எதிர் காலத்தில் இயற்கையையே கட்டுப்படுத்தும் சங்கீத கவிதா மண்டலத்தின் மேதாவிலாஸம், புதைந்து கிடக்கிறது. டான்சேன், ஒரு மகா கவியாக மாறுவான்!*

*மிஸ்ரா: கல்வியறிவே பெறாத டான்சேன்...கலைஞானம் பற்றி எதுவுமே தெரியாத டான்சேன்-*

*ஹரி: கவிஞரே! டான்சேனைப் பற்றிய உங்கள் கணக்கே தவறானது. சங்கீதத்தின் அடிப்படை ஞானமே வடிவமானவன், டான்சேன். அவனுக்கு கல்வியறிவு எதற்கு கவிஞரே! டான்சேன் தான் சங்கீதம்! சங்கீதம் தான், டான்சேன்!*

*மிஸ்ரா: நீங்கள் சொல்வதே எங்களுக்கு விளங்கவில்லை, சுவாமி!*

*ஹரி: கவிஞரே! சங்கீத சாஸ்திரியத்தின் அடிப்படையே கடவுளால் வகுக்கப்பட்ட இயற்கை நுணுக்கத்தின் பிரதிபலிப்பு என்பது உங்களுக்கே தெரியும்.*

மிஸ்ரா: ஆம், சுவாமி! இயற்கையெல்லாம் பரந்து வியாபித்துள்ள இறைவன், சங்கீதத்திலுள்ள ராகங்களிலும் இயற்கை அமைப்பில்தான் சஞ்சாரம் செய்கிறான், சுவாமி!

ஹரி: இந்த ரகஸ்யம் மதங்களெல்லாவற்றிற்கும், பொதுவான-மனிதனால் மட்டுமே செய்து காட்டக் கூடிய சங்கீதத்துவம்!

மிஸ்ரா: ஆம், சுவாமி!

ஹரி: கவிஞரே! சங்கீத இசை அமைப்பின் அடிப்படையான ஏழுஸ்வரங்களுமே மனிதனின் குரலில் இருந்து படைக்கப்படவில்லை. இவை ஏழுமே-குயில், கிரவுஞ்சப் பறவை, கொக்கு என்ற பறவைகளும்- ரிஷபம், ஆடு, குதிரை, யானை என்ற மிருகங்களும் எழுப்பும் சப்த ஒசைகளின் அடிப்படை நுணுக்கத்தில் தானே படைக்கப்பட்டுள்ளன?

மிஸ்ரா: உண்மை சுவாமி! இந்த ஏழு சப்தங்களின் நுணுக்கங்கள் மனிதனின் குரலில் பல வடிவங்களில் உருவாகும் பொழுதுதான் சங்கீதமே உருவாகிறது.

ஹரி: கவிஞரே! உங்களால் கிரவுஞ்சப் பறவை, கொக்கு, குயில்களின் ஒசைகளை உங்கள் குரலில் காட்ட முடியுமா? அல்லது ஆட்டின்-ரிஷபத்தின், குதிரையின்-யானையின் ஒசைகளை உங்கள் குரலில் காட்ட முடியுமா?

மிஸ்ரா: முடியாது, ஸ்வாமி! முடியாது.

ஹரி: மாபெரும் கவிஞராகிய உங்களால் முடியாது. ஆனால் சங்கீதத்தைப் பற்றி எதுவுமே படிக்காத டான்சேன், உங்கள் மகன்-தன் குரலில் இவ்வளவு ஒசைகளையும் எழுப்பிக் காட்டுவான். இதை, நானே என் கண்களால் நேரில் கண்டேன். இதே என் காதுகளால் நேரில் கேட்டேன்!

மிஸ்ரா: (ஆச்சரியமாக) ஆ, அப்படியா சுவாமி!

ஹரி: ஆம் கவிஞரே! அதனால்தான் டான்சேன் நான் சங்கீதம்! சங்கீதம் தான் டான்சேன்! என்று கூறினேன்.

மிஸ்ரா: தங்கள் வார்த்தைகளால் பேரானந்தம் கொள் கிறோம், சுவாமி!

ஹரி: டான்சேன், இப்பொழுது தன்னை உருவாக்கிய மூல ஜீவாதார விதையை-தங்களை-அறிமுகப்படுத்தி விட்டான். இனி, டான்சேன் என்ற விதையை எடுத்துச் சென்று விதைத்து, செடியாக வளரவிட்டு-கொடியாகப் படரவைத்து-மகாகவி என்ற மாபெரும் இசைஞான விருக்ஷமாக மாற்றிக் கொண்டு வந்து, உங்களிடம் சேர்ப்பிக்க முடிவு செய்து விட்டேன், கவிஞரே!

மிஸ்ரா: என் மகனை ஒரு மாபெரும் கவிஞனாக மாற்ற, நான் என்ன செய்ய வேண்டும்? சொல்லுங்கள், சுவாமி!

ஹரி: கவிஞரே! நானே குருவாக இருந்து டான்சேனுக்கு இசையில் பயிற்சியளிக்கப் போகிறேன். அதற்காக டான்சேனை என்னுடன் பிருந்தாவனத்திற்கு அழைத்துச் செல்ல, அனுமதி தர வேண்டும்.

மிஸ்ரா: அப்படியே சுவாமி! (டான்சேனைப் பார்த்து) மகனே! இன்றுமுதல் சுவாமிகள் தான் உனக்குத்தாய், தந்தை, குரு, தெய்வம்- எல்லாமே! சுவாமிகளுக்கு சேவை செய்து கொண்டு குரு குலவாசம் செய்!(ஹரிதாசரைப் பார்த்து) சுவாமி! மகான் முகமது காஸின் ஆசீர்வாதப் பிச்சைதான் டான்சேனாகிய என் மகன்! இனி, நீங்கள் இவனுக்கு அளித்திடும் இசைஞானப் பிச்சை, எங்கள் வம்சத்திற்கே இட்ட அனுக்ரகப் பிச்சை!

ஹரி: கவிஞரே! டான்சேனை மகாகவியாக மாற்ற நான் விரும்புவது, உங்கள் வம்சத்திற்காக மட்டும் அல்ல, உலகத்திற் காகவும் தான்! இப்பாரத தேசத்தின் சங்கீத சரித்திரத்தில் டான் சேனும் அழியாத இடம் பெறுவான்.

மிஸ்ரா: எல்லாம் தங்கள் ஆசீர்வாதம், சுவாமி! மனிதன் மட்டுமே பகுத்தறிவோடு படைக்கப்பட்டான். அதனால் அவன் கடவுளைக் கண்டறிந்தான்,

மனிதனிடம், இறைவனை நினைக்கும் மனம் ஒன்றுதான் இருந்தது. நினைக்கும் இறைவனை வணங்கி வழிபட்டு ஆராதித்து பக்தி செலுத்தும் இசை ஞான இயற்கைக் குரல் வளம், மனிதனிடம் இல்லை! அதனால் தான்-

அவன் தன்னைப் படைத்த கடவுளைப் பிரார்த்திக்க ஏனைய உயிரினங்களின் குரல்களிலிருந்து இசையை உருவாக்கினான். கவிதையைப் படைத்தான், இசையை எழுப்பிக் கவிதையைப் பாடி கவிதைக்குள் ஆதிபரம்பொருளை அனுபவிக்கும் சுகத்தை சஞ்சரிக்க வைத்தான்!

சங்கீதக் கருவிகளும் கூட இயற்கைக்குள் மனிதன் கண்டறிந்த தெய்வ சுகம் தானே சுவாமி?

மிருகங்களின் தோலிலிருந்து, நரம்புகளிலிருந்து, மூங்கிலின் துளையிலிருந்து-மரக்கட்டைகளின் அமைப்பிலிருந்து-உலோகங் களின் ஓசைகளிலிருந்து-ஏன், மண்ணால் ஆன பாண்டத்திலிருந்து கூட-ஏழு ஸ்வரங்களின் இசைநாதத்தையும் அல்லவா எழுப்பி விட்டான்? உலகம் முழுவதற்குமே பொதுவாக அமைந்த இசையின் தத்துவமே இது தானே?

உலகத்தில் எந்தப் பகுதியில், எந்த சூழ்நிலையில், எப்படி எப்படி எல்லாம் இசையை-எந்த மொழியில், எந்த வார்த்தையில்,

எப்படி எழுப்பினாலும்-அதன் அடிப்படை ஏழு ஸ்வரங்களாகத் தான் இருக்க முடியும்! நாத சஞ்சாரத்தின் மையத்தில்தானே-சிற்றின்ப, பேரின்ப சுகங்கள் மனித நெஞ்சங்களில் சுகானு பவங்களைத் தருகின்றன?

ஹரி: கவிஞரே! ஆம். மனிதன், ஏழிசையின் இன்னிசையால் அனுபவிக்கும்பொழுது-அப்பரம் பொருளும் இசையின் கீதமாய், நாதமாய், கான மழை வெள்ளமாய் இசைக்குள் சஞ்சரிக்கிறார். அப்பரம் பொருள் உலகத்திற்கு ஒன்றானவர்! எல்லா மதங்க ளுக்கும், மதங்களைக் கடந்தும் மனிதனுக்குப் பொதுவானவர்! அப்பரம் பொருளை எந்த பாஷையிலும்-எந்த ரூபமாகவும், அரூப மாகவும் யாரும் பாடலாம்! அப்பரம் பொருளின் பெயரால் தான்-நான் டான்சேனை பிருந்தாவனத்திற்கு அழைத்துச் செல்கிறேன். (ஹரிதாஸ் டான்சேனுடன் புறப்பட-மிஸ்ரா தம்பதிகள் தலை வணங்கி, வாசல் வரையிலும் வந்து வழி அனுப்புகிறார்கள்.)

காட்சி 18

(இடம் மதுராபுரி பிருந்தாவனம்-யமுனை நதிக்கரை)

ஹரி: டான்சேன்! நீ பாடினால் பறவைகளும், மிருகங்களும் கட்டுப்படும் இசைஞான இயற்கை ரகசியம்தற்பொழுது உனக்குப் புரிகிறதா?

டான்: புரிகிறது, குருதேவா! தற்பொழுது நான் தங்களைத் தேடி தரிசிக்க வந்திருப்பதற்கும் இரண்டு காரணங்கள் இருக்கின்றன, குருதேவா!

ஹரி: சொல், டான்சேன்! சொல்.

டான்: முதலாவது காரணம்-எந்த இசைஞானம் எனக்குப் பெரும் புகழையும், செல்வத்தையும் வாரி வாரி வழங்கிக் கொண்

விக்கக் காரணமாக இருந்ததோ-அதே இசைஞானம்தான். தற்பொழுது எனக்கு மரணதேவனிடமிருந்து சாவோலைச் சீட்டையும் அனுப்பி அழைப்பு விடுத்து விட்டது. குருதேவா! அதனால்தான் என ஜீவன் பிரிவதற்குள், என் ஆதி குருநாதரை இறுதியாகத் தரிசித்து விட வேண்டும் என்று வந்திருக்கிறேன்!

ஹரி: (வானத்தை நோக்கிக் கைகூப்பி) ஹரே கிருஷ்ணா! ஹரே கிருஷ்ணா!...புரியும் படியாகச் சொல், டான்சேன்! ஒன்றே மனிதகுலம், ஒருவனே பரம்பொருள்-என்ற சர்வ மத சமரசக் கொள்கையை நிலைநாட்டத் தன்னையே அர்ப்பணித்து வாழும் ஒரு மாபெரும் சக்ரவர்த்தி அக்பரின் ராஜசபையில் ஆஸ்தான மகா கவியாக விளங்கும் உனக்குத் தற்பொழுது ஏதோ ஒரு பயங்கரமான சோதனை, ஏற்பட்டிருப்பதாக நினைக்கிறேன்.

டான்: ஆம், குருதேவா! விவரமாகச் சொல்கிறேன்.

ஒரு நாள்... ராஜ சபையில்...

(காட்சி விரிகிறது. இடம்-அக்பரின் ராஜசபையில் அனை வரும் கூடி உள்ளனர்)

அக்: (டான்சேனைப் பார்த்து) மகாகவி! நீங்கள் பாடும் தேனமுதக் கான மழைக்குத் தான் எவ்வளவு சக்திகள்? ஆஹா! பகுத்தறிவே இல்லாத பறவைகளுக்கும், மிருகங்களுக்கும் மதி மயக்கம்! பட்டமரத்திற்கும் பசுமைக் கோலம்! பயிர், செடி, கொடி களுக்கெல்லாம் வானளவுக்கு வளர்ச்சி! மனித இதயங்களில் எங்கெங்கும் சாந்தி சமாதானம், பரம்பொருளின் பக்தி! சங்கீதத்திற் குள்தான் எவ்வளவு மாயாஜாலம்? எவ்வளவு சித்துக்கள்?

டான்: ஷா இன் ஷா ! இதே சங்கீதம், ஒரு வகைப்பட்ட சங்கீதப் பறவைகளின் சாவிற்கும் காரணமாகி விடுவது தங்களுக்குத் தெரியுமா?

அக்: சாந்தி தரும் சங்கீதம் சாவையுமா ஏற்படுத்தி விடுகிறது? எப்படி என்று சொல்லுங்கள், மகாகவி!

டான்: ஷா இன் ஷா ! அதையும் சொல்கிறேன். (டான்சோ சொல்லும் காட்சியும் விரிகிறது.)

அகணம் என்ற ஒரு வகைப்பட்ட மென்மைத் தன்மை அமைந்த சங்கீதப் பறவைகள்-இப்பறவைகளைப் பிடிக்கவே முடியாது. இப்பறவைகளின் இறைச்சி மிகமிகச் சுவையானது. இவற்றைப் பிடிப்பவர்கள் எங்கேயாவது திறந்த வெட்ட வெளியில் இருந்து கொண்டு, புல்லாங்குழலை மிக இன்பமாக ஊதுகின்றார்கள். இசை இன்பத்தில் மயங்கும் சங்கீதப் பறவை களாகிய அகணம் கூட்டம் கூட்டமாகப் பறந்து வந்து தரையில் உட்கார்ந்து தன்னை மறந்து மயங்கி நிற்கும்.

அக்: பிறகு?

டான்: திடீரென்று பறவைகள் இசையில் மயங்கிக் கிடக்கும் சரியான நேரம் பார்த்து-

சூரஜ்கான்: அதாவது, சங்கீதப் பறவைகள், உயிரில்லாத ஓவியங்களைப் போல, சிற்பங்களைப் போல, அசைவில்லாமல் இருக்கின்ற நேரத்தில்....அப்படித்தானே மகாகவி?

டான்: ஆம்! அப்படிப்பட்ட நேரத்தில்-காதால் கேட்க முடியாத மிகக் கொடூரமான சத்தங்களை எழுப்புவார்கள். இசை இன்பத்தில் தன்மை மறந்த சங்கீதப் பறவைகள் - கொடூரமான ஓசைகளைக் கேட்க முடியாமல் மிகமிகப் பரிதாபமாக - அப்படி, அப்படியே உயிரை விட்டு விடுகின்றன. ஷா இன் ஷா! (காட்சியும் மறைகிறது)

அக்: கேவலமான தின்னும் சுவைக்காக-மனிதன் அற்புதமான கடவுளின் ஒரு சங்கீத சிருஷ்டிப்பையே அழித்து விடுகிறானே?

சாந்த்கான்: ஷா இன் ஷா ! மனித இதயத்தில் சாந்தி சமாதான பக்திகளை வளர்க்கும் இதே சங்கீதத்தில் ஒரு ராகம்...இதைத் தொடர்ந்து ஒருவன் பாடிக் கொண்டே வந்தால், பாடகன் கை கால்கள் இழுத்து முடமாகி விடுவான்!

அக்: அப்படி ஒரு ராகமா?

சூரஜ்: ஷா இன் ஷா ! மற்றொரு ராகம் - அதை முழுவதுமாகத் தொடர்ந்து பாடினால் - பாடகனின் உடலே பற்றி எரிந்து சாம்பலாகி விடும்! சுற்றுப்புற சூழல்களும் கரிந்து தீயால் வெந்து நாசமாகும்!

(அக்பர் அதிர்ச்சியுடன் டான்சேனைப் பார்க்கிறார்)

டான்: ஷா இன் ஷா! கவிஞர் சூரஜ்கான் சொன்னது உண்மை தான்! அந்த ராகத்தின் பெயர் தீபக் ராகம்!

கவிஞனின் சப்தஸ்வரங்கள், மகா சக்தி வாய்ந்தவை! பாடலும் சாகாவரம் பெற்றதாக அமைந்து பாடகனும் தன்னை மறந்து ஊன் உருக, உயிர் உருகப் பாடத் தொடங்கி விட்டால் அப்பாடலில் மயங்கி-பரம் பொருளே தன் அருவத்தை ஓர் உருவமாக்கிக் கொண்டு பாடகனைத் தேடி ஓடோடி வருவான்! அதுமட்டுமா? பஞ்ச பூதங்களையும் ஆட்டிப் படைக்கும் சக்தி கூட, இசைஞான சப்த ஸ்வரங்களுக்கு உண்டு!- கிடுகிடுவென்று நிலத்தை நடுங்க வைக்கும்! நீரை மழையாகப் பொழிய வைக்கும்! தீயை எழுப்பித் திக்கெலாம் அழிக்கும்! காற்றைத் தென்றலாகவும் மாற்றும்! சுழன்று வீசும் சூறாவளியாகவும் மாற்றும்! வானத்தில் சந்திர சூரிய, விண்மீன்களையும் மாற்றிக் காட்டி ஆட்டிப் படைக்கும்!

சாந்த்: ஷா இன் ஷா! நம் மகாகவிக்கு தீபக் ராகம் பாடக் கூடத் தெரியும்!

அக்: கவிஞர்களே! மகாகவி டான்சேனுக்கு தீபக் ராகம் பாடத் தெரிந்திருக்கலாம். இதை நம்புகின்றேன். ஆனால் இந்த ராகத்தைத் தொடர்ந்து பாடி முடித்தால், பாடகன் சாம்பலாக எரிந்து போவான் என்பதை மட்டும் என்னால் நம்ப முடியாது!

டான்: ஷா இன் ஷா ! தீபக் ராகத்தின் சக்தியில் உங்களுக்கு நம்பிக்கை இல்லையா?

அக்: மகாகவி! எனக்கு உறுதியாக நம்பிக்கை இல்லை! தீபக் ராகம் பாடகனைச் சாம்பலாக்கி விடும் என்பது, வெறும் மூட நம்பிக்கை.

டான்: இசையின் ஜீவனுக்குள் இறைவன் வாழ்வதாக ஷா இன் ஷா நம்புவதால் - இந்த நல்ல நம்பிக்கை - தீபக் ராகம் தீய்த்து அழிக்கும் உண்மையை நம்ப மறுப்பதாக நினைக்கிறேன். ஆனா லும் தீபக் ராகம் தொடர்ந்து பாடப்படும் பொழுது - இது. பாடகனை சாம்பலாக்கி அழித்து விடும் என்பது மட்டும் உண்மையிலும் உண்மை, ஷா இன் ஷா !

அக்: அப்படியல்ல மகாகவி! படைக்கும் சக்திக்கும், காப்பாற்றி வாழவைக்கும் சக்திக்கும் பாத்தியப்பட்ட கடவுள் மட்டுமே- அழிக்கும் சக்திக்கும் ஆதி காரணமாக விளங்குபவர் என்பதை நான் நம்புகின்றவன்! கடவுளுக்கும், தீபக் ராகத்தின் அழிக்கும் சக்தியை நம்பாமல் இருப்பதற்கும் சம்பந்தமே இல்லை, மகாகவி!

இறைவனிடம் உள்ள எல்லாம் வல்ல சக்தி, இறைவனால் படைக்கப்பட்ட இசை ராகங்களுக்கு எப்படி இருக்கமுடியும், மகாகவி?

டான்: ஷா இன் ஷா அவர்கள், வேறு எந்த அடிப்படையில் தீபக் ராகத்தின் தீய்த்து அழிக்கும் சக்தியை நம்ப மறுக்கிறார் என்பதை, நான் தெரிந்து கொள்ளலாமா?

அக்: நம்புவதானாலும் - நம்பிக்கை இல்லாவிட்டாலும், இரண்டிற்குமே காரணம் இருக்க வேண்டும், மகாகவி! எதையும் காரண, காரியத்துடன் ஆராய்பவன் நான்! கண்ணால் கண்டிராத ஒன்றை நம்புவதே மூட நம்பிக்கை!

டான்: ஷா இன் ஷா! அதைப்போல உண்மையான ஒன்றைப் பொய் என்று சொல்வதும் கூட மூடநம்பிக்கை தான் , ஷா இன் ஷா!

அக்: விஷம் என்று தெரிந்தும் விஷப் பரிசோதனைக்கு சந்தர்ப்பம் தரக் கூடாது, மகாகவி!

டான்: ஷா இன் ஷா! பாலைப் பாலென்று சொல்லலாம், ஆனால் விஷத்தை விஷமில்லை என்று சொல்லக்கூடாது, ஷா இன் ஷா!

அக்: மகாகவி! நான் நம்பாத காரணத்தைச் சொல்கிறேன், கேளுங்கள்! தீபக் ராகம் பாடுபவனைச் சாம்பலாக்கி விடும் என்பது உண்மையானால்- இதை சொல்லிக் கொடுத்த குரு முதலில் சாம்பலாகி இருக்க வேண்டும் இல்லையா?

சூரஜ்கான்: உண்மைதான், ஷா இன் ஷா!

அக்: அடுத்து தீபக் ராகத்தைப் பாடத் தெரிந்து கொண்டபின், நீங்கள்-இந்த ராகத்தைப் பாடிப் பாடிப் பழகிப் பார்க்கும் பொழுதே, சாம்பலாகி இருக்க வேண்டும், இல்லையா?

சாந்த்: உண்மைதான் - ஷா இன் ஷா!

அக்: தீபக் ராகம் பாடத் தெரிந்த நீங்கள் உயிரோடு என் கண் எதிரில் நடமாடும் பொழுது, என்னால் எப்படி தீபக் ராகம் பாடகனைத் தீய்த்து சாம்பலாக்கி விடும் என்பதை நம்பமுடியும்?

(அஹ்ஹஹ்ஹா-வென்று சிரிக்கிறார்)

டான்: ஷா இன் ஷா! தீபக் ராகம் மற்ற ராகங்களைப் போல் அல்ல! சொல்லிக் கொடுப்பதிலோ-தெரிந்து கொள்வதிலோ-பிறகு பாடிப்பாடிப் பழகுவதிலோ சில நிதானங்கள், சில தற்காப்புக்கள் எல்லாமே உண்டு. ஷா இன் ஷா !

அக்: மகாகவி! நீங்கள் எதைச் சொன்னாலும், நான் நம்பத் தயாராக இல்லை. இத்துடன் தீபக் ராகம் பற்றிய நம் விவாதத்தை முடித்துக் கொண்டு விடுங்கள்.

(கேலியாகச் சிரிக்கிறார், அக்பர்)

டான்: (கோபமாக) ஷா இன் ஷா ! என் இசை ஞானத்திற்கு நீங்கள் சவால் விடுவதாக எனக்குள்ளாகப் படுகிறது.

அக்: மகாகவி! நீங்கள் நம்புங்கள்! நம்புவது உங்கள் நம்பிக்கை! நான் நம்பவில்லை! இது என் அவநம்பிக்கை! நடுவில் உங்களுக் கென்ன நஷ்டம்?

டான்: ஷா இன் ஷா ! ஒரே பொருளுக்குள் உண்மையும், பொய்யும் சேர்ந்து எப்படி இருக்க முடியும் , ஷா இன் ஷா ?

அக்: மகாகவி! நான் நம்புவதானால் - நீங்கள் பாடிக் காட்டித்தான் உங்கள் உண்மையை நிரூபிக்க வேண்டும்.

டான்: ஷா இன் ஷா ! நிரூபித்தால்தான் நீங்கள் நம்புவீர்கள் என்றால் - அதற்கும் நான் தயாராக இருக்கிறேன்.

சூரஜ்கான்: விவாதத்தை இத்துடன் நிறுத்தி விடுங்கள், டான் சேன்! ஏனென்றால் - நிரூபணத்திற்காக நீங்கள் தீபக் ராகத்தைப் பாடி வெற்றி பெற்று விட்டால் - அவ் வெற்றியைக் காண நீங்கள் உயிரோடு இருக்க மாட்டீர்கள். நீங்கள் நிரூபிக்காமல் போய் விட்டால் - அப்பொழுதும் தோல்வியைத் தாங்கிக் கொண்டு நீங்கள் உயிரோடு வாழ மாட்டீர்கள்!

சாந்த்: எப்படிப் பார்த்தாலும், இந்த விஷப் பரிசோதனையால் இம் மகாராஜசபையில் ஒரு நவரத்தினம் எரிந்து அழிந்து போய் விடும். இதை, நாங்கள் எங்கள் கண்களால் பார்க்கத் தான் வேண்டுமா, டான்சேன்?

டான்: (வைராக்கியமாக) ஷா இன் ஷா! கடைசியாகக் கேட்கிறேன். தீபக் ராகம் பாடினால் பாடகன் தீய்ந்து சாம்பலாகி விடுவான் என்பதை நம்புகிறீர்களா? இல்லையா?

அக்: மகாகவி! நான் சொல்லப் போகும் பதிலில் உங்களுக்கு மரணக் கயிறு தொங்குகிறது. மகாகவி! நான் பதில் சொல்லத்தான் வேண்டுமா?

டான்: ஷா இன் ஷா! தாங்கள் பதில் சொல்லித் தான் தீர வேண்டும்.

அக்: மகாகவி! உங்களுக்கு இவ்வளவு வைராக்கியம் தேவை இல்லை. நானும் வைராக்கியத்தில் குறைந்தவன் அல்ல. என் பதிலைக் கேட்டுக் கொள்ளுங்கள். தீபக் ராகத்தைப் பற்றிய உங்கள் விளக்கத்தை நான் நம்பவில்லை.

டான்: ஷா இன் ஷா! எனக்குப் பதினைந்து நாட்கள் அவகாசம் தாருங்கள். இதே சபையில், நானே தீபக் ராகத்தை அரங் கேற்றி உண்மையை நிரூபிக்கப் போகிறேன்! இது- அமரர் களாகிவிட்ட என் தந்தை முக்சந்த் மிஸ்ரா, குருநாதர் முகமது காஷ் உயிரோடு நடமாடும் குருநாதர் ஹரிதாஸர் - என்னைப் பாதுகாத்த குவாலியர் ராமச்சந்திர ராஜா, ஷா இன் ஷா அக்பர் சக்ரவர்த்தி இந்த ஐவர் மீதும் ஆணை வைத்துப் பரம்பொருளின் பெயரால் இந்த சபையில் சத்தியம் செய்கிறேன்! இது சத்தியம்! சத்தியம்! சத்தியம்!

(காட்சி மறைகிறது)

டான்: இது தான் நான் இங்கு தங்களை தரிசிக்க வந்ததன் முதல் காரணம் (அப்பொழுது ஹரிதாஸரின் பழைய மாணவி மாய்பிருபா பல்லக்கில் வந்து இறங்கி, ஹரிதாஸரின் பாதங்களில் மலர்களைக் கொட்டி நமஸ்கரிக்கிறாள்)

ஹரி: (கைகளை உயர்த்தி ஆசீர்வதித்து) மாய்பிருபாவிற்கு சர்வ சுப மங்களம்! மாய்பிருபா! நாம் வணங்கும் பரம் பொருள் தான், இன்று உன்னை இங்கே அனுப்பி வைத்திருக்கிறார். மாய்பிருபா! இக்கவிஞர் டான்சேன் என் மாணவர்! தற்பொழுது அக்பர் மகா சக்ரவர்த்தியின் ராஜசபையில் ஆஸ்தான மகாகவிஞ ராகவும், சபையில் உள்ள நவரத்தினங்களில் ஒருவராகவும் இருந்து வருகிறார்.

மாய்பி: மகா கவிஞருக்கு என் நமஸ்காரங்கள்! (வணங்குகிறாள்)

டான்: தாயே! உங்களுக்கு என் நமஸ்காரம்! (வணங்குகிறார்)

ஹரி: டான்சேன்! மாய்பிருபாவும் என் மாணவி! மிக அற்புதமாக அனைத்து ராகங்களையும் பாடக்கூடிய மாணவி, மாய்பிருபா! சுருக்கமாகச் சொன்னால்-மாய்பிருபா கவி மழை பொழியும் ஒரு கான மேகம்! (மாய்பிருபாவைப் பார்த்து) மாய்பிருபா! நீ உன் இல்லத்திற்குச் சென்று எல்லோருடைய அனுமதியும் பெற்றுக் கொண்டு-இங்கே பிருந்தாவனத்தில் வந்து பதினைந்து நாட்கள் தங்கி இருக்க வேண்டும். பிறகு, நாம் இருவரும் அக்பர் மகாசக்ரவர்த்தியின் ராஜசபைக்குச் சென்று திரும்பிவர வேண்டும்.

மாய்பி: குருதேவா! தங்கள் உத்தரவின் படியே விரைவில் வந்து விடுகிறேன்.

ஹரி: மாய்பிரூபா! பதினைந்து நாட்கள் பிருந்தாவனத்தில் என்னுடன் ஏன் தங்க வேண்டும் என்று, நீ கேட்கவே இல்லையே?

மாய்பி: என் ஞானசற்குருவாகிய தாங்கள் என் தந்தைக்குச் சமமானவர்! குருவின் உத்தரவின்படி மாணவர்கள் நடந்து கொள்ள வேண்டுமேயன்றி ஏன் என்ற கேள்வியைக் கேட்கக் கூடாது. சுவாமி! எனக்கு உத்தரவு கொடுங்கள், புறப்பட்டுப் போய் விரைவாகத் திரும்பி வந்து விடுகிறேன்.

ஹரி: (ஆசீர்வதித்த நிலையில் கைகளை உயர்த்தி) சர்வ சுப மங்களம்! போய் வா, மகளே! (டான்சேனையும் வணங்கி விட்டுப் பல்லக்கில் ஏறிச் செல்கிறாள், மாய்பிரூபா)

ஹரி: (கண் மூடிச் சிறிது தியானித்து) கோகுல கிருஷ்ணா! கோவர்த்தநேசா! துவாரகை நாதா! எல்லாம் உன் திருவருள்!

(பிறகு டான்சேனைப் பார்த்து) நீ இங்கு வந்ததற்குரிய இரண்டாவது காரணத்தைச் சொல், டான்சேன்!

டான்: சுவாமி! இங்கு ஒரு மகாகவிச் சக்ரவர்த்தி கண்ணில்லாத நிலையிலேயே ஒப்பற்ற பாடல்களைப் படைத்து வருகிறார் என்று கேள்விப்பட்டேன்.

ஹரி: ஆம், டான்சேன்! வல்லபாச்சாரியார் மகானிடம் ஞானோபதேசம் பெற்று, ஆய்ப்பாடி கோகுலக் கண்ணனின் கோவிலில் பகவான் கிருஷ்ணனின் பிரத்தியக்ஷதரிசனம் பெற்ற மகாகவி சூர்தாஸ் தான், நீ குறிப்பிடும் மகாகவி. அவரும் உன்னைப் போல் எழுத்தறிவு, கல்வியறிவு இல்லாத பிறவிக் கவிஞர் தான்!

டான்: சுவாமி! சூர்தாஸின் பாடல்கள் உலகமெல்லாம் பரவி வருகின்றன. நானும் அவர் பாடல்களைக் கேட்டு மெய்சிலிர்த்துப் போய்விட்டேன். என்றாலும் அவரைப் போல் பாடல்களைப்

படைக்க முடியாது சுவாமி! தற்பொழுது அக்பர் சக்ரவர்த்தியைப் பள்ளி எழுப்பக் காலையில் நான் பாடும் பள்ளி எழுச்சிப் பாடலே, சூர்தாஸின் பாடல்தான்! மகாகவி சூர்தாஸை, என் ஜீவன் பிரிவ தற்குள் தரிசித்து, என் காதால் அவரது பக்தி ஜீவகளை ததும்பும் பாடல்களைக் கேட்டு விட வேண்டும் என்ற ஆசை தான்-நான் இங்கு வந்த இரண்டாவது காரணம்!

ஹரி: டான்சேன்! சூர்தாஸ் கோகுலத்தில் இருப்பார், அல்லது கோவர்த்தனத்தில் இருப்பார், அவரைக் காணப் புறப்படுவோம் . வா!

*(ஹரிதாஸர் டான்சேனுடன் புறப்படுகிறார்)*

## காட்சி 19

*(இடம்:- மதுராபுரி, கோவர்த்தனம், ஸ்ரீநாதர்கோவிலின் வெளியில் சூர்தாஸ் தலைமீது கைகளைக் குவித்தபடியே தியானத்தில் உள்ளார். அவர் எதிரில் பக்தர்கள் சூழ உட்கார்ந் துள்ளார்கள். ஹரிதாசரும், டான்சேனும் வருகின்றனர்)*

ஹரி: டான்சேன்! (சூர்தாஸைக் காட்டி ) இவர்தான் சூர்தாஸ்! தற்பொழுது ஏதோ தனக்குள்ளாக ஒரு கற்பனையிலோ அல்லது தியானத்திலோ உட்கார்ந்துள்ளார்.

டான்: குருதேவா! வாத்தியங்கள் எதுவுமே இல்லையே? வாத்தியக் கருவிகள் இல்லாமலா, இம்மகாகவி ஜீவகளை ததும்பும் பாடல்களைப் படைத்துக் கொண்டுள்ளார்?

ஹரி: டான்சேன்! இவர் பாட ஆரம்பித்தாலே போதும், விண்ணிலிருந்து வீணை மீட்டும் நாதம், குழலூதும்கானம், ஜால்ராவின் தாளம், நர்த்தன சலங்கைகளின் ஒலி இவை எல்லாமே தானாகவே கேட்க ஆரம்பித்து விடுகின்றன!

சூர்தாஸின் பாடலின் நாத கானத்தை எதிர்பார்த்து மனித பக்தர்கள் மட்டுமா காத்திருக்கிறார்கள்? வானில் சாகாவரத்துடன் வாழ்ந்து வரும் தேவாதி தேவர்களும், தேவதைகளும் கூட- சூர்தாஸின் இசைஞானக் கடலில் நீந்தித் திளைக்கக் காத்துக் கிடக்கின்றார்கள்! அதனால்தான்-

மனிதக் கண்களுக்குப் புலப்படாத இசைக் கருவிகளின் இன்னிசை கானம், பின்னணியாகத் தாமே எழும்பி விடுகின்றன!

டான்: ஆஹா! இம்மகாகவிக்குப் பரம்பொருளே இத்தகைய வரத்தைத் தந்திருக்கிறார், குருதேவா!

ஹரி: டான்சேன்! இம்மகாகவி தான் படைக்கும் பாடல்களை எழுதி வைத்துக் கொண்டு பாடுவதும் இல்லை! பாடிய பிறகு எழுதி வைப்பதும் இல்லை! ஆனாலும்-

டான்: சொல்லுங்கள், குருதேவா!

ஹரி: இவருடைய சிஷ்ய பக்தர்கள் இவர் பாடும் பொழுதே இவர் பாடல்களை எழுத்தாணி கொண்டு ஏட்டில் எழுதிப் பாது காத்து வருகிறார்கள். சூர்தாஸின் பாடல் தொகுப்புக்கு 'சூரசாகரம்' என்றும் பெயர் சூட்டி இருக்கிறார்கள்.

டான்: குருதேவா! மிகப் பொருத்தமானபெயர்! 'சூரசாகரம்'! - ஒரு மாபெரும் பக்தி உணர்ச்சியை அலைகளாகக் கொண்ட ஓயா அலைகடல்! சூரசாகரத்திலிருந்து-உலகம் உள்ள வரையிலும் பக்தி அலைகள், மகாகவிச் சக்ரவர்த்தியின் சாகாவரம் பெற்ற பாடல்களை முழங்கிக் கொண்டிருக்கும்! சூரசாகரம் மாபெரும் பக்திச் சுரங்கம்! ஞான உண்டியல்! கவித்துவப் புதையல் பொக்கிஷம்!

(அப்பொழுது வானத்திலிருந்து மிக நுட்பமாக வீணை மீட்டும் நாதம், குழலூதும் கானம், ஜால்ராவின் தாளம், நர்த்தன சலங்கை ஒலிகள்- தவழ ஆரம்பிக்கிறது. கூட்டத்தில் ஒரே அமைதி நிலவுகிறது.)

ஹரி: (மிகவும் தாழ்ந்த குரலில்) டான்சேன்! சூர்தாஸ், கவி மழை பொழியத் தயாராகி விட்டார். அவர் பாடி முடித்ததும் அவரை சந்திக்கலாம். அப்படியே, இங்கேயே உட்கார்ந்து விடுவோம்! கவியமுதத்தேன் மழையில் நாமும் நனைந்து ஆத்ம சாந்தியால் குளிர்வோம்.

(இருவரும் அப்படியே கீழே அமர்கின்றனர். சூர்தாஸின் பக்கத்தில் உள்ள சில சிஷ்யர்கள் ஏடும், எழுத்தாணியும் எடுத்து வைத்துக் கொண்டு சூரசாகரக் கவிதைகளை எழுதத் தயாரா கின்றனர்)

சூர்தாஸ் (உணர்ச்சியுடன் பேசுகிறார்)

கோகுலம்! சர்வ லோக பரம புருஷ நாயகனின் பரமபத பக்திக்குரிய நாயகியர்களாக, கள்ளங்கபட மற்ற கோபியர்கள் கோகுலத்தில் தான் வாழ்ந்தார்கள்! கோபியர் பக்தியும், காதலுமே கோபாலனிடம் அழைத்துச் செல்லும் முக்தி நெறி! கோபதாபக் கோதை- ராதையின் காதல் பாதையில்தான் கோவர்த்தனக் கண்ணன் துள்ளித் துடித்து ஓடோடி வந்தான்!

இந்தக் குருடனுக்குரிய ஏக்கம், ஆதங்கம், பொறாமை பேராசை, துடி துடிப்பு, பதைபதைப்பு, பிறந்த மனிதப் பிறவியின் கனவுகள் எல்லாமே-

நாமெலலாம் கோபியராக மாட்டோமா? ராதையின் பயமில்லாத பக்தி வெள்ளத்தில் நீந்தித் திளைக்க மாட்டோமா?

பெண் குரல்

(பாடுகிறார். சூர்தாஸின் மனக் கண்ணில் கோகுலத்தில் கோபியர் கூடி ஆடிப் பாடிக்களிக்கின்றனர்)

ஆ— ஆ— ஆ—

ஹரே கிருஷ்ணா! ஹரே கிருஷ்ணா! ஹரே கிருஷ்ணா!
கிருஷ்ணா, கிருஷ்ணா, கிருஷ்ணா, கிருஷ்ணா, கிருஷ்ண ஹரே!
கோகுல கிருஷ்ணா! கோபால கிருஷ்ணா! கோவர்த்த நேசா!
மாயவா! கண்ணா! மாதவா! மகாப்பிரபு! முரளி! முராரி!
உனக்கு மேல் எளியவன் -
ஏழையைத் தேடி ஓடி வருபவன் -
எவனுண்டு மண்ணுலகில்?
எவனுண்டு விண்ணுலகில்?
எவனுண்டு எவ்வுலகில்?
கிருஷ்ண கிருஷ்ண-முகுந்தா! முராரி! கேசவா! வாசவா!
வேதரிஷிகள் யாகம்!
விண்ணதிரும் வேத மந்த்ர கோஷம்!
யாக அக்னியில் பல்லாயிர நெய்க்குடம்!
அவிர்பாகம் ஏற்றிட,
ஆதிமூலப்பரம் பொருளை வேண்டி -
எதிர்பார்த்து எதிர்பார்த்து ஏங்குகிறார்! ஏங்குகிறார்!
ஏங்கித் தூங்குகின்றார்! தூங்கி விழித்துத் துடிக்கிறார்! துவள்கிறார்!

முகுந்தா! உன் முகம் காணத் துடிக்கிறார்!
கடும்பசி! கடுங்குளிர்! கனமழை! படுவெய்யில்!
அடாப்பனி!அவற்றிடையே யாகம்! ஆதிவேத முழக்கம்!
தாமரைக் கண்ணா! உன் முகமலர்காண-
தவமுனிவர் தவிக்கிறார்! பரிதவிக்கிறார்! பதைபதைக்கிறார்!
கோகுல கண்ணா! கோபியர் கண்ணா! ராதே கண்ணா!
கிருஷ்ணா!கிருஷ்ணா!
கிருஷ்ணா, கிருஷ்ணா, கிருஷ்ணா, கிருஷ்ணா,கிருஷ்ணா
ஹரே!

எழுத்தறிவில்லா ஏழை கோபியர் நாங்கள்!
வேதமா ஓதினோம்? வேள்வியாகமா செய்தோம்?
நீயோ கண்ணா! நீலமேகா! சியாமளா!
ஏழை கோபிகள் குடிசைகளில்-
நீயாகவே-நீலமேகா! நிர்மலா! நித்ய மங்களா!
தேடி ஓடி வந்தாய்! தேமதுரக் கண்ணா!
திருவடிகள் நொந்தாய்! திவ்ய சொரூப பரமபத நாதா!
வெண்ணெய் கேட்டுக் கையேந்தி நின்றாய்! வெண்ணெய்,
வெண்ணெய் என்று -

மாதவா! கோவிந்தா! மதுசூதனா! முரளி! முராரி!
திருட்டுக் கண்ணனாகி தின்ற வெண்ணெய்க்காக
தாயிடம் அடிபட்டாய்! தாமோதரனானாய்! தனி முதலே!
தாமோதரா!

ஏழை கோபியர் வெண்ணெய்க்கு-
ஏங்கித் திரிந்தவனே, கிருஷ்ணா!
கோபியர் வெண்ணெய்தான் கோடி இன்பம் உனக்கு!
கோடான கோடி சுகம் உனக்கு!
கோகுல கிருஷ்ணா! கோபி கிருஷ்ணா! ராதே கிருஷ்ணா!
கிருஷ்ணா, கிருஷ்ணா, கிருஷ்ணா, கிருஷ்ணா,
கிருஷ்ணா ஹரே!
கடவுளவதாரக் கண்ணா! கரைகண்ட வேதரிஷி கூட்டம்-

கையால் தொடமுடியுமாகண்ணா?
தொட்டுத் தூக்கிக் கட்டித் தழுவி
கொஞ்சிக் குலவ முடியுமா? கோகுல பாலா! கோபாலா!
கோபிக்கு நீ தந்த முத்தம்-
கோடி யாகம் முடித்த ரிஷியும், பெறுவானா- கண்ணா?
அன்பான கோபிக் கெல்லாம் ஆதிமூலக் கண்ணன்
ஆசையுடனளித்த முத்தம்-
ஆதிமூலப் பிரசாதம்! அவிர்பாகம் எங்களுக்கு! கிருஷ்ணா!
கிருஷ்ணா!

ஈனரின் சபை நடுவே-
மானமழிந்தாள்-பாஞ்சாலி! மதியழிந்தாள்-திரௌபதை!
பக்தையாய், தங்கையாய்-
பரந்தாமா! உனை அழைத்தாள்! அர்ப்பணித்தாள், தன்னை!
விலக்கான பெண்ணென்று ஒதுக்காமல்-கண்ணா!
விரைந்தோடி வந்து வீசி எறிந்த புடவை
அடங்காக் கடலலைகள்!- அவ்வளவும்
பக்தைக்கு நீ தந்த அவர் பாகம் - கண்ணா! பக்திக்கு அடிமை
நீ-கண்ணா!

இளமையில் நண்பன் - ஏழைக்குசேலன்
கந்தல் துணியில் கட்டி வந்த அவலை
பிடி பிடியாய் தின்று பெருமகிழ்வு கொண்டாய்!
பக்தனையே தின்றாய்! பக்தனையா தின்றாய்?
பக்தனுக்குள் உன்னையே தின்றாய்!
கட்டியணைத்தாய் குசேலனை! கனக மழை பெய்தாய்!
கனக மணி ஆசனத்தில் வைத்தாய்! காலடிகள் வருடினாய்!
பாசமுடன் செய்தாயே, பாத பூஜை ? பாத பூஜையா
செய்தான், பரந்தாமன்?
குசேலனுக்குப் பரந்தாமன் தந்தான் அவிர்பாகம்!
கண்ணனின் அவிர்பாகம்
கடைசியில் பக்தனுக்கே!

கூப்பிட்ட குரலுக்கெல்லாம் ஓடி வரும் கிருஷ்ணா!
கோபாலா!

குருக்ஷேத்ரப் போரில்-
விஜயனுக்குத் தேரோட்டி -
விஸ்வரூபம் காட்டி -
தொண்டடிமை செய்ததெல்லாம்
நண்பனுக்கு நாயகனின் அவிர்பாகம்!நட்புக்கு
எம்பெருமான் அவிர்பாகம்!

கல்லான ரிஷி பத்னி அகல்யை
சாபமொழித்த சரணாரவிந்தம்
தர்மத்தாய் பெற்ற விமோசன அவிர்பாகம்!தாய்க்கு
மகனளித்த அவிர்பாகம்!

ஹரி ஹரி ! கோபாலா! மகாப்பிரபு! மாதவா ! கண்ணா!
கிருஷ்ணா, கிருஷ்ணா, கிருஷ்ணா, கிருஷ்ணா, கிருஷ்ண
ஹரே!

பாலகன் மழலைக்கும் பெரும் புகழ்! பக்திப் பரிசு!
பிரகலாத மழலைக்குப் பெரும் பக்தி ஞானம்!
ஆதிமூலமே என்றலறிப் பிளிறிய ஆனைக்கும்
அருளிய கண்ணா! ஹரே கிருஷ்ணா!கோபி கிருஷ்ணா!
கிருஷ்ணா, கிருஷ்ணா, கிருஷ்ணா, கிருஷ்ணா, கிருஷ்ணா,
கிருஷ்ணா, ஹரே, ஹரே!

சூர்தாஸ் (பாடுகிறார்)

குருடனையும் மறவாரே! குருடனையும் துறவாதே!
கோபி கிருஷ்ணா! ராதே கிருஷ்ணா! கோகுலக்
கண்ணா! கோபாலா! முகுந்தா!

கிருஷ்ணா, கிருஷ்ணா, கிருஷ்ணா, கிருஷ்ணா, கிருஷ்ணா, கிருஷ்ணா, ஹரே! ஹரே!

சூர்தாஸ் பாடலோடு, இசைக் கருவிகள் முழங்க கோகுலத்தின் கோபியர் பக்தியோடு பாடி ஆடும் காட்சியும் விரிகிறது. காட்சி

களின் நடு நடுவே சூர்தாசும் ஏனைய பக்தர்களும் கைதட்டிக் கொண்டு பாடி ஆடிக்குதிக்கும் காட்சிகளும் தோன்றித் தோன்றி மறைகின்றன.

(சூர்தாஸ் பாடி முடித்ததும்-ஹரிதாஸரும், டான்சேனும் சூர்தாஸிடம் செல்கின்றனர்.

ஹரி: மகாகவியின் அதி அற்புதமான பாடல்களுக்கு - ஜீவகளை சொட்டும் படைப்புக்களுக்கு-சர்வ மங்களமுண்டா கட்டும், மகாகவி! நான்தான் ஹரிதாஸ்! பிருந்தாவனத்திலிருந்து வந்திருக்கிறேன்.

சூர்: ஹரிதாஸ் சுவாமிகளை நமஸ்கரிக்கின்றேன்.

ஹரி: (எழுதிக் கொண்டிருக்கும் பக்தர்களைப் பார்த்து) சிஷ்யர்களே! சூரசாகரத்தில் இதுவரையிலும் எவ்வளவு கவிதைகள் இடம் பெற்றுள்ளன?

சிஷ்யர்கள்: சுவாமி! ஐயாயிரம் கவிதைகளுக்கு மேல் சூர சாகரத்தில் சேர்ந்து விட்டன. மேலும், புதுப் புதுப் பாடல்களை மகாகவி பாடிக் கொண்டுதான் போகின்றார்.

ஹரி: கிருஷ்ண பக்தர்களுக்கு, சூரசாகரம் ஓர் அழிவற்ற தெய்வப் பிரசாதம். உலகம் உள்ள அளவும் அவை, பலப்பல காலங் களில் பலப்பல மகாவித்வான்களால் பாடப்பட்டுக் கொண்டே இருக்கும் என்பது சத்திய உண்மை.

சூர்: எல்லாம் நம் நாயகன் நவமோகன கிருஷ்ணனின் கிருபா கடாக்ஷம், சுவாமி!

ஹரி: மகாகவி! நான் என்னுடன் என் மாணவன் கவிஞர் டான்சேனையும் அழைத்து வந்திருக்கின்றேன். டான்சேன், அக்பர் மகா சக்ரவர்த்தியின் ஆஸ்தான மகாகவிஞர்!

டான்: அடியேன் டான்சேன், கவிச்சக்ரவர்த்தி அவர்களை நமஸ்கரிக்கின்றேன். (சூர்தாஸின் பாதங்களைத் தொட்டு வணங்குகிறார்)

சூர்: கவிஞர் டான்சேன்! என்னை வணங்காதீர்கள்! நமஸ்காரத் திற்குரியவன் நானல்ல கோகுலக் கண்ணன் கோவர்த்த நேசன் தான்- நம் பிரார்த்தனைக் கவிதைகளின் மூலாதார ஜீவன். அவனை வணங்கிக் கொள்ளுங்கள்! அவனுடைய ஆசீர்வாதம் தான்-அழிவற்றது!

ஹரி: மகாகவி! நீங்கள் சொல்வது அவ்வளவுமே சத்திய வேதம்தான்! இருந்தாலும் இன்றைக்கு நான் டான்சேனை உங்களிடம் அழைத்து வந்திருக்கும் அடிப்படை நோக்கமே-தங்கள் வாயிலிருந்து பிறக்கக்கூடிய தீர்க்க தரிசன ஆசி மொழிகள் தாம்!

சூர்: சுவாமிகளே! ஊனக் கண்கள் என் முகத்தில் ஒட்டிக் கொண்டிருந்த ஒரு காலத்தில் ஜோதிடனாக இருந்தேன் என்பது உண்மைதான்! ஆனால் நான் தற்பொழுது ஒரு சாதாரணமான குருட்டுக் கவிஞன்!கிருஷ்ண தரிசனத்தைப் பெற்றவனாக இருந் தாலும் கூட- தற்பொழுது கவிஞர் டான்சேனை நேருக்கு நேராகப் பார்க்க முடியுமா, சுவாமி?

ஹரி: மகாகவி! எக்காலமுமே நீங்கள் முக்காலமும் உணர்ந்த முழு ஞான தவயோகி! பக்தருக்கு பக்தர்! பாடகருக்குப் பாடகர்! கவிஞருக்குக் கவிஞர்!ஞானிக்கு ஞானி! யோகிக்கு யோகி! மனித ஆத்மாக்களுக்கு, நீங்கள் ஒரு மகாத்மா! உங்களுக்குள்தான் பரிபூரணமாகப் பகவான் பரமாத்மா குடி கொண்டுள்ளான்!

சூர்: ஆம்! எழுத்தறிவே இல்லாத குருடனான எனக்கு, என் வாழ்க்கைக்கு - என் பாடலுக்கு - என் சிந்தனைக்கு, செயலுக்கு, கற்பனைக்கு - எல்லாவற்றிற்குமே நாயகன் அந்த கோகுல

கிருஷ்ணன்தான்! அக்கோபாலன் என்னைத் தனக்காக்கினான்! பிறகு, தன்னை எனக்குள் வைத்தான்! அப்பரமபுருஷனே என் நாயகன்! அவன் தான் என்னைப் பாட வைக்கிறான்! பாடும் பாட்டுக்கு சுரம் போடுகிறான்! சுருதி கூட்டுகிறான்! குழலூதி வீணை மீட்டித் தாளமிட்டு நர்த்தனமும் ஆடுகிறான்! என் பரம புருஷன்தான் எனக்குள் எல்லாம்!

ஹரி: மகாகவி! அவன் வழங்கும் அருள்மொழிகள் தங்கள் நாவிலிருந்துதான் வெளிப்பட வேண்டும்! ஏனென்றால் தற்பொழுது டான்சேன் ஒரு மாபெரும் சோதனைக்கு ஆளாகி இருக்கிறார். ஒரு பயங்கரமான சோதனையை வென்று ஒரு சாதனையை படைக்க வேண்டும். முக்காலம் உணர்ந்த ஞானியாகிய தங்கள் வாயால் வரும் ஆசிகளை ஆதாரமாகக் கொண்டு தான், நான் திட்டம் வகுக்க வேண்டும்!

சூர்: கோவர்த்தனேசா! கோகுலக் கண்ணா! கோபாலா!

(சிறிது அமைதியாகத் தியானித்து) கவிஞர் டான்சேனுக்கு தீர்க்காயுள் உண்டாகட்டும்! (சூர்தாஸின் பாதங்களைத் தொட்டு வணங்குகிறார், டான்சேன்.)

ஹரி: மகாகவி! நம் நாயகன் பரம புருஷனிடம் கேட்ட கேள்விக்குப் பதில் கிடைத்து விட்டது. புறப்படுகிறோம், கவிஞரே!

சூர்: (கைகுவித்து) சுவாமிகளை நமஸ்கரித்துக் கொள்கிறேன். (இருவரும் புறப்பட்டுத் தனியாக வருகின்றனர்)

ஹரி: டான்சேன்! குன்று குடை எடுத்த கோபாலன், உன்னைக் காப்பான் ! நீ உடனே புறப்படு! நீ எடுத்த வைராக்கியத்தின்படியே தீபக் ராகத்தை ராஜசபையில் அரங்கேற்றப் பயிற்சி செய்!

தீபக் ராக அரங்கேற்ற நாளில், நானும் மாய்பிரூபாவும் வந்து கலந்து கொள்வோம். இயற்கையையே மாற்றிக் காட்டுவான்-நம் நாயகன், கோகுலக் கண்ணன்!

டான்: (தரையில் விழுந்து வணங்கி விட்டு) தங்கள் உத்தரவுடன் புறப்படுகின்றேன். குருதேவா!

ஹரி: புறப்படு டான்சேன்! தீபக் ராக அரங்கேற்ற நாளில் மாய்பிரூபா பாடும் மேக ராகத்தில் கண்ணன் கருணை மழை பொழிவான் - புறப்படு!

### காட்சி 20

(அக்பரின் பேரவை. அனைவரும் அமர்ந்துள்ளனர். இஸ்லாமிய அமைச்சர் ஒருவர் பேசுகிறார்.)

இஸ்.அமை: ஷா இன் ஷா! நம் இஸ்லாமிய மார்க்கத்தின் அடிப்படையில் சில கருத்துக்களைத் தெரிவிக்க விரும்புகிறேன்.

அக்: சொல்லுங்கள், வஜீர்!

இஸ்.அமை: ஷா இன் ஷா! தாங்கள் இந்துமத கோவில்களுக்குச் செல்கின்றீர்கள்! நெற்றியில் இந்து மதத்தவர்களைப் போல் பொட்டு வைத்துக் கொள்கின்றீர்கள். சீக்கியர்கள் கோவில் கட்ட, அமிர்தசரஸில் இடத்தை மான்யமாகத் தந்ததோடு அவர்களுக்குப் பெரும் ஆதரவையும் அளித்து வருகின்றீர்கள். மதத்தைப் பரப்ப வந்த கிறிஸ்தவப் பாதிரியார் களுக்கும் பெருமதிப்பும் உதவிகளும் செய்கின்றீர்கள்.

அக்: வஜீர்! எனக்கு எம்மதமும் சம்மதம்! எம்மதமும், என் மதம்! இந்துக்களையும், சீக்கியர்களையும், கிறிஸ்தவர்களையும், நம்மையும் படைத்தவர்- யார் வஜீர்!

இஸ்.அமைச்: அனைவரையுமே அல்லாதான் படைத்தார், ஷா இன் ஷா !

அக்: அல்லாவின் பிள்ளைகளில் இந்த அக்பரும் ஒருவன்! என் சகோதரர்களை நான் நேசிப்பதில், தவறென்ன கண்டு விட்டீர், வஜீர்?

இஸ்.அமைச்: ஷா இன் ஷா! இந்து மதத்தவர்கள், நம் மார்க்கத்தின் வழிமுறைகளுக்கும், கலாசாரத்திற்கும் முற்றிலும் மாறுபட்டவர்கள். நம் மார்க்கத்திற்கு விரோதமான ஒன்றாகக் கருதப்படும் பன்றியைக்கூட- இந்துக்கள், வராகவதாரம் என்று கடவுளாக்கி வணங்குகின்றார்கள், ஷா இன் ஷா !

அக்: (மௌனமாக உள்ளார்)

இஸ்.அமைச்: ஷா இன் ஷா! தங்கள் மௌனத்தின் உள்ளார்த்தத்தைத் தெரிந்து கொள்ளலாமா, ஷா இன் ஷா?

அக்: வஜீர்! பன்றி, மாடு, ஆடு, பாம்பு, முதலை, தேள், மீன், ஆமை, மற்றும் செடி கொடிகள்-இவைகளெல்லாம் இந்த உலகத்தில் வாழக் காரணமாக இருப்பவர்-யார் வஜீர்!

இஸ்.அமைச்: எல்லாமே அல்லாதான், ஷா இன் ஷா!

அக்: வஜீர்! என் மௌனத்தின் உள்ளார்த்தத்தை நீங்களே சொல்லி விட்டீர்கள். இறைவன் மனிதனைப் படைத்தான். மனிதன், தன் மனநிலைகளுக்கும் மனசாட்சிக்கும் தகுந்தபடி வழிபாடுகளைப் படைத்துக் கொண்டான். ஒன்றே மனித ஜாதி! ஒருவனே இறைவன்! நான், மனிதன்! அனைத்து மனிதர்களும் என் சகோதரர்கள்! கோவிலையோ, பள்ளி வாசலையோ, தேவாலயத்தையோ கட்டச் சொல்லி, எந்த வேதமாவது சொல்லி இருக்கிறதா, வஜீர்?

இஸ்.அமை: இல்லை ஷா இன் ஷா! ஆனாலும் நாம் பலதலைமுறைகளாக பாரம்பரிய, பாரம்பரியமாகக் காப்பாற்றி வரும் நம் மார்க்கத்தின் கொள்கைகளை...

அக்: எல்லாமே இறைவனைச் சென்று சேரும் மார்க்கங்கள் தாம்! நான் எந்த மதத்திற்கும், மார்க்கத்திற்கும் அடிமை அல்ல. நான் இறைவனுக்கு ஊழியன்! இறைவனின் பிள்ளை. மனித இரக்கமும் நேயமும் சேவையுமே என் கொள்கை! மாசுமருவற்ற மனிதனின் நெஞ்சமே கோவில். அக்கோவிலில் தவழும் சாந்தியே பள்ளி வாசல். அப்பள்ளி வாசலில் செய்யப்படும் மனிதகுல தியாகமே சிலுவை. மூடநம்பிக்கைகள் எல்லாம் சைத்தான்கள். இந்த அக்பர், உலக மனிதர்கள் அவ்வளவு பேரையும், ஒருவனே கடவுள் என்ற மனித நேயப் பாதைக்கு அறை கூவல் விடுக்கப் போகிறான்! அது தான் 'தீன் இலாஹி'! தீன் இலாஹியில் இந்தியாவிலுள்ள அவ்வளவு மதங்களிலும் உள்ள அறிவார்ந்த அம்சங்கள் சங்கமமாகப் போகின்றன. தீன் இலாஹியில், சர்வபொது சமாதானம் ஆகிய சோல்நெறுல் தழைக்கும்!

இஸ்.அமை: ஷா இன் ஷா! தங்களின் சர்வமத பொது சமாதானக் கொள்கையாகிய தீன் இலாஹி அமைப்பதன் நோக்கத்தை...

அக்: சொல்கிறேன், வஜீர்! நாம் ஆட்சி செய்து வரும் இந்தப் பரந்த இந்திய சாம்ராஜ்யம், ஒரு குடியேற்றநாடு. இதில் பல வகைப்பட்ட கலாசாரங்கள், பண்பாடுகள், பல பாஷைகள், பற்பல சமய வழிபாடுகள் எல்லாம் நிறைந்து தனித்தனி சிறு சிறு நாடுகளாகச் சிதறிக் கிடக்கின்றன. இவற்றையெல்லாம் ஒன்றாக்கிய தான், ஒரு தேசிய ஒருமைப்பாட்டையும் தேசிய தெய்வீக வழி பாட்டையும் உருவாக்க வேண்டும்.

எந்த வழியிலாவது இந்த புனித பூமியில் சமாதான, சகோதரத்துவ ஒருமைப்பாடு, நிரந்தரமாகத் தவழ வேண்டும்.

என் ஆட்சியில் உள்ள முஸ்லீம்களுக்கு நான் ஒரு முஸ்லீம்! இந்துக்களுக்கு நான் ஒரு இந்து! சீக்கியர்களுக்கு நான் ஒரு சீக்கியன்! கிறிஸ்துவர்களுக்கு நான் ஒரு கிறிஸ்தவன்! படைத்த பரம்பொருளைப் பற்றிச் சிந்திக்காமல் - மனிதன் படைத்த மதபேதங்களைப் பற்றிக் கவலைப்பட்டுக் கொண்டு சமாதானம் குலைய '-சகோதரத்துவம் அழிய மனிதன் வாழக் கூடாது. அதற்காகவே நான் அமைத்துள்ளது தான்- "தீன் இலாஹி "!

இஸ்.அமை: ஷா இன் ஷா அவர்கள், தீன் இலாஹியில் அவ்வளவு மக்களையும் சட்டப்படி கட்டாயப்படுத்தத் திட்டமிட்டுள்ளாரா என்பதையும் தெரிவிக்க வேண்டும்.

அக்: வஜீர்! தீன் இலாஹியில் இணைய எவ்விதக் கட்டாயமுமே கிடையாது. இது மனிதகுல தனி உரிமை! கட்டாயப்படுத்தி மத மாற்றம்செய்பவன், காட்டுமிராண்டி! சத்திய தர்ம வழிக்கு மக்களை தானாக வரச் செய்பவன் தான், ஞானி!

இஸ்.அமை: ஷா இன் ஷா! நம் மார்க்கத்தில் விக்கிரக வழிபாடே கிடையாது. ஆனால், இந்துக்களோ...

அக்: வஜீர்! கடவுளைப் பற்றி ஏன் கவலைப்படுகிறீர்கள்? கடவுள் தான் மனிதனைக் காப்பாற்றக் கவலைப்பட வேண்டும். கடவுள் என்பது ஒரு மனித குலக் கற்பனை. கற்பனை ஆனாலும் அக்கற்பனைக்குள் ஒரு மாபெரும் சக்தியும், இரக்கமும், சத்திய தர்ம வழிகளும், சமாதான, சகோதரத்துவங்களும் புதைந்து கிடக்கின்றன. மனிதன் எப்படி வணங்கினாலும், அவன் செய்யும் வணக்கங்கள் ஒரே கடவுளின் சக்தியிடம்தான் சங்கமமாகும். கடவுள் நமக்குள் கற்பனையாகத் தவழ்கிறார். நம்மைப் பார்கிறார்; நமக்கு வழி

காட்டுகிறார். இத்துடன்மத விவாதத்தை முடித்துக் கொள்ளுங்கள், வஜீர்! அடுத்து—

ராஜா மான்ஸிங்: ஷா இன் ஷா அவர்கள் நாளை மாபெரும் மகான் அடக்கமாகி உள்ள அஜ்மீர் தர்காவிற்கு புனித யாத்திரையைத் துவங்கப் போவதை சபையினருக்கு அறிவிக்கின்றேன்.

தோடர்மால்: ஷா இன் ஷா! ஜாதி மத பேதமில்லாமல் தான் அடக்கமாகியுள்ள அஜ்மீர் தர்காவில் ஜீவ சமாதியாக நிலை பெற்று, தர்காவிற்கு வருபவர்களுக்கெல்லாம் தன் கருணை மழையைப் பொழிந்து வரும் மகாஞானியிடம் எங்களுக்காகவும் பிரார்த்தித்துக் கொள்ளுங்கள், ஷா ஹின் ஷா!

அக்பர்: வஜீர்! நமக்கென்ற பிரார்த்தனை தேவை இல்லை! உலக நன்மைகளுக்காகப் பிரார்த்தித்துக் கொண்டாலே போதும்! இந்த உலகம் நன்மை பெற்றால்,-இந்த உலகத்தில் தானே நீங்களும் நானும் வாழ்கிறோம்? மேலும் அஜ்மீர் தர்காவில் உள்ள புனித ஞானி பிறவியில் இஸ்லாமியராக இருந்தாலும் ஜாதிமத பேத மில்லாமல் வாழ்ந்தவர்! அதனால்தான் அவரது தர்காவில் ஓம் என்ற பிரணவம், ஆமென் என்ற பிரார்த்தனை, அமீன் என்ற தொழுகை ஓசை, அவ்வளவும் சங்கமமாகிக் கொண்டிருக்கின்றன.

என்னைப் போன்றவர்களுக்கெல்லாம் சர்வமத சமரச சகோதரத்துவத்திற்கும், மனித சமுதாயத்திற்கும் வழிகாட்டிய ஞானிகளில் இவரும் ஒருவர், வஜீர்!

டான்சேன்: ஷா இன் ஷா! தங்கள் அஜ்மீர் யாத்திரையில் எனக்கும் பங்கு தரவேண்டும். நானும் வருகிறேன்.

அக்: ஷாயர் ஏ ஆஜம்! மகாகவி டான்சேன்! கண்டிப்பாகத் தாங்களும் என்னுடன் அஜ்மீர் வரவேண்டும்.

டான்சேன்: ஷா இன் ஷா! நான் தங்களுடன் வருவதற்கு அடிப்படையான ஒரு காரணமும் இருக்கிறது, ஷா இன் ஷா!

அக்: சொல்லுங்கள், டான்சேன்!

டான்: ஷா இன் ஷா! சித்தோர் இராஜபுத்திர ராணி மீராவைப் பற்றி நினைவுபடுத்துகிறேன், ஷா இன் ஷா!

அக்: (கைகூப்பி வணங்கி) ஆ! மீராவா? என் சகோதரி மீரா! ஜாதி மதங்களையும் குடும்ப வாழ்வையும் துறந்த மகாபக்தை மீரா! ராஜவம்சத்தில் தான் பிறந்தும் மிதியடிகளைத் தைக்கும் ஜாதியில் பிறந்தவர் என்றும் கூட நினைக்காமல், ரோக்தாசரைத் தன் ஞானசற்குருவாகக் கொண்ட பக்திப் பாமாலை மீரா! நாத்பந்த் என்ற சீக்கிய குருவிடமும் ஞானம் பெற்ற சர்வமத சமரச பக்திப் பாவை மீரா! டான்சேன்! என் சகோதரியை நான் எப்படி மறக்கமுடியும்?

டான்சேன்: ஷா இன் ஷா! நாம் இருவரும் யாத்திரிகர்களின் மாறு வேடத்தில், மீராவின் பஜனையைக் கேட்க சித்தோர் சென்றோமே?

அக்: ஆம்! மீராவின் பஜனையில் எழுந்த, கிருஷ்ண பஜனையாக எழுந்த தேனமுத தேவகான மழையில் நாமும் மெய் மறந்து மீராவுடன் சேர்ந்து, பக்தர்களின் கூட்டத்தோடு கூட்டமாகப் பாடினோம்! ஆடினோம்! மெய் சிலிர்த்தோம்! மீராவின் அற்புத கானத்தின் ரசிகன் நான்!

டான்சேன்: ஷா இன் ஷா! அப்பொழுது தங்கள் கழுத்தி லிருந்த விலை மதிப்பற்ற முத்து மாலையை, மீராவிடம் பரிசாக வழங்கினீர்கள் ! அல்லவா?

அக்: ஆம் ! டான்சேன் ! என் முகத்தைக் கூடப் பார்க்காமல் முத்து மாலையைப் பெற்றுக் கொண்ட மீரா-தான் அணிந்து

கொள்ளாமல், நான் பாடி வணங்கும் கிருஷ்ண விக்ரகத்தின் கழுத்தில் அணிவித்தாள் என்பதையும் கவனித்தீரோ?

(மீராவின் பஜனை நிகழ்ச்சிகள், மௌனமாகக் காட்சிகளாக விரிந்து கொண்டிருக்கின்றன)

டான்: ஷா இன் ஷா! நம் இஸ்லாமியப் பெண்கள் முகத்திரைக்குள் தங்களை மூடி மறைத்துக் கொள்கிறார்கள். ஆனால், மீராவோ தன் மனத்திரைக்குள் தன்னை மறைத்துக் கொண்டு யாரையுமே ஏறெடுத்தும் பார்க்காமல் பரம் பொருளையே ஆத்மார்த்தமாகப் பார்த்துக் கொண்டிருக்கிறாள். பார்க்கப் போனால்- மீரா, ஒரு சரியான முஸ்லீம் பெண்!

அக்: சபாஷ், டான்சேன். சபாஷ்! மீராவைப் பற்றிய அற்புதமான விமர்சனம்! உலகத்திலுள்ள பெண்களுக்கெல்லாமே மீரா, ஒரு மாதர் குல மாணிக்கம்!

டான்: ஷா இன் ஷா! நாம், நம் ஆட்சிக்குட்பட்ட ஒரு சிற்றரசர் ராணாவின் நாட்டிற்குள்- மாறு வேடத்தில் சென்று வந்ததையும், தாங்கள் மீராவிற்கு முத்து மாலையைப் பரிசளித்ததையும், யாரோ கவனித்திருக்கிறார்கள், ஷா இன் ஷா!

அக்: பிறகு...?

டான்: ஷா இன் ஷா! தங்களைப் பற்றியும், மீராவைப் பற்றியும் தவறான வதந்திகள் ஏற்பட்டிருக்கின்றன!

அக்: பிறகு...?

டான் : ஷா இன் ஷா! மீராவின் மீது அபாண்டமான பழிகளை அவர் குடும்பத்தினர் சுமத்திக் கொடுமைப்படுத்தியிருக்கிறார்கள், ஷா இன் ஷா!

அக் : மகாகவி ! மீராவின் கணவன் கும்பராணா பெரிய பக்தனாயிற்றே? ஜயதேவரின் கீத கோவிந்தத்திற்கு 'ரஸப்பிரியா' என்ற உரையை வகுத்தவன் அல்லவா! கும்பராணா? சங்கீத ராஜம்-என்ற லட்க்ஷணக் கிரந்தத்தைப் படைத்தவன் அல்லவா கும்பராணா! அவனுக்குமா மீராவின் பக்தி புரியாமல் போய் விட்டது?

டான்: ஆம், ஷா இன் ஷா ! சிற்றரசன் கும்பராணா எவ்வளவு பெரிய பக்தனாக இருந்தாலும், அவன் பக்தியை- மீராவின் பக்தி மிஞ்சி விட்டதல்லவா? இது ஒரு காரணம். தன்னுடன் இல்லறசுகம் காணாமல், மீரா பக்தி மார்க்கத்தில் திளைத்திருப்பது கூட கும்பராணாவின் வீண் சந்தேகத்திற்குக் காரணமாகிவிட்டது. அவன், தன் மனைவியின் நடத்தையிலேயே சந்தேகப்பட்டு விட்டான், ஷா இன் ஷா !

அக்: டான்சேன்! தன் மனைவியைப் பற்றியே புரிந்து கொள்ளாத கும்பராணா, பரம்பொருளைப் பற்றி எப்படிப் புரிந்து கொள்ளப் போகிறான்? அவன் கற்ற கல்வி, படைத்த படைப்பு, பக்தி- எல்லாமே வீண்தான். ஷாயர் ஏ ஆஜம் ! பிறகு என்ன நடந்தது?

டான்: ஷா இன் ஷா ! உலகத்தையே வெறுத்த மீரா, தற்பொழுது தன் பக்தர்களுடன் தன் நாட்டை விட்டே வெளியேறி-பிருந்தாவனம் நோக்கிப் பாத யாத்திரையாகச் சென்று கொண்டிருப்பதாகக் கேள்விப்பட்டேன், ஷா இன் ஷா !

அக்: மாபெரும் கொடுமை ! வஜீர் ஏ ஆஜம் ! மான்சிங் ! பக்தி மார்க்கத்தில் சகோதரத்துவ சங்கமமும், சமுதாய சாந்தி சமாதானமும்தான் தழைக்கப்பட வேண்டும்; இதில் விபரீத சந்தேகக் கற்பனை கைத்தான்களுக்கு வேலையே இல்லை ! நான் ஏன் பல

ராஜ புத்திர வம்சப் பெண்களை மணந்தேன் என்ற உள்ளார்த்தம் உங்களுக்கெல்லாம் புரியுமா?

மான்: சொல்லுங்கள், ஷா இன் ஷா !

அக்: இந்த அக்பர் மதமார்க்க சங்கமப் பொது சமத்துவத்திற் காகத்தான் பல ராஜபுத்திரப் பெண்களை மணந்தான். ஆனாலும், என் மனைவியர்களைத் தவிர ஏனைய அவ்வளவு ராஜபுத்திரப் பெண்களும் என் சகோதரிகள் ! தாய்மார்கள்! கும்பராணா என்னைக் காமந்தகாரனாக எண்ணிவிட்டானா? பரவாயில்லை. நான் பொறுத்துக் கொள்கிறேன்.

(கடுமை கலந்த குரலில்) ஆனால் நாதகீத நாயகியன் சகோதரி மீராவை அல்லவா கொடுமைப்படுத்திவிட்டான்? கோபமாக மீராவை சந்தேகத்தோடு பார்த்த கும்பராணாவின் கண்களைத் தோண்டி எரியவேண்டும் !

மான்: உண்மைதான், ஷா இன் ஷா !

அக்: வஜீர் ஏ ஆஜம் ! உடனடியாக என் சகோதரி மீராவை அழைத்து வந்து, ராஜமரியாதைகளோடு ஏற்றுக் கொள்ளா விட்டால் நாம் பெரும் படையுடன் புறப்பட்டு வந்து கும்பராணாவின் சித்தோர் நாட்டைக் கைப்பற்றி கும்பராணாவை அழித்து விடுவோம் என்று இவ்றே நம் உத்தரவை அனுப்பி வையுங்கள் !

மான்: அப்படியே செய்கிறேன், ஷா ஹின் ஷா !

அக்: சபையோர்களே ! ஒரு மீராவிற்கு ஏற்பட்ட அநீதியைத் தடுக்காவிட்டால் - எதிர்காலத்தில் எவ்வளவோ மீராக்கள் சமுதா யத்தின் அநீதி என்ற அக்னிக்குள் வெந்து சாம்பலாவார்கள். பெண் களின் உரிமையை இஸ்லாமியம் போற்றிப் பாதுகாத்து வருவதை-

இந்த நேரத்தில் பாராட்டக் கடமைப்பட்டிருக்கின்றேன்.

பெண்களை வேலைக்காரிகளாகவோ, விபசாரிகளாகவோ, அடிமைகளாகவோ, வியாபாரப் பொருள்களாகவோ சமுதாயம் மதிக்க ஆரம்பித்தால், மனித சமுதாயமே சீரழிந்து போய்விடும்!

அதைத் தடுத்து நிறுத்தும் முதல் எச்சரிக்கைதான், கும்பராணாவிற்கு நான் அனுப்பும் இந்த ஓலை ! பெண்களை சந்தேகப்படாதீர்கள்! நேர்மையான வழியில் அவர்கள் மனசாட்சியின்படி பரம் பொருளின் பெயரால் நடக்க சமுதாயப் பாதையை அமையுங்கள் !

ஒரு பெண்ணை காரணமே இல்லாமல் சந்தேகப்பட்டால், அவள் திருடியாவாள் ! விபசாரியாவாள்! தீயவளாவாள் ! சமுதாயத்தையே மெல்லக் கொலை செய்வாள் ! பெண் உரிமைக்கு வழி வகுத்து உதவி செய்யுங்கள், பெண் உரிமைக்கு வழி வகுத்து உதவி செய்யுங்கள், பெரியோர்களே !

மான்: உண்மைதான், ஷா இன் ஷா! தெய்வவாக்காகத் தங்களின் திருமொழிகளுக்குத் தலை வணங்குகிறோம்.

டான்: ஷா இன் ஷா! தங்களோடு நானும் அஜ்மீர் யாத்திரையில் கலந்து கொள்வதன் நோக்கங்கள், முதலாவது அஜ்மீர் தர்காவில் தொழுகை! பிறகு பிருந்தாவனம் சென்று நாமிருவரும் மீராவை தரிசிப்பது! அதன் பிறகு....

அக்: சொல்லுங்கள், டான்சேன் !

டான்: ஷா இன் ஷா ! நான் தினந்தோறும் உங்களுக்குப் பள்ளி எழுச்சியாகக் காலையில் பாடிவரும் பாடலின் சொந்தக் காரரை, ஒரு மகாகவிச் சக்ரவர்த்தியை தங்களுக்கு அறிமுகப் படுத்தப் போகிறேன்.

அக்: என்னை எப்படி அறிமுகப்படுத்தப்போகிறீர்கள், டான்சேன்?

டான்: ஷா இன் ஷா! மீராவை நாம் சந்தித்த மாறுவேடத்தில் தான், அந்த மகாகவியை சந்திக்கப் போகிறோம். அவர் பெயர், சூர்தாஸ்! எழுத்தறிவு பெறாதவர்! கண் இல்லாக் குருடர்!

அக்: அப்படியா, டான்சேன்?

டான்: ஷா இன் ஷா! அங்கே அவர் பாடும்பொழுது நிகழும் பல அற்புதங்களையும் பார்க்கப் போகிறீர்கள்! மேலும் ஒன்று—

அக்: சொல்லுங்கள், டான்சேன்!

டான்: ஷா இன் ஷா! நாம் பிருந்தாவனம் செல்லக்கூடிய நேரத்தில், துளஸிதாஸ்...

அக்: யார்? துளஸிதாஸா? நம் சபையில் இருந்த அமைச்சர் ஆத்மராமின் மகன் - அடங்காப் பிள்ளையாக வளர்ந்து - பிறகு மகா ஞானியாக மாறி! 'ராமசரித மானஸ்' என்ற பெயரில் மிக அற்புதமாக ராமாயணத்தை அவதி பாஷையில் உருவாக்கியுள்ள அந்த மகாமேதையைப் பற்றியா சொல்கிறீர்கள்?

டான்: ஆம், ஷா இன் ஷா! அதே துளஸிதாஸ்தான் சூர்தாஸை தரிசிக்க வரப்போவதாகவும் கேள்விப்பட்டேன்.

மான்சிங்: ஷா இன் ஷா! யமுனைநதி தீரத்தில் கோகுலக் கண்ணனும் கோபியர்களும் கூடி ஆடிப் பாடிக்களித்த அப்புண்ணிய பூமியில்- ஷா இன் ஷா, டான்சேன், பக்த மீரா, சூர்தாஸ், துளஸிதாஸ் ஆகிய அனைவரும் சாதுக்களாக உலக சாந்தி சமாதான பக்தி மார்க்கத்தில் சங்கமமாகும் காட்சியோ காட்சி!

அத்தரிசனத்தைக் கண்டாலே போதும், ஆதிமூலப் பரம் பொருளின் அம்சங்களைத் தரிசித்ததைப் போல! நீங்கள் எல்லோருமே ஜாதி மதம் கடந்த சன்மார்க்க சமரச ஞானிகள் !

அக்: மான்சிங்! இந்த பக்தி மார்க்க சாந்தி சமாதான சகோத ரத்துவ சங்கமத்தில் நானும் இளமையில் எழுத்தறிவில்லாதவன்! டான்சேனும் கல்வியில் கருத்தில்லாதவர்! சூர்தாஸும் கல்வியறிவு அற்றவர்! மீராவும் இளமையில் கல்வியறிவு பெறாதவர்! துளஸிதாஸரும் இளமையில் கல்வியில் கருத்தில்லாதவர்தான்!

மான்: ஆனால் எல்லோரும் இறையருள் பெற்றுத் தெளிந்த மகா ஞானிகளாக சங்கமமாகின்றீர்கள், ஷா இன் ஷா !

படிப்பாளி வேறு, அறிவாளி வேறு, ஞானி வேறு, சிந்தனையாளன் வேறு!

படைப்பாளன் வேறு! நீங்களோ- உலக நன்மைகளுக்காக , சமுதாய சாந்தி சமாதானத்திற்காக வாழும் சிந்தனைகள் மிக்க ஞானிகள்!உங்களுக்குக் கல்வியறிவே தேவை இல்லை. நபிகள் நாயகமே எழுத்தறிவில்லாதவர்தானே? ஏசு கிறிஸ்து எங்கே போய்க் கல்வி கற்றார்? மகான் குருநானக் இளமையில் கல்வியை வெறுத்தவர்தானே !

சகோதரத்துவ மகா காப்பியத்தை-அதாவது இராமாயணத்தை ஆதியில் பாடிய வால்மீகி மகரிஷி, தன் இளமைப்பருவத்தில் கல்வியறிவற்றுக் கொலை, கொள்ளை, காமம் என்று மூழ்கிக் கிடந்த கொடிய வேடன் தானே? மகாகவி காளிதாசனும் கூட- ஆதியில் அறிவு பெறாமல் ஆடு, மாடுகளை மேய்த்துக் கொண்டிருந்த ஒரு இடையன் தானே?

அக்: உண்மைதான், மான்சிங்! ஞானம் என்பது பிறவி யிலேயே அமையவேண்டும்.

டான்: ஷா இன் ஷா ! இறுதியாக ஒன்றை நினைவுபடுத்த ஆசைப்படுகிறேன். நாம் அஜ்மீரிலிருந்து திரும்பியதும், என் தீபக் ராகத்தை இதே சபையில் அரங்கேற்றத் தயாராகிக் கொண்டு இருக்கிறேன்.

அக்: டான்சேன் ! நீங்கள் இன்னும் தீபக் ராக சர்ச்சைக்கு முற்றுப்புள்ளி வைக்கவில்லையா? நானோ, மறந்தே போய் விட்டேன்! நீங்களும் மறந்துவிடுங்கள். ஷாயர் ஏ ஆஜம்! இது இருவருக்குமே நல்லது !

டான்: மன்னிக்க வேண்டும், ஷா இன் ஷா ! தீபக்ராக அரங்கேற்றம் என்பது என் இசை ஞானத்திற்கே எழுப்பப்பட்ட சவால்!

இதில் நமக்குள் போட்டியே கிடையாது. ஷா ஹின் ஷா! பஞ்ச பூதங்களைப் படைத்து பஞ்ச பூதமெல்லாம் வியாபித்து நிற்கும் பரம் பொருள், இசை ராகத்திலும் கொலுவிருக்கும் அற்புதத்தை நான் நிரூபிக்காவிட்டால்- நான் கலிஞன் என்று சொல்லிக் கொள்ளவே தகுதியற்றவன், ஷா இன் ஷா !

இசைக்காகப் பிராணத்தியாகம் செய்யும் வாய்ப்பு ஏற்படின், அதை நான் மகா பாக்கியமாகக் கருதிக் கொண்டிருக்கிறேன்.

அக்: தீபக்ராக அரங்கேற்றத்தை இனியும் தடுத்து நிறுத்தும் சக்தி எனக்கில்லை, டான்சேன் !

(அமைச்சரைப் பார்த்து) வஜீர் ஏ ஆஜம் மான்ஸிங் ! நாங்கள் அஜ்மீர் புனித யாத்திரை முடிந்து திரும்பிய பிறகு நம் ஷாயர் ஏ ஆஜம் டான்சேன் நடத்தப் போகும் அற்புதமான தீபக்ராக அரங்கேற்றத்தைப் பற்றி நம் ஆட்சிக்குட்பட்ட அவ்வளவு அரசர்களுக்கும், கலைஞர்களுக்கும், கவிஞர்களுக்கும், சகலசர்வ பண்டிதர்களுக்கும் அழைப்பு அனுப்ப ஏற்பாடு செய்யுங்கள் !

எல்லோர் முன்னிலையிலும் இந்த அதி அற்புத அரங்கேற்றம் நடைபெற வேண்டும் !

மான்: அப்படியே செய்கிறேன், ஷா இன் ஷா! (அனைவரையும் நோக்கி) இத்துடன் தர்பார் கலைகின்றது ! அல்லாஹு அக்பர் !

காட்சி 21

(இடம்: கோவர்த்தனம் - ஸ்ரீநாதர் கோவிலின் வெளியில் உள்ள ஒரு மரத்தடியில் சிஷ்யர்கள் சூழ, சூர்தாஸ் அமர்ந்துள்ளார்.)

சிஷ். 1: கவிச்சக்ரவர்த்தி ! பாரத தேசம் முழுவதும் தவழும் பக்தி மார்க்க பஜனைகளில் எல்லாம் - தங்களின் ஜீவகவிதைகளும், ராஜபுத்ர மகாராணி மகாபக்தை, கவியரசி மீராபாயின் கவிதைகளும் முழங்கிக் கொண்டிருக்கின்றன, மகாகவி !

சூர்: உடல், பொருள், உயிர் அவ்வளவையும் கிரிதாரி கண்ணனுக்கே அர்ப்பணித்து வாழ்ந்து வரும் இந்தக் காலத்தில் வாழ்ந்து கொண்டிருக்கும் ராதை மீராவின் பக்தித் தியாக வாழ்க்கையைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன். மீராவை நினைக்கும் பொழுது எனக்குள்ளாக ஒரு மனக்குறை...

சிஷ்.2: சொல்லுங்கள், மகாகவி !

சூர்: நானும் மீராவைப் போல ஒரு பெண்ணாகப் பிறவி எடுக்காமல் போய்விட்டேனே? இதுதான் என் மனக்குறை.

நான் பெண்ணாகப் பிறந்திருந்தால் - சரீரத்திலும் ஆண்மை இல்லாதவனாக - நானும் ஒரு கோபியாக மாறி, என் நாயகன் கோவர்த்த நேசனை, கோகுலக் கண்ணனைப் பாடி இருப்பேனே!

சிஷ்.3: மகாகவி ! நீங்கள் பெண்ணாகப் பிறக்கவில்லையே

என்று கவலைப்படுகின்றீர்கள்.

ஆனால், கிருஷ்ணனின் அம்சமாக விளங்கிய மகான் சைதன்ய மகாப்பிரபு, தன் இறுதிக்கால வாழ்வில் பெண்களையே வெறுத்து ஒதுக்கித் தள்ளி இருக்கிறாரே மகாகவி?

ஒருமுறை சைதன்யரின் மாணவர் பக்தையிடம் உணவை யாசித்தார் என்பதற்காக, அதாவது ஒரு பெண்ணிடம் யாசகம் பெற்றதே தவறு என்று - தன் சிஷ்யன் இளைய ஹரிதாஸனை சைதன்யப் பிரபு வெறுத்து ஒதுக்கித் தள்ளினார்.

அதனால் அவன் கங்கையும், யமுனையும் கலக்கும் திருவேணி சங்கமத்தில் தற்கொலை செய்து கொண்டு விட்டானாமே, மகாகவி?

சிஷ்.4: மகான் சைதன்ய மகாப்பிரபுவே தன் இளமைக்காலத்தில் லக்ஷ்மி, விஷ்ணுப்பிரியா என்ற இரண்டு மனைவியர்களோடு வாழ்க்கை நடத்தி இருக்கிறாரே, மகாகவி? இதையும் நீங்கள் மறந்துவிடக் கூடாது. மகான்களைப் பற்றி விமர்சனம் செய்யும் தகுதி நமக்குக் கிடையாது.

பக்தர்களே ! மகான் சைதன்யரின் பக்திப்பரவச சமாதிநிலை ஒரு மாபெரும் கோபியர் பக்திக அனுபவம் ! இதே சைதன்ய மகாப்பிரபுதானே-ராதை, கோபியர் பக்தி உணர்ச்சிகளை இப்பாரத தேசமெல்லாம் பரப்பிய மகாகுரு?

பெண்கள் தங்களுக்கென்று ஒரு நாயகனைக் கொண்டிருக்கும் வாழ்க்கையோடு-பரம புருஷனாகிய பரமாத்மாவை எப்படி நாயகனாக ஏற்றுக் கொள்ளமுடியும் என்பது சைதன்யப்பிரபுவின் பக்தி மார்க்க நோக்கமாக இருக்கலாம் அல்லவா?

ராதையின் அம்சமாகப் போற்றப்படும் மீரா, தான் மணந்த நாயகனை விட்டே விலகி வாழ்ந்து கொண்டிருக்கவில்லையா?

இப்படிப்பட்ட மீராக்களாக எல்லாப் பெண்களையுமே நாம் எதிர்பார்க்க முடியுமா?

மேலும், பெண்கள் சமுதாயத்தில் செய்யும் கடமைத் தொண்டுகள்தான், கடவுளின் பக்தியைவிட மேலானவை! கடவுள் உலகத்தைக் காப்பதற்குச் சமமாகப் பாரதப் பெண்கள், மனித சமுதாயத்தை அழியாமல் பாதுகாத்து வருகிறார்கள். அதனால்தான் ஞானிகளை விடவும் , பெண்களின் கற்பு நெறிக்குச் சக்தி அதிகம் பக்தர்களே ! பெண்துணை இல்லாமல் சராசரி மனிதன் கடவுள் வழியில் நடக்கமுடியுமா?

(சிறிது மௌனத்தோடு இருந்து)

கோகுலக் கண்ணனின் கொஞ்சலிலும், தழுவலிலும், கோடி முத்தமழை பொழிவதிலும் நாயகியர்களாகி நின்ற கோபியர்களே, பெண்கள் தாமே?

கண்ணனின் கனிவாயில் அமுதமழையாகப் பால் ஊட்டிய யசோதையே பெண்தானே? என்னதான் ஆடிப் பாடினாலும்-ருக்மணி, சத்யபாமா, ராதையாக, நாம் ஆக முடியுமா?

பாஞ்சாலிக்காகத் தானே பார்த்தசாரதிக் கண்ணன் ஓடோடி வந்தான்? அவளை மையமாகக் கொண்டுதானே, நம் நாயகன் கீதையைத் தந்தான்? தர்மத்தைத் தலை எடுக்க வழி வகுத்தான்?

ஆண்களின் ஆடைகளையா நம் நாயகன் களவாடி ஆடிப்பாடிக் கூத்தாடினான்? (சிறிது மௌனத்தோடு இருந்து) யசோதையின் பிரம்படி, நப்பின்னையின் எச்சில், ராதையின் கோபதாபம்-மறக்க முடியுமா இவைகளை? இவர்களெல்லாம் பெண்கள்தாமே?

ஆண், பெண் என்ற பேதம்-தாரம், தங்கை, தாய், தமையன், தந்தை போன்ற உறவு பேதங்கள்-இவை எல்லாம் மனித சரீரத்திற்கு

மட்டும் தானே? ஆத்மாவிற்கு இல்லையே?

பக்தர்களே! எது எப்படியோ சைதன்யப் பிரபுவின் மார்க்கம், ஆண்களுக்கு மட்டுமே உரிய தீவிர பக்தி மார்க்கம் என்பது மட்டும் எனக்குப் புரிகிறது.

(அப்பொழுது துளஸிதாஸர் வருகிறார்)

துளஸி: மகாகவி! நான்தான் துளஸிதாஸ்! தங்களை நமஸ்கரித்துக் கொள்கிறேன். (சூர்தாஸின் பாதங்களைத் தொட்டு வணங்குகிறார்)

சூர்தாஸ்: நானும் நமஸ்கரித்துக் கொள்கிறேன், துளஸிதாஸ்! ஆதிமூலப் பரம் பொருள் அவதரித்த பத்து அவதாரங்களில், மனிதனாகப் பிறந்து உலக சகோதரத்துவத்தை நிலை நாட்டிய எட்டாவது அவதாரம் ஸ்ரீராம அவதாரம்! ஸ்ரீராம சரிதத்தை 'ராம சரித மானஸ்' என்ற பெயரில் மிக அற்புதமாகப் படைத்திருக்கிறீர்களாமே?

துளஸி: எல்லாம், சகல சர்வ ஞான பண்டிதன் ஆஞ்சநேயனின் திருவருள் தான், மகாகவி! இப்படைப்பை உருவாக்க நாளும் நான் வழிபடும் ஆதிசிவப் பரப்பிரம்மத்தின் ஞானத் திருவருளும் துணை செய்துள்ளது, மகாகவி!

சூர்: நீங்கள் ஒரு சிவ பக்தரா, துளஸிதாஸ்?

துளஸி: மகாகவி! நான் ஜாதி மதங்களைக் கடந்தவன். எனக்கென்று தனிப்பட்ட ஒரு தெய்வம் இல்லை. உலகத்திற்கே பொதுவான கடவுள் ஒருவரை மட்டுமே நம்புகின்றவன் நான்!

இளமைப் பருவத்தில் வறுமையால் பிச்சைக்காரனாகத் திரிந்த பொழுது, இரவெல்லாம் ஓர் இஸ்லாமிய மசூதியில் தான் தூங்குவேன். ஆதி குரு மகாவீரரைக் கூட வழிபடுகின்றவன்.

நான். நம்மிடம் உள்ள நான்கு கண்களில் முகத்தில் உள்ள இரண்டு கண்களால் வெளி உலகத்தை மட்டுமே - நான் பார்க்கின்றேன். நீங்களோ, உங்களுக்குள்ளே இருக்கக்கூடிய ஞானக் கண்களால், உங்களுக்குள் உள்ள பரம்பொருளைப் பார்த்துக் கொண்டிருக்கிறீர்கள், மகாகவி!

சூர்: உலகத்திலுள்ள ஒவ்வொரு அணுவிலும் தெய்வீக அனுபவங்கள் நவழ்ந்து கொண்டுதான் இருக்கின்றன, துளஸிதாஸ்!

துளஸி: ஆம், மகாகவி ! ஆலமரம் - அதனடியில் ஆதிசிவன் ஞான சொரூபியாய் வாழ்கிறார்! இம்மரத்தடியில் தான் வால்மீகியின் ஆஸ்ரமும் இருந்தது. இம்மரத்தடியில்தான் சீதா பிராட்டி வனவாசத்தில் வாழ்ந்தார்.

அதைப்போல 'மரங்களில் நான் அரசமரம்' என்றார் பகவான் கிருஷ்ணன்! இதே அரச மரத்தடியில்தான் புத்தர் ஞானம் பெற்றார். கடவுள் எங்கெங்கும் வியாபித்துள்ளார், மகாகவி !

சூர்: ஜாதிமதம் கடந்த நிலையில்- ராமனும் ஒன்றே ! ரஹீமும் ஒன்றேயென்று 'ராம்ரஹீம்' என்ற சத்திய வேதத்தைத் தந்த கபீர்தாஸ் முதலாக உங்கள் வரை- உலக சகோதரத்துவ காப்பியத்தை உருவாக்கிய ஸ்ரீராமவதாரத்தின் வழியாக மனிதகுலக் கடமைகளை ஸ்தாபித்து விட்டீர்கள்.

என் காலத்திற்கு முன்னும் சரி - தற்பொழுதும் சரி, வாழ்ந்தவர்களும், வாழ்ந்து வருபவர்களுமாகிய சைதன்யப் பிரபு, வல்லபாச்சாரியார் சுவாமிகள், ராஜபுத்திர ராணி பக்தை மீராபாய், இந்தக் குருட்டு சூர்தாஸ் ஆகிய நாங்களெல்லாம்-

பரம் பொருளின் ஒன்பதாவது அவதாரமாக நடந்து முடிந்த கிருஷ்ண சரித்திரத்தைக் கவிதைகளாக, பஜனைகளாக, காவியங்களாகப் படைத்து ஸ்ரீ கிருஷ்ணாவதாரத்தால் உணர்த்தப்பட்ட உலக

சமாதானத்திற்கும், ஆத்ம சாந்தி தரும் சரணாகதித்துவ மார்க்கத்திற்கும் ஜாதிமத பேதமின்றி பாடுபட்டுக் கொண்டிருக்கின்றோம்!

துளசி: பரம்பொருள், இந்த உலகத்தை வாழவைக்க நடத்து வரும் சகோதரத்துவ மிதியடியை- இராமசரிதம் வழியாக நான் சுமக்கிறேன்.

நீங்களோ, உலக சமாதான சாந்தியாகிய கிருஷ்ண கான மிதியடியைச் சுமந்து கொண்டிருக்கிறீர்கள், மகாகவி!

சூர்தாஸ்: உண்மைதான், துளசிதாஸ்! நமக்குள்தாம் எவ்வளவு ஒற்றுமை?

துளசி: மகாகவி! நாம் இருவருமே மாபெரும் ஞானப் பாதையில் காலடி வைக்கக் காரணமாக இருந்தவர்களே, பெண்கள் தாம்.

உங்களுக்கோ, காதலி! காதல் விரகதாபத்தால் காதலியைத் தேடிச் சென்ற நீங்கள் கண்களை இழந்து, பெண் இன்பம் நிலை அற்றது என்பதை உணர்ந்து ஞானக் கண்களைப் பெற்றீர்கள். பிறகு நீங்களே பரமபுருஷனாகிய பரம்பொருளின் நாயகியாக, கோபியாக மாறிவிட்டீர்கள்! அதைப்போல் என் ஞான வழிக்கும் காரணகர்த்தா, ஒரு பெண்தான்! அவள்தான் என் மனைவி- ரத்னாவளி!

சூர்: விளக்கமாகச் சொல்லுங்கள், துளசிதாஸ்!

துளசி: மகாகவி! காம இன்பத்தை அனுபவிக்காமலேயே காம உணர்ச்சிகளை உடனே சுழற்றி எறியக் கூடிய மனோபக்குவம் உங்களுக்கு இருந்தது.

ஆனால் நானோ, காமக்கடலில் நீந்தித் திளைத்தவன்! பெண்களின் இன்பத்தையே பேரின்பமாக நினைத்தவன்! என் மனைவியாக அமைந்த ரத்னாவளி, மகாஞானி தீனபந்துவின் மகள் ! மகாவீரரையும் வணங்குவாள் ! மனித தர்ம ஸ்தாபித சக்ரவர்த்தித் திருமகன் இராமனையும் வணங்குவாள்! அழகில் சிறந்தவள் ! அறிவு நுட்பத்தில் அழகிலும் உயர்ந்தவள்!

அந்தக் காலத்தில் இரவில்லை ! பகலில்லை ! நடுநிசியில்லை! எந்த நேரமும் அவளிடம் நான் நடத்தி அனுபவித்த சிற்றின்ப லீலைகள்!

ஒரு நாள் ரத்னாவளி, தன் தாய் வீட்டிற்குச் சென்றிருந்தாள். வீடு திரும்பிய நான் அவளில்லாமல் தவித்துப் போய்விட்டேன் ! காமமோக விரக தாப வெப்பத்தில் கருகினேன்! அந்த நேரத்தில் , அவள் எனக்கு எப்படியாவது வேண்டும் என்ற ஒரு பயங்கரமான காமவெறி ! சதைக்குள் சதை சங்கமமாகி, ஜீவசத்தை நாசப்படுத்தும் ஒரு சதைப்பசி! மோக வெறி !

(காட்சிகள் விரிகின்றன. அமைதியாக - துளஸிதாஸர் உணர்ச்சியோடு பேசப்பேச- பேசப்படும் காட்சிகள் நிழலாடுகின்றன.)

நடுநிசியில் வீட்டை விட்டு வெளியே ஓட்டமும், நடையுமாக ஓடினேன் ! அந்த நேரத்தில் ஒரே மழை ! மின்னல் ! இடி முழக்கம்! நான் எதையுமே பொருட்படுத்தவில்லை ! (காட்சிகள்)

ரத்னாவளியின் வீடு, யமுனையாற்றின் மறு கரையில் உள்ளது. யமுனையிலோ, வெள்ளம் பெருக்கெடுத்தோடுகிறது ! யமுனையில் பாய்ந்து நீந்தினேன் !

(காட்சிகள்)

பாய்ந்து ஓடும் யமுனையின் வேகத்தில் என் உயிரே போய் விட்டாலும் போகட்டும்! அந்த நேரத்தில் என் காமத்திற்குத் தீனி வேண்டும்! நீந்தினேன்! தடுமாறினேன் (காட்சிகள்)

ஆற்றில் செத்த பிணம் ஒன்று மிதந்து வந்தது! கொஞ்சமும் அருவறுப்பில்லாமல் பிணத்தைப் பிடித்துக் கொண்டு நீந்தி மறு கரைக்குச் சென்றேன்! (காட்சிகள்)

மழையும், புயலும் பயங்கரமாகக் கூடி முழங்கு கின்றன! ரத்னாவளி தங்கியிருந்த அவள் வீட்டின் வெளியே நின்றேன். வீடு வெளியே சாத்தப்பட்டிருந்தது. எனக்கோ, தாங்க முடியாத காமப்பசி!! (காட்சிகள்)

வீட்டின் பின்புறமாக வந்தேன். அங்கே ஒரு பெரிய மரத்தில் ஒரு மலைப்பாம்பு தொங்கிக் கொண்டிருந்தது. என் காமவெறி, பாம்பைக் கயிறென்று நினைத்துப் பிடித்துக் கொண்டு மரத்தில் ஏறினேன். (காட்சிகள்)

பிறகு, வீட்டின் கூரையைப் பிரித்துக் கொண்டு, ரத்னாவளி படுத்திருந்த இடத்தின் அருகில் குதித்தேன்! ரத்னாவளி அலறிப் புடைத்து எழுந்தாள். (காட்சிகள் விரிகின்றன)

ரத்னா: (கத்துகிறாள்) திருடன்! திருடன்! (ரத்னாவளியின் பெற்றோர்கள், சகோதரர்கள் கையில் தடியுடன் வருகின்றனர்) (காட்சி விரிகிறது)

துளஸி: கத்தாதே, ரத்னாவளி! கத்தாதே! நான்தான்!

ரத்னா: ஆ! நீங்களா? இந்தக் கடும்புயல் - கொடுமையான குளிர். கொட்டுகின்ற மழை! குலைநடுங்கும் இடியின் கடும் பயங்கர முழக்கம்! இந்த நடு ஜாமம்- எங்கே வந்தீர்கள்?

துளஸி: உன்னைப் பார்க்கத்தான் வந்தேன்! நீ இல்லாமல் நான் உயிர் வாழ்வேனா, ரத்னாவளி?

ரத்னா: யமுனையில் வெள்ளம் ஓடவில்லையா? படகிலா வந்தீர்கள்?

துளஸி: இல்லை. நீந்தித்தான் வந்தேன்!

ரத்னா: தனியாக, யாராலும் நீந்தவே முடியாதே. நீங்கள் நீந்தியா வந்தீர்கள்?

துளஸி: யமுனையில் மிதந்து வந்த ஒரு பிணத்தைப் பிடித்துக் கொண்டு நீந்தினேன், ரத்னாவளி!

ரத்னா: வீட்டிற்குள் எப்படி ஏறிக் குதித்தீர்கள்?

துளஸி: வீட்டின் பின்புறமுள்ள மரத்தில் தொங்கிக் கொண்டிருந்த மலைப்பாம்பைக் கயிறைப் பிடிப்பதைப் போலப் பிடித்துக் கொண்டு வேகவேகமாக மரத்தில் ஏறி வீட்டின் கூரையைப் பிரித்துக் கொண்டு உள்ளே குதித்தேன்!

(பெற்றோர்கள் முதலியோர் அப்பால் செல்கின்றார்கள்)

ரத்னா: என்னைப் பார்க்க, அப்படி என்ன தலைபோகும் அவசரம்?

துளஸி: நான் சொல்லித்தான் உனக்குத் தெரிய வேண்டுமா?

ரத்னா: சீ! மகாகேவல ஜென்மம் நீங்கள்! கேவலம் அழியக் கூடிய என் சரீர ஆசைதான், உங்கள் வாழ்க்கையின் லட்சியமா? இப்படிப்பட்ட ஒரு மிருகத்தனம் கொண்ட உங்களை, என் புருஷனாக நினைக்கவே எனக்கு அவமானமாக இருக்கிறது!

செத்துப் போன பிணத்தைப் பிடித்துக் கொண்டு, ஓர் உயிருள்ள பிணம் நீந்தி இருக்கிறது! வயிற்றுப் பசி மிகுந்த பாம்பைப்

பிடித்துக் கொண்டு- காமப் பசி மிகுந்த ஒரு பாம்பு இங்கே நுழைந்திருக்கிறது! சீச்சீ! கேவலமான பிணம், நீங்கள்! மனிதனைப் பசியில் துடிக்கும் பாம்பு, நீங்கள்!

உங்களை, என் கணவன் என்று சொல்லிக் கொள்வதே, எனக்கு ஒரு மகா அவமானம்! இப்படியும் ஒரு மனிதனை, இந்த உலகத்தில்?

துளஸி: (கத்துகிறார்) ரத்னாவளி?

ரத்னா: (கோபமாக) பெண்ணின் சரீர ஆசையில் மயங்கிக் கிடக்கும் மகானுபாவரே ! உங்களைப் பெற்ற தாயும் ஒரு பெண் தான் ! நீங்கள் வணங்கும் பராசக்தி காளியும், ஒரு பெண்தான்!

தன் மனைவி சீதையைப் பிரிந்த ஸ்ரீ இராமச்சந்திரமூர்த்தி எவ்வளவு காலம் தனியாக வாழ்ந்தார்? என் சரீரத்தில் நீங்கள் வைத்திருக்கும் பாசத்தில் பாதி அளவாவது, அந்த இராமபிரானிடம் வைத்துப் பாருங்கள் ! துன்பங்கள் உங்களை நெருங்காது! லட்சியத் தோடு வாழுங்கள் !

என் சரீரம்தான் உங்கள் லட்சியம் என்றால்- இப்போதே இந்த சரீரத்தை அக்னிப் பிரவேசம் செய்து அழித்து விடுகிறேன்! (கத்துகிறார்)

துளஸி: (மௌனமாக சிந்திக்கிறார், சிறிது. பிறகு) ரத்னாவளி! நீதான், என் ஞானக் கண்களைத் திறந்த குரு! இந்த வினாடி முதல், என் சரீரப்பசி என்னை விட்டு விலகி விட்டது. நீ குறிப்பிட்ட இராமச்சந்திரனே, இனி எனக்கு எல்லாம்! அவனுடைய கிருபா கடாக்ஷம் பெற்று, அவன் சரிதத்தை உலகம் உள்ளளவும் அழியாமல் படைக்கப் போகிறேன். ஹரே ராம, ஹரே ராம ! ராம், ராம் ராமஜெயம்! ராமஜெயம்! ராமா! என்னைக் காப்பாற்று! ஸ்ரீராமசந்திர பிரபுவின் திருவடிகளே, சரணம்! சரணம்! (வெளியேறுகிறார்)

(காட்சி முடிகிறது)

துளஸி: மகாகவி ! இப்படித்தான், என்னை என் மனைவி ஞான வழியில் செலுத்தினாள். உலகத்திலுள்ள எல்லாப் பெண்களுமே எனக்கு சகோதரிகள், தாய்மார்கள் ! ஆனால்-

பெண்கள் அனுபவமில்லாமலேயே நீங்கள் கோபியாக மாறி விட்டீர்கள் ! அனுபவித்துத் துறந்து, ஸ்ரீராமனின் வழியில் நான் மாறினேன்! ஸ்ரீராமனையே சரணடைந்தேன்!

சூர்: துளஸிதாஸ் ! ராமா என்றால், இந்த உலகத்தில் பாவமெல்லாம் பறந்துவிடும். கிருஷ்ணா என்றால், இந்த உலகத்திலும் ஆத்மசாந்தி ! பரலோகத்திலும் முக்தி !

துளஸி: மகாகவி ! நான் இங்கு வந்த நோக்கத்தை, இன்னும் சொல்லாமல் இருக்கிறேனே !

சூர்: சொல்லுங்கள்! துளஸிதாஸ் !

துளஸி: மகாபக்தை மீராபாய், வாழ்க்கையில் வெறுப்படைந்து ஏதோ ஒரு சூழ்நிலையில் கிரிதாரி கிருஷ்ணனை நாடி, பக்த கோடிகள் சூழ பிருந்தாவனம் நோக்கிப் பாத யாத்திரையாக வந்து கொண்டிருக்கிறார்களாம் ! அவர்களின் பாடலைக் கேட்கத்தான் வந்தேன். அத்துடன், தங்களையும் அழைத்துப் போகலாம் என்று நினைக்கிறேன்.

சூர்: பக்த சங்கமத்தைப் போன்ற பகவத் கைங்கர்யம், உலகத்தில் எதுவுமே கிடையாது, துளஸிதாஸ்! நானும் வருகிறேன். பக்தர்களே ! புறப்படுங்கள் ! ஆனால் ஒன்று - என்னை யாரும் பக்த மீராவிடம் அறிமுகப்படுத்த வேண்டாம் !

துளஸி: மகாகவி! பக்த மீராவின் நெஞ்சமெல்லாம் கிரிதாரி முராரிதான்! யாரும் யாரையும் அறிமுகப்படுத்த முடியாது.

அவர்களும், யாரையும் பார்க்க மாட்டார்கள்! புறப்படுங்கள்! நாம் என்ன பேசினாலும், மீராவின் காதிலும் கேட்காது. மீராவின் காதில் மானஸீகமாக கேட்டுக் கொண்டிருப்பதெல்லாம் கண்ணனின் குழலோசைதான்! பரமாத்மா கண்ணனோடு, பக்த மீராவின் ஜீவன்-படிப்படியாகக் கரைந்து, பரமாத்ம பாத தாமரைகளின் சங்கமத்தில் கலந்து கொண்டிருக்கின்றது! புறப்படுங்கள், அனைவரும் சென்று மீராவை தரிசிப்போம்!

(அனைவரும் புறப்படுகின்றனர்.)

## காட்சி 22

(இடம்: பிருந்தாவனம், கையில் தம்புராவை மீட்டியபடி தன்னை மறந்த நிலையில் மீரா பாடுகிறாள். பக்தர்களும் மீராவின் பஜனையில் சப்ளாக் கட்டையையும் கைகளையும் தட்டிக் கொண்டும், குழலூதிக் கொண்டும்- பக்தியோடு பாடி ஆடுகின்றனர். பலர் கூடி வேடிக்கை பார்க்கின்றார்கள். கூட்டத்தில் துளஸிதாஸ், சூர்தாஸ், மற்றும் பக்தர்கள்- சாதாரண யாத்ரீகர்களின் மாறுவேடத்தில் அக்பர், டான்சேன் ஆகியோரும் காணப்படு கின்றனர்.)

மீராவின் பாடல்:

கிருஷ்ணா! முகுந்தா! முராரி! முரளிமோகனா!
அனைத்துயிர்க்கும் ஜீவநாயகா! ஹரிகிருஷ்ணா! ஹரி!
ஹரி!
ஆசார அனுஷ்டானமா சொர்க்கம்? ஹரிபாத சேவையே
சொர்க்கம்!
கோயிலுக்குள் மட்டுமா கோபாலன்? கும்பிடுவோர்
நெஞ்சமெல்லாம் கோவிந்தன் கோபாலன்!

நெஞ்சமெல்லாம் பேராசை ! நீங்காத பொறாமை !

நதியெலாம் நீராடக்கிட்டு மா முக்தி? கிருஷ்ண, கிருஷ்ண,
கிருஷ்ண, கிருஷ்ண, கிருஷ்ண, கிருஷ்ண, கிருஷ்ண
ஹரே ! ஹரே!ஹரே!

குளித்தாலே முக்தி என்றால் - குளநதியில் வாழும்
மீனெல்லாம் முக்தி நெறி செல்லுதா?

கடுந்தவயோகம் ! கணக்கிலாமோகம் ! கோபதாபம் !
காட்டில் கந்தமூல கனி தின்றாலே முக்தி என்றால் -
கோபாலனை நினையாத குரங்குக்குமே முக்தி !
என் நாயகனை நினையாமல் இலைதழை மேயும் !
ஆட்டிற்கும் முக்தி ! மாட்டிற்கும் முக்தி !
ஹரேகிருஷ்ணா ! ஹரி ஹரி ! முகுந்தா ! முராரி !

குளித்தாலும் கோவிந்தன் வரமாட்டான்!
கொடு வனக் கடுந்தவம் செய்தாலும், கோடி யாகம்
செய்தாலும்-

கோவிந்தன் வருவானா? கோபாலன் வருவானா?
வரமாட்டான்! வரமாட்டான்!- வான் கிழித்து வரமாட்டான்!
இலைதழை தின்றாலும் என் முரளி வரமாட்டான் !
வரமாட்டான்!

கோவிந்தா ! கிருஷ்ணா ! கோபாலா ! கண்ணா !
ஆதி மூலமே ! அனைத்துயிர்க்கும் நாயகா ! ஐயா, மகாப்
பிரபு!-
கூப்பிட்டாலே நீ வருவாய் ! கூடவே, நீ இருப்பாய்! கூடியே,
நீ இருப்பாய்!
நெஞ்சுருகி நினைத்தாலே நீ வருவாய் ! நினைவெல்லாம்,
நீயாவாய்!
முக்திக்கு வித்தே ! மூலப்பொருளே ! முகுந்தா ! கிருஷ்ணா !
முராரி! முரளி!

ஹரே கிருஷ்ண ! ஹரே கிருஷ்ண ! ஹரே கிருஷ்ண !
கிருஷ்ண, கிருஷ்ண ஹரே, ஹரே!
கோபாலன் குழலமுத கானமழை கேட்டாலே - முக்தி !
கோகுலக் கண்ணா ! கோபியர் கிருஷ்ணா! என்றாலே
சொர்க்கம் ! இனிக்கும் பரமபதம்!
ஹரே கிருஷ்ண ! ஹரே கிருஷ்ண ! ஹரே கிருஷ்ண ! ஹரே,
ஹரே!

(பாடி முடித்ததும், மீரா பக்திப் பரவசமாகித் தரையில் விழுகிறாள். சில பெண்கள் தண்ணீரைத் தெளித்து, மீராவிற்கு சுயநினைவை ஏற்படுத்துகிறார்கள்.)

மீரா: (தரையிலிருந்து எழுந்து கண்ணீர் சொரிய) கிரிதாரி!கிருஷ்ணா! ஹே பிரபு ! கண்ணா ! மாயவா ! கோபாலா! கோவர்த்த நேசா ! நீயே எல்லாம் எனக்கு!

உன்னையன்றி யாரும் இல்லை, எனக்கு ! நீ மரமா? அதில் வாழும் பறவை நான் ! நீ மழை மேகமா? உனைப்பார்த்து ஆடும் மயில் நான் ! நீ மலரா? நான் மலர் கட்டும் நார்! உன் அடிமை நான் கண்ணா ! என் ஐம்பொறிகளிலும் கண்ணன் ! அகத்திலும் கிரிதாரி !ஐம்புலன்களிலும் கிருஷ்ணன் ! எங்கெங்கும் என் நாயகன் பிரபு ! உன்னோடு என்னையும் ஆட்கொள் பிரபு ! அடிமை கொள், பிரபு (அழுது கொண்டே போகிறாள்)

சூர்: துளஸிதாஸ் ! தாய் மீரா, தானமிட்டு தம்பூரா மீட்டிப் பாடி ஆடிய புனித மண்ணில், என் கைகளை வையுங்கள் ! (துளஸிதாஸ் அப்படியே செய்ய) அம்மா, என் தாயே மீரா !நீ ராதையின் அம்சமம்மா! உன் பாதமலர்களை நினைத்து உன் காலடிகள் பட்ட இம்மண்ணை நமஸ்கரித்துக் கொள்கிறேன் ! (தரையைக் கையால் தொட்டு கண்களில் ஒற்றிக் கொண்டு தரையில் தன் தலையை வைத்து வணங்குகிறார்.)

இப்புனித மண்ணில் உன் காலடிகள் பட்ட இடத்தில், என் பிரபு கோகுலக் கண்ணனின் பாத ஸ்பரிசமும் இருப்பதை எனக்குள் உணர்கிறேன், தாயே ! (அழுகிறார்)

(தனி இடத்தில்).

அக்: (மீரா சென்ற திசை நோக்கிக் கை குவித்து நிற்கிறார்)

டான்: ஷா இன் ஷா! உங்கள் பழைய அமைச்சர் ஆத்ம ராமின் மகனைப் பார்த்தீர்களா?

அக்: டான்சேன் ! ஆத்மராமின் மகன் துளஸியை நான் பார்க்கவில்லை ! சர்வமத சமரசஞானி, 'ராம சரித மானஸ்' என்ற காப்பியத்தைப் படைத்த சிருஷ்டிப்பு பிரமதேவனைத்தான் துளஸிதாஸ் என்ற பெயரோடு பார்த்தேன்! துளஸிதாஸரையும் வணங்குகிறேன், டான்சேன் !

டான்: அவருடன் வந்திருப்பவர்தான் மகாகவி சூர்தாஸ் !

தீபக்ராக அரங்கேற்றத்திற்குப் பிறகு நான் உயிருடன் இருந்தால், இவரை அழைத்து வந்து நம் தர்பாரில் பாடச் செய்வேன்! அப்பொழுது பாருங்கள் - நடக்கக்கூடிய, மாயாஜால சங்கீத தெய்வீக அற்புதங்களை !

அக்: டான்சேன் ! சூர்தாஸையும் இங்கிருந்தே திசைநோக்கி நமஸ்கரித்துக் கொள்கிறேன் ! இனி, நாம் புறப்படலாம்.

(புறப்படுகின்றார்கள்)

## காட்சி 23

(இடம்: டெல்லியில் மிகப்பெரிய பொது இடத்தில் ஓர் மாபெரும் அரங்கம் அமைக்கப்பட்டுள்ளது. அக்பரும், அவர் சபையினரும், அவர் ஆட்சிக்குட்பட்டவர்களும், கலைவாணர்களும், கவி

வாணர்களும், பொதுமக்களும் பெரும் திரளாகக் கூடியுள்ளனர்) அரங்க மேடையில் டான்சேன் மட்டும் தம்புராவுடன் அமர்ந்துள்ளார்.)

அக்: (எழுந்து தலைவணங்கி) அனைவருக்கும் சலாம்! எங்கள் ராஜ தர்பாரின் ஆஸ்தான தலைமைக் கவிஞரும், நவரத்தின அம்சத்தைப் பெற்றவரும், பிறவிக் கவிஞரும், பெரும் பாடகருமாகிய டான்சேன் தற்பொழுது 'தீபக் ராக'த்தைப் பாடி முடிக்கப் போகிறார்!

மனிதன், கடவுளை நெருங்கக்கூடிய ஒரு மாபெரும் சக்தியாகிய சங்கீத ஞானத்தைப் பெற்றிருக்கிறான்!

சங்கீதத்தின் சக்தியை நாம் அறிந்திருக்கின்றோம். சங்கீதம் என்பது பரம்பொருளுக்குரிய ஒரு ஆலாபனை! அது பாசபந்தமற்ற இறைவனுக்கே மகிழ்ச்சியைத் தரக்கூடியது. ஊன் உருக, உயிர் உருக, பாடப்படும் முறையோடு பாடினால், பட்ட மரமும் துளிர்க்கும்; [illegible] காயாகிக் கனியாகும்; பறக்கும் பறவைக் கூட்டமே வானத்தில் அந்தரத்தில் நிற்கும்; மேகங்கள் வானத்தில் கூடும்; பரம் பொருளின் அருள், செல்வமாகவே வானத்தையும் துளையிட்டுக் கொண்டு, தங்கமாக மழை பொழியும்; குருடனும் கண் விழிப்பான்; செவிடனும் கேட்பான்; ஊமையும் பேசுவான்!

மதங்களைக் கடந்த மாபெரும் தெய்வசக்தி, சங்கீத சாம்ராஜ்யத்தில் ஸ்தாபிதமாகி உள்ளது. சங்கீதம் ஒன்றுக்குத்தான் மனிதனுக்கு சாந்தி சமாதானத்தைத் தரும் சக்தி உண்டு என்பது, சத்தியமான உண்மை!

தற்பொழுது டான்சேன் தீபக் ராகத்தைப் பாடிக் காட்டப்போகிறார். தீபக்ராக அரங்கேற்றம், என்னைப் பொறுத்த

மட்டிலும் எனக்குள்ளாக ஒரு பயங்கர உணர்ச்சியைத் தான் ஏற்படுத்தி இருக்கின்றது.

இந்த தீபக் ராக அரங்கேற்ற விழாவை, சத்தியமாகவே நான் விரும்பவில்லை.

ஏனென்றால்- தீபக் ராகத்தை முழுவதும் முறைப்படி பாடி முடித்தால்-முடிவில் எங்கெங்கும் பயங்கரமான வெப்பம் தாக்குமாம்! பாடியவரும் சாம்பலாகிக் கருகி விடுவாராம்!

அப்படி எதுவும் நடந்து விடாமல் இருக்க, இறைவனை எனக்குள்ளாகப் பிரார்த்திக்கிறேன். அப்படியும் என் பிரார்த்தனை இறைவனின் காதில் எட்டவில்லை என்றால்- அக்பரின் ராஜ சபையில் உள்ள ஒரு நவரத்தினம் கருகி, நம் கண்முன்னாலேயே கொடிய அக்னிக்குள் எரிந்து நாசமாகும்!. அப்பொழுது-

நாமெல்லாம் இங்கே கூடி இருந்து ஒரு உலக அதிசயத்தைப் பார்த்ததாக வேண்டுமானால்- நமக்குள்ளாக ஆச்சரியப்பட்டுக் கொள்ளலாம்! ஆனால், ஒரு மகாகவியின் சரீர சாம்பலுக்குத்தான் சம்பிரதாய மரியாதை செலுத்த வேண்டிய பரிதாப நிலையில் இருந்தாக வேண்டும்!

மகாகவி டான்சேனுக்கு அமைக்கப்பட்டுள்ள அரங்கேற்ற மேடை மங்கல விழா மேடையா? சங்கீதச் சக்ரவர்த்தி, சாம்பலாகிக் கருகும் தகன மயானமா?

தர்ம சங்கடமான இந்த நிகழ்ச்சியைத் தடுத்து நிறுத்தும் சக்தி எனக்கில்லை! இதைத் தடுத்து நிறுத்த முயற்சித்த இந்தப் புவி அரசன் அக்பர், கவியரசர் டான்சேனிடம் தோற்றுப் போய்விட்டான்!

கூடியுள்ள நீங்கள்தாம்- தீர்ப்பு வழங்க வேண்டும்! ராக அரங்கேற்றம் என்ற பெயரால்-நீங்கள் எல்லாம், மங்கல விழாவிற்கு

வந்திருக்கின்றீர்களா? அல்லது, மாபெரும் இசை ஞானியின் நகலைக் கிரியைக்கு வந்திருக்கின்றீர்களா? தீர்ப்பு வழங்குங்கள். அவையினரே! தீர்ப்பு வழங்குங்கள்!

டான்: (எழுந்து) ஷா இன் ஷா ! பாடுவதற்கு முன்பு சில வார்த்தைகளைப் பேச என்னை அனுமதிக்க வேண்டும்.

அக்: ஷாயர் ஏ ஆஜம்! உங்களுக்கில்லாத அனுமதியா? பேசுங்கள்!

டான்: பெரியோர்களே! இந்த தீபக் ராக அரங்கேற்றத்தை நானே என் இசை ஞானத்திற்கு விட்ட சவாலாக ஏற்றுக் கொண்டு பாடப் போகிறேன். இதன் விளைவிற்கு ஷா இன் ஷா அவர்களோ, வேறு யாருமோ பொறுப்பல்ல! நானே முழுப் பொறுப்பு! நானே விருப்பப்பட்டு ஏற்றுக் கொண்டதுதான், இந்த தீபக் ராக அரங்கேற்றம்! என் தனி மனித உரிமையத் தடுத்து நிறுத்தும் அதிகாரம் எவருக்குமே இல்லை!

ஒரு மனிதனுக்கு அவன் ஆயுள் சாஸ்வதமல்ல, மரணமே நிரந்தரம்! அதுவும் என்னைப் போன்ற ஒரு கவிஞனுக்கு, ஒரு ராகத்தைப் பாடி அக்னியை மூட்டிக் காட்டி, ஒரு பெரும் சாதனையை நடத்திக் காட்டி விட்டு - அதே அக்னிக்குள் மரணத்தைத் தழுவுவதென்றால், அம் மரணத்தால் கிட்டும் புகழ் யாருக்குக் கிடைக்கும்? மரணத்தால் கிடைக்கும் புகழ், என் மகாபாக்கியம்! அப்படிப்பட்ட இலட்சிய மயமான இன்ப சாவு ஏற்பட்டால், உலகம் உள்ள அளவும் நான் புகழுடம்போடு வாழ்வேன்! கவிஞன், ஒரு கவிதை பிரம்மா! கவிஞன், என்றும் சாவதில்லை! கவிதைக்குள் கவிஞன் நிரந்தரமாக வாழ்பவன்!

நான் இச்சாதனையை சாதித்துவிட்டால், உலகத்திற்கே ஆஸ்தான தலைமைக் கவிஞன் என்ற புகழ் பெறுவேன்!

நல்லவர்களின் வாயிலிருந்து பிறக்கும் வாழ்த்தும், சாபமும் பலிதமாகும் பொழுது - சங்கீத சாம்ராஜ்யத்தின் சக்தியைக் கவிஞனாகிய நான் நிரூபித்துக் காட்ட வேண்டாமா?

பரம்பொருளே! என் தீபக் ராக சாதனை நிறைவேற திருவருள் செய்! எல்லாம் வல்ல அல்லாவே! ஈசனே! இறைவா! என் லட்சியம் ஈடேறத் துணை செய்!

(வானை நோக்கிக் கையை விரித்து வணங்கி உட்காருகிறார்)

மான்: இருப்பதோ ஒரே இறைவன்! ஷா. இன் ஷா அவர்களின் பிரார்த்தனையும், மகாகவி டான்சேனின் பிரார்த்தனையும் வேறு வேறாக - ஒன்றிற்கொன்று முரணாக இருக்கின்றன!

பரம் பொருளின் தீர்ப்பைப் பொறுத்திருந்து பார்ப்போம் !

டான்: (தீபக் ராகத்தைப் பாடத் தொடங்குகிறார். முதல் பகுதியைப் பாடிக் கொண்டிருக்கும் பொழுதே-

எங்கெங்கும் வீசும் காற்று, அக்னியோடு வீசுகிறது! மரம், செடி, கொடி களிலுள்ள இலை, தழை, பூக்கள் கருகிக் கீழே கொட்டு கின்றன! குளம், ஆறு, அருவிகளில் உள்ள தண்ணீர் கொதிக் கின்றது! வானத்துப் பறவைகள் குளிர்ந்த காற்றை நாடி வானத்தின் உச்சிக்கு மேல் உச்சி என்று பறக்கின்றன! விளக்குகளின் திரிகள் வானத்தை நோக்கி யாகத் தீயைப் போல் எரிகின்றன! வெப்பம் தாங்காமல் சபையினரும், கூட்டத்தினரும் சிதறி ஓடுகின்றார்கள்! அக்பர் திகைத்து எழுந்து நிற்கிறார். அவர் கையிலிருந்த ரோஜா கருகிக் கீழே விழுகிறது!)

அக்: (அலறுகிறர்) டான்சேன்! பாடலை நிறுத்துங்கள்! பாடியது போதும்! ராஜ உத்தரவாக இந்த உத்தரவை இடுகிறேன்! டான்சேன், இனியும் பாடிக் கொண்டிருக்கக் கூடாது!

டான்சேன், உடனே பாடுவதை நிறுத்த வேண்டும் நிறுத்துங்கள்!

(டான்சேன் நிறுத்தாமல் தொடர்ந்து பாட ஆரம்பிக்கிறார். அதற்குள் ஹரிதாஸரும், மாய்பிரூபாவும் நுழைகின்றனர்.)

ஹரி: (கத்துகிறார்) டான்சேன்! பாடாதே நிறுத்து! இது உன் குருவின் ஆணை!

(பாடலை நிறுத்திய டான்சேன், மயங்கிக் கீழே சாய்கிறார்)

ஹரி: ஷா இன் ஷா அவர்களே! நான்தான் டான்சேனுக்கு ராகங்களைக் கற்பித்த குரு! என் மாணவி மாய்பிரூபாவை அழைத்து வந்திருக்கிறேன்.

இவள் மேக ராகத்தைப் பாடினால் தான்- தற்பொழுதுள்ள அக்னி அவியும்! பழைய சீதோஷ்ணம் நிலவும்! மாய்பிரூபாவை மேகராகம் பாட அனுமதியுங்கள்!

அக்: சுவாமிகளே! உங்கள் மாணவி மேக ராகம் பாட அனுமதிக்கிறேன்! (உடனே அரங்கத்தில் ஏறி மாய்பிரூபா மேக ராகத்தைப் பாடத் தொடங்குகிறாள்)

(மாய்பிரூபா மேக ராகத்தை முதலில் தாழ்ந்த குரலில் மெதுவாக, ஆனால் அற்புதமான முறையில் பாடிக் கொண்டிருக்கிறாள். அவள் குரல் உச்ச ஸ்தாயியில் ஓங்க ஓங்கப் பல அற்புதங்கள் நடைபெறத் துவங்குகின்றன. எங்கெங்கும் பரவிக் கிடந்த வெப்பம் நீங்கி குளிர்ந்த காற்று வீசுகின்றது! வானத்தில் மேகங்கள் சூழ்ந்து இருண்டு மழை கொட்டுகிறது! கூட்டத்தினர் மீண்டும் கூடி மாய்பிரூபாவின் மேக ராகத்தை மழையில் நனைந்தபடியே ரசிக்கிறார்கள்! அக்பர் முகம் மலர்கிறது. ஆனால் டான்சேன் மட்டும் மயங்கிய நிலையிலேயே கிடக்கிறார். ஹரிதாஸ்

சுவாமிகளும், அக்பரும், டான்சேன் மயங்கிக் கிடக்கும் மேடைக்குச் செல்கின்றனர். மேக ராகமும் பாடி முடிக்கப்படுகிறது.)

ஹரி: (தன் கமண்டலத்திலுள்ள தண்ணீரை, டான்சேன் முகத்தில் தெளித்து) டான்சேன்! எழுந்திரு! (டான்சேன் மெல்ல விழித்துப் பார்த்து ஹரிதாஸரையும், அக்பரையும் படுத்த நிலையிலேயே வணங்குகிறார்)

ஹரி: அக்பர்ஷா! மேகராகத்தால் சுற்றுப் புறத்தைப் பழைய நிலைக்குக் கொண்டு வந்து விட்டோம். ஆனால் தீபக் ராகத்தின் முதல் பகுதியைப் பாடத் தன் குரல் ஓசையை டான்சேன் தன் உடலிலிருந்து எழுப்பிய காரணத்தால், டான்சேனின் உடலுக்குள் பயங்கர அக்னி மூண்டிருக்கிறது. உடனே அரண்மனை மருத்துவர்களைக் கூப்பிடுங்கள்!

அக்: (கூட்டத்தைப் பார்த்து) ஆஸ்தான ராஜ வைத்தியரே! இங்கே உடனே வாருங்கள்!

(ராஜ வைத்தியர், ஓடோடி மேடைக்கு வருகிறார்)

ஹரி: வைத்தியரே! தற்பொழுது டான்சேனால் எழுந்து உட்காரவோ, நடக்கவோ கூட முடியாது. டான்சேன் உடலுக்குள் அக்னி எரிந்து கொண்டிருக்கிறது. உடனே டான்சேனை, உங்களிடம் கொண்டு போங்கள். உடனிருந்து வைத்திய சிகிச்சைகளால் குணப்படுத்தி, பழைய நிலைக்குக் கொண்டு வாருங்கள்!

அக்: (சபையினரைப் பார்த்து) டான்சேனைப் பல்லக்கில் தூக்கி வைத்து வைத்தியர் வீட்டிற்குக் கொண்டு செல்லுங்கள்!

(ஒரு பல்லக்கு வருகின்றது. சேவகர்கள் டான்சேனைத் தூக்குகிறார்கள்.)

அக்: இந்தப் பல்லக்கு வேண்டாம் நான் ஏறிச் செல்லும் ராஜ பல்லக்கில் டான்சேனை அனுப்பி வைப்பது-மாபெரும் கவிச்சக்ரவர்த்திக்கு ஒரு சாதாரண புவிச் சக்ரவர்த்தி தரும் மரியாதை! ராஜ சபையின், வீர வணக்கம்!

(அக்பரின் ராஜ பல்லக்கில் டான்சேன் அனுப்பி வைக்கப் படுகிறார்)

அக்: (ராமதாஸரைப் பார்த்து) டான்சேன் பரிபூரண குணமடைய எவ்வளவு நாட்களாகும்?

ஹரி: அக்பர் ஷா! குறைந்தது இரண்டு மாதமாகும்!

அக்: மான்சிங்! இங்கே வாருங்கள்! கவிச்சக்ரவர்த்தி நவரத்ன நாயகர் டான்சேன், பரிபூரண உடல்நலம் பெற்று சபைக்கு வரும் பொழுது- ஒரு மகாசக்ரவர்த்தியை வரவேற்கும் விழா ஏற்பாடுகள் நடைபெற வேண்டும்.

மான்: அப்படியே செய்கிறோம், ஷா இன் ஷா!

அக்: மான்ஸிங்! இரண்டு தங்கத் தட்டுகளில் விலையுயர்ந்த பரிசுப் பொருள்களைக் கொண்டு வாருங்கள்!

(சேவகர்கள் இரண்டு தட்டுகளில் பரிசுப் பொருள்களைக் கொண்டு வருகின்றார்கள் )

அக்: (ஹரிதாஸரிடம் ஒரு தட்டைத் தந்து) அடியேனின் சிறு காணிக்கையை மறுக்காமல் ஏற்றுக் கொள்ளுங்கள்!

ஹரி: மாணவனின் உயிரைக் காக்க வேண்டியது, குருவின் கடமை! என் கடமையைத் தானே, நான் செய்தேன்? இதற்கு எதற்குப் பரிசு?

அக்: சுவாமிகளே! இது, எங்கள் சம்பிரதாய மரியாதை! என் திருப்திக்காகவாவது, நீங்கள் ஏற்க வேண்டும்!

ஹரி: அக்பர் ஷா! இரண்டு தட்டுக்களையுமே என் மாணவி மாய்பிரூபாவிடமே கொடுங்கள்! மாணவிக்குத் தரும் மரியாதை, தானாகவே குருவையும் சார்ந்து விடும்!

அக்: தாயே! கவிச் சக்ரவர்த்தினி மாய்பிரூபா! குருவின் உத்தரவை நிறைவேற்றுங்கள்! (இரண்டு தட்டுக்களையும் தர, மாய்பிரூபா பெற்றுக் கொள்கிறாள். அக்பர், இருவர் பாதங்களையும் தொட்டு வணங்குகிறார்.)

ஹரி: (கையை உயர்த்தி ஆசி வழங்குகிறார்) அக்பர் ஷாவுக்கு சர்வ சகல சௌபாக்கியங்களும், தீர்க்காயுளும், திரேக சௌக்கியமும் சம்பூரணமாகப் பொங்கட்டும்! நாங்கள் புறப்படு கின்றோம்!

(இருவரும் புறப்படுகின்றனர்)

அக்: மான்ஸிங்! டான்சேன் பரிபூரணசுகம்பெற, வைத்தியம் மட்டும் போதாது! இறைவனின் கிருபாகடாக்ஷமும் வேண்டும்! சகல மதக் கோவில்களிலும், பள்ளி வாசல்களிலும் டான்சேனுக் காகப் பிரார்த்தனைகள் இடைவிடாமல் நடைபெற ஏற்பாடு செய்யுங்கள்!

மான்: அப்படியே செய்கிறேன், ஷா இன் ஷா!

அக்: அல்லாஹூஅக்பர்! அமீன்! ஓம்! ஆமென்! பரம்பொருளே! டான்சேனைக் காப்பாற்றி அருள்செய்! (அக்பர் மண்டியிட, கூடி உள்ள எல்லோரும் அக்பர் கூறியதையே கூறி மண்டியிட்டு வணங்குகின்றனர். இந்து கோவில் பூஜை மணிஓசை-பள்ளிவாசல் தொழுகை-தேவாலயத் திருமணி ஓசை எழுகின்றன)

## காட்சி 24

(உடல் நலம் பெற்ற டான்சேன், பல்லக்கில் ராஜமரியாதை களுடன் வாத்தியங்கள் முழங்க அக்பரால் தர்பாருக்கு அழைக்கப் படுகிறார். மக்கள் வாண வேடிக்கைகளோடு வாழ்த்தொலி எழுப்பி, டான்சேன் பல்லக்கைச் சூழ்ந்து வருகின்றனர்)

மக்: மகாகவி டான்சேன் வாழ்க! ஆஸ்தான கவிச் சக்ரவர்த்தி நாயகர் டான்சேன் வாழ்க! வாழ்க!

(பல்லக்கு அரண்மனையை அடைய, டான்சேன் பல்லக்கி லிருந்து இறங்கி தர்பார் மஹாலை நோக்கி நடந்து வருகிறார். அக்பரும் ராஜசபையில் உள்ள அமைச்சர்கள், கவிஞர்கள், தளபதிகள் சூழ, டான்சேனை எதிர்கொண்டு வரவேற்கின்றார்.)

அக்: (டான்சேனைக் கட்டித் தழுவியபடியே பொன் னாடையைப் போர்த்தி, தன் கழுத்திலுள்ள மணிமாலைகளை டான்சேனின் கழுத்தில் அணிவித்து) மகாகவிக்கு இந்த ராஜ சபையின் இதயம் கனிந்த வரவேற்பு! வாருங்கள்! (டான்சேன் இருக்கையில் அமர, எல்லோரும் அமர்கின்றார்கள்.)

டான்: ஷா இன் ஷா! தங்களுக்கும், இந்த ராஜசபையின் அங்கமாக விளங்கும் என் சகோதரர்களுக்கும் எப்படி என் நன்றியைத் தெரிவிப்பது என்றே புரியவில்லை. அனைவரின் பாசக் கடலில் நான் ஆனந்தமாக நீந்தித் திளைக்கின்றேன், ஷா இன் ஷா !

அக்: கவிச்சக்ரவர்த்தி டான்சேன்! தங்களுக்குச் சமமாக இதுவரையிலும் எந்தக் கவிஞனும் பிறந்ததில்லை! பிறக்கப் போவதும் இல்லை! காலத்தைக் கடந்த கவித்துவ சாம்ராஜ்யத்தின் சகாப்தமாக சரித்திரம் படைத்தவர்- தாங்கள்!

டான்: மன்னிக்க வேண்டும், ஷா இன் ஷா! என் மீது கொண்ட பாசத்தால்தான்! இப்படி அளவுக்கு மீறி என்னைப் புகழ்ந்து விட்டீர்கள்! என்னையும் விடச் சிறந்த கவிஞர்களும் இருக்கி றார்கள்!

அக்: தங்களையும் விட சக்தி படைத்தவராக தாங்கள் குறிப்பிட்ட மகாகவிஞர்கள் யார், யார்- டான்சேன்! அம்மகா கவிஞர்களிலும் தலை சிறந்த மகாகவி, யார் டான்சேன்?

டான்: ஷா இன் ஷா! மனித வாழ்க்கையின் சிறப்பே- மனிதனின் மனம், வார்த்தை, செயல் ஆகியவைகளில் தான் இருக் கின்றன.

மனித மனத்திலுள்ள எண்ணங்கள் தர்மத்திற்கும், அதர்மத்திற்கும் அடிப்படையான விதைகள்!

மனிதனின் வாயிலிருந்து வரும் வார்த்தைகள் காற்றில் கரைந்து மறைந்தாலும்-ஜீவனுள்ளவை! வாழ்த்தும் போதும், சபிக்கும் போதும் அவை பலிக்கும்! சங்கீத வடிவில் வெளிப்படும் பொழுது சங்கீத ராகங்களில் இறைவன் வாழும் இடமாகி, பஞ்ச பூதங்களும் சங்கீதத்தின் பலா பலனைத் தந்தே தீரும்!

மனிதன் செய்து கொண் டிருக்கும் செயல்களோ, கடவுளின் பேரேட்டில் இடம் பெறும் கூட்டல், கழித்தல், கணக்குகள்! கணக்குகளின் பலா பலன்களும், மனிதனுக்கு காலத்தின் வடிவில் பதில் சொல்லும்! தீர்ப்பு வழங்கும்!

ஆக, நாங்கள் வாழும் சங்கீத சாம்ராஜ்யம், வார்த்தையோடு தொடர்பு கொண்ட ஜீவ சாம்ராஜ்யம்! இந்த சங்கீத சாம்ராஜ்யத்தில் என்னை விடவும் வல்லமை பெற்ற மகாகவிகள் இருக்கின்றார்கள், ஷா இன் ஷா !

உடலில் உள்ள ஊனில், உயிர் சமாதி ஆகிவரும் மீராவின் பாடலைத் தாங்கள் கேட்க வில்லையா? நம் சபையிலிருந்து வெளியேறிய துளஸிதாஸின் கவிதைகளைத் தாங்கள் கேட்கவில்லையா? கேசவராய சுவாமிகளின் ஜீவ கவிதைகளைத் தாங்கள் கேட்க வில்லையா? எங்கள் எல்லோரையும் மிஞ்சக் கூடிய ஒரு மகா கவியை- குருடராக விளங்கும் சூர்தாஸைத் தாங்கள் பார்த்திருக்கிறீர்களோ? அவர்தான், எல்லோரிலும் உயர்ந்த மகாகவி!

சூர்தாஸ் கவிதை பாட ஆரம்பித்தால் - ஆஹா! எவ்வளவு மாயா ஜாலங்கள், மந்திர சித்துக்கள் நடைபெறுகின்றன? இப்படிப் பட்ட சக்தி, எங்களில் யாருடைய கவிதைக்கும் கிடையாது! இவ்வளவுக்கும் சூர்தாஸ், கல்வியறிவு பெறாதவர்! கண்களை இழந்த குருடர்!

சங்கீத சாம்ராஜ்யத்தில் சூர்தாஸ்தான் சூரியன்! அச்சூரியனின் முன்பு துளசிதாஸின் கவிதைகள் சந்திரனாக மங்கி விடுகின்றன! கேசவராய சுவாமியின் கவிதைகளோ, இச்சூரியனின் முன்பு விண்மீன்களாகத் தான் ஒளி மங்கித் தோன்றுகின்றன!

உலகமெல்லாம் 'சூரசூர துளஸீ சசீ உடுகண கேசவராய்' என்று பேசப்படும் சங்கீத விமர்சனம், தங்கள் காதில் விழவில்லையா?

அக்: டான்சேன்! தாங்கள் குறிப்பிடும் மகாகவி சூர்தாஸைத் தாங்களே சென்று ராஜமரியாதைகளுடன் அழைத்து வந்து, இதே தர்பாரில் சங்கீத முழக்கம் செய்ய ஆவன செய்ய வேண்டும்.

டான்: ஷா இன் ஷாவின் விருப்பத்தை நிறைவேற்றத் தயாராக இருக்கின்றேன். ஆனால் அவர், மனிதர்கள் எவரையும் பாட மாட்டார்! கிருஷ்ணனை மட்டுமே பாடுவார்! சூர்தாஸ் பாட ஆரம்பித்தால், வாத்தியக் கருவிகளே தேவை இல்லை, ஷா இன் ஷா!

எங்கிருந்தோ வீணை இசை எழும்பும்! ஜால்ரா முழக்கம் கேட்கும்! கானமுதக் குழலோசை தவழும்! நர்த்தனசிலம்பொலியும் நடுநடுவே தானாகக் கேட்கும்! இம்மாயா ஜால சங்கீத இன்னிசை, சூர்தாஸின் குரலிலிருந்து வருகின்றனவா? அல்லது தெய்வ சக்தியா என்பதே நம்மால் கண்டுபிடிக்க முடியாது. வா இன் வா !

அக்: டான்சேன்! சூர்தாஸின் சங்கீத முழக்கத்தைக் கேட்கும் எங்கள் ஆர்வத்தை அதிகமாகத் தூண்டி விட்டு விட்டீர்கள். மகா கவி!

விரைவாக அவரை அழைத்து வரப் புறப்படுங்கள்! சூர்தாஸ், கிருஷ்ணனையே பாடட்டும்!

சர்வமத சமரசம் கொண்ட இதே தர்பாரில், கிருஷ்ண கானம் முழங்கட்டும்! உலகத்திற்கு ஒன்றான இறைவனை, இங்குள்ள எல்லோரும் கிருஷ்ணகானத்திற்குள் கற்பனை செய்து களிப்படையத் தயாராக இருக்கின்றோம்!

பாதிரியார்: (எழுந்து) கிருஷ்ணா என்ற வார்த்தைக்குள் கிறிஸ்துவைக் காணும் ஞானமனோபக்குவம் என்னிடம் உள்ளது!

அக்: பாதிரியாரே! சங்கீதத்தில் சர்வேஸ்வரன் வாசம் செய்கிறான் என்பதை ஓம், ஆமென்! அமீன்! என்ற ஓசைகள் நமக்கெல்லாம் தெளிவு படுத்தவில்லையா?

சூரஜ்கான்: 'ராமனும் ஒன்றே! ரஹீமும் ஒன்றே! என்று ராம் ரஹீம்! என்று முழங்கிய கபீர்தாசரை நாங்கள் மட்டும் மறந்து விடுவோமா, வா இன் வா!

பாதிரியார்: வா இன் வா ! மனம், வார்த்தை, செயல்களின் தூய்மை, என்பவை அனைத்து மதங்களுக்குமே பொதுவான தத்துவம்,

எங்கள் வேதத்தில் 'தட்டுங்கள், திறக்கப்படும்! என்று வருகின்றது. எதைத் தட்டுவது?

மனிதனின், பரம்பொருளின் இதயத்தைத் தட்டுவது.! தட்டினால் திறக்கப்படுகின்ற இரக்கமுள்ள மனம், தூய்மையான மனமாகத் தான் இருக்க முடியும். இது மனத் தூய்மைக்காகச் சொல்லப்பட்டது.

அதே எங்கள் வேதம்'கேளுங்கள் கொடுக்கப்படும்' என்று சொல்கின்றது. எதைக் கேட்பது? யார் கேட்பது? யாரிடம் கேட்பது? கேட்டால் யார் தருவது?

இது வார்த்தையின் தூய்மையை விளக்குவது! தூய்மை நிறைந்த வார்த்தையோடு, தூய்மையான மனிதனிடம், அல்லது கடவுளிடம் கேட்டால், கேட்டது கிடைக்கும். காரணம்- வார்த்தைகள் ஜீவன் உள்ளவை!

பரம்பொருளைப் பிரார்த்திப்பதே வார்த்தைகளின் வழியாகத் தானே?

இதே எங்கள் வேதம், 'தேடுங்கள் அகப்படும்'! என்று சொல்கிறது. எங்கே தேடுவது? யாரிடம் தேடுவது? எப்படி அகப்படும்?

இது செயல்களின் தூய்மையை விளக்குவது! தூய்மையான செயலைச் செய்து, மனிதனிடமோ அல்லது கடவுளிடமோ தேடினால், தேடியது-அது கண்டிப்பாகக் கிடைக்கும்!

அக்: அற்புதமான விளக்கம், பாதிரியாரே! (டான்சேனைப் பார்த்து) மகாகவி சூர்தாஸை அழைத்து வரப் புறப்படுங்கள், டான்சேன்!

டான்: ஷா இன் ஷா! சூர்தாஸை இங்கு அழைத்து வருவதென்பது அவ்வளவு சாதாரணமான காரியமல்ல, சூர்தாஸின் குரு மகான் வல்லபாச்சாரியாரை சந்தித்து, அவர் வழியாகத் தான் சூர்தாஸை அழைத்து வர வேண்டும்.

அக்: மான்ஸிங்! டான்சேன் சூர்தாஸை அழைத்து வருவதற்குரிய ஏற்பாடுகளை உடனே செய்யுங்கள்!

மான்: அப்படியே ஷா இன் ஷா !

## காட்சி 25

(இடம் வடமதுரை:- கோவர்த்த நேசன் கோவிலின் வெளிப் புறத்தில் சூர்தாஸ் தன்னை மறந்த தியானத்தில் அமர்ந்துள்ளார். அவரைச் சூழ பக்தர்கள் சூழ்ந்துள்ளார்கள். அப்பொழுது வல்லபாச் சாரியார், தன் சிஷ்யர்களுடன் சிறிது தொலைவில் வந்து கொண்டி ருக்கிறார். தற்செயலாக, அங்கு பல்லக்கில் வந்த டான்சேன், பல்லக்கிலிருந்து கீழே குதித்து வல்லாபாச்சாரியாரின் பாதங்களில் விழுந்து நமஸ்கரிக்கிறார்.)

வல்: மகனே! உனக்கு என் பரிபூரண ஆசீர்வாதங்கள்.

டான்: சுவாமி! என் பெயர் டான்சேன். அக்பர் மகா சக்ர வர்த்தியின் ராஜசபையில் கவிஞனாக இருக்கின்றேன்.

வல்: நீ, ஹரிதாஸ் சுவாமிகளின் மாணவன் தானே?

டான்: ஆம், சுவாமி!

வல்: ஹரிதாஸ் உன்னைப் பற்றி என்னிடம் பெருமிதத்தோடு அடிக்கடி சொல்வார். தற்பொழுது நடைபெற்ற தீபக் ராக அரங் கேற்றத்தைப் பற்றியும் கேள்விப்பட்டேன்.

டான்: ஆம், சுவாமி! என் குருநாதர்தான் என் உயிரைப் பாதுகாத்தார். தற்பொழுது உங்களைத் தேடி பிருந்தாவனம் சென்றிருந்தேன். தாங்கள் இங்கு வந்திருப்பதைத் தெரிந்து, உங்களைத் தரிசிக்க வந்திருக்கிறேன்! சுவாமி! ஒரு மாபெரும் உதவியை உங்களிடம் இந்த ஏழைக் கவிஞன் யாசிக்கிறேன். சுவாமி!

வல்: மகனே ! நான் உனக்கு என்ன செய்ய வேண்டும்?

டான்: சுவாமி! மகாகவி சூர்தாஸின் ஞான சற்குரு தாங்கள் தானே?

வல்: ஆம், மகனே! ஆம்! சூர்தாஸ் என்ற பெயரோடு குருடனாக வாழும் சரீரத்திற்குரியவனைத்தான் உங்களுக்கெல்லாம் தெரியும். சூர்தாஸின் சரீரத்திற்குள் குடிகொண்டுள்ள ஆத்மாவையே எனக்குத் தெரியும். சூர்தாஸின் பிறவி சாதாரணமானதல்ல. அந்த ரகஸ்யார்த்தம் எனக்குப் புரிந்துதான் நான் சூர்தாசுக்கு ஞானோபதேசம் செய்தேன், மகனே!

டான்: சுவாமி! தங்கள் மாணவர் மகாகவி சூர்தாஸை அழைத்துக் கொண்டு வந்து, அக்பர் சக்ரவர்த்தியின் ராஜ தர்பாரில் பாடச் செய்வதாக நான் உறுதி தந்து வந்திருக்கிறேன்.

வல்: அதற்காக...?

டான்: சுவாமி! சில சந்தர்ப்பங்களில் சிஷ்யனின் வழியாக குருவிடம் செல்ல வேண்டும். சில நேரங்களில் குருவின் வழியாகத் தான், சிஷ்யனையே நெருங்க முடியும்.

மகாகவி சூர்தாஸைப் பொறுத்த மட்டிலும், யாராலும் நெருங்க முடியாது. யார் பேச்சையும் அவரும் கேட்க மாட்டார். ஆனால், அதே சமயத்தில் அவருக்கு ஞான சற்குருவாக விளங்கும்.

தங்கள் ஆணையை அவர் தட்டவே மாட்டார். அதனால்தான், குருவின் சிபாரிசோடு மாணவரை அழைத்துச் செல்ல, அடியேன் வந்திருக்கிறேன், சுவாமி!

நீங்களே, பால பருவத்தில் அக்னி குண்டத்திலேயே விளையாடிய மகாசக்தி வாய்ந்தவர்! நானோ, அக்னி ராகமாகிய தீபக் ராகத்தைப் பாடி விஷப் பரிசோதனை செய்து, என் குருவால் உயிர் பிழைத்தவன்!

இருவருக்கும் பொதுவான அக்னிதேவன், தங்கள் நெஞ்சில் நிறைந்து நின்று, எனக்கு உதவ- தங்களுக்கு அருள் செய்ய வேண்டும், சுவாமி!

வல்: (சில நிமிடம் கண்களை மூடிக் கொண்டிருந்து) மகனே! சூர்தாஸை உன்னுடன் அனுப்பி வைக்கிறேன்! நானும் உடன் வருகின்றேன். அவன் இங்கிருந்து புறப்பட வேண்டிய நேரமும் நெருங்கி விட்டது-தற்பொழுது இங்கிருந்து புறப்படும் சூர்தாஸ்- இனி, மீண்டும் திரும்பி வரவே மாட்டான்!

டான்: சுவாமி! தாங்கள் சொல்வது புரியவில்லையே?

வல்: மகனே! சூர்தாஸ் 12 ஸ்கந்தங்களில் ஏறத்தாழ ஐந்தாயிரம் கவிதைகளை 'சூரசாகரம்' என்ற பெயரில் பாடி முடித்து விட்டான். இதைத்தவிர 'சூரசராவளி 'சாகித்யலஹரி' ஆகிய மாபெரும் படைப்புக்களையும் படைத்து விட்டான். அவன் பிறந்த நோக்கம் பெரும் பாலும் நிறைவேறி விட்டது. இனி, கண்ணனின் காலடியில் அவன் சங்கமமாக வேண்டியதுதான்!

டான்: அப்படியானால்...?

வல்: மகனே! கண்ணனின் காலடியில் சூர்தாஸ் சங்கமமாகும் வழி - ஒரு இஸ்லாமிய தர்பாரில்தான் அமைக்கப்பட்டுள்ளது! பரம் பொருளுக்கு- ஜாதி ஏது? மதம் ஏது?

டான்: உண்மைதான் சுவாமி! முக்காலமும் உணர்ந்த தங்கள் தீர்க்க தரிசனத்திற்கு!. காலம் கண்டிப்பாக பதில் சொல்லும்!

(அதற்குள் சூர்தாஸ் பாட ஆரம்பிக்கிறார். வீணை இசை, குழலிசை, ஜால்ரா இசை, நர்த்தன சிலம்பொலிகள் வானத்தில் தவழ்கின்றன. தொலைவில் நின்றபடியே சூர்தாஸின் பாடலை இருவரும் கேட்டு ரசிக்கின்றனர்.)

சூர்தாஸின் பாடல்:-

கிரிதாரி! பிரபு! கிருபாநிதி! கிருஷ்ணா!
பார்வையிலாக் கண்ணுறுவே
பாலகோபாலா! பரம்பொருளே! பார்த்துவிட்டேன்-
உன்னை! பார்த்து விட்டேன், உன்னை!
ஹரே கிருஷ்ணா! ஹரிகிருஷ்ணா! கிருஷ்ணா, கிருஷ்ணா,
கிருஷ்ணா, கிருஷ்ணா, ஹரே, ஹரே!

கருணைக் கடலே! கண்ணா! கமல மணி வண்ணா!
உன் பார்வை மட்டும் பட்டுவிட்டால் - போதுமடா, பிரபு!
நடக்கக் காலில்லா நொண்டியும்
நாலு மலை தாண்டிடுவான் !
கண்ணா! கண்ணா! கண்ணா! எனக்குதிப்பான்!
ஹரே கிருஷ்ணா! ஹரிகிருஷ்ணா! கிருஷ்ணா, கிருஷ்ணா,
கிருஷ்ணா, கிருஷ்ணா

கிருஷ்ணா, கிருஷ்ணா, ஹரே, ஹரே
உன் கிருபை ஒன்றிருந்தால் -போதுமடா, கண்ணா!
நாக்கில்லா ஊமையும் -
திக்கெல்லாம் எதிரொலிக்க
நாயகா ! நந்தலாலா ! நாதநாதா! கண்ணா!
என்றே குரல் கொடுப்பான் - மகாப்பிரபு!

ஹரே கிருஷ்ணா! ஹரி கிருஷ்ணா! கிருஷ்ண, கிருஷ்ணா,
கிருஷ்ண கிருஷ்ணா!

உன் கருணைக்கு ஆளானால் -
பிச்சை எடுப்பவனும்,
பெரும் சாம்ராஜ்ய சக்ரவர்த்தி!
ஹரே கிருஷ்ணா! ஹரி கிருஷ்ணா! கிருஷ்ணா, கிருஷ்ணா,
கிருஷ்ணா, கிருஷ்ணா!

கிருஷ்ணா, கிருஷ்ணா, ஹரே, ஹரே!
உன் பார்வைபட ஏங்குகிறேன்!
ஓடி வா, பிரபுஜி!ஓடி வா!
ஓடி வர முடியாத நிலை என்றால் -
நானே நடந்து வர, நடந்து கால் தேய்ந்தால்-நானே தவழ்ந்து
வர-
என் விழிக்குள் வழிகாட்டு! உன் கருணைக் கனி அமுதை-
அடையத்துடிக்கிறேன்! உன் பாதமலர் அரவிந்தம்-
அணைக்கத் துடிக்கிறேன்!
ஹரே கிருஷ்ணா! ஹரி கிருஷ்ணா! கிருஷ்ண, கிருஷ்ண,
கிருஷ்ணா, கிருஷ்ணா, கிருஷ்ணா, கிருஷ்ணா, கிருஷ்ணா,
கிருஷ்ண, ஹரே, ஹரே!

(பாடித் முடித்ததும் வல்லபாச்சாரியாரும், டான்சேனும்-சூர்தாஸிடம் வருகின்றனர்)

வல்: சூர்தாசுக்கு சர்வசுப மங்களம்! நான்தான் வல்லபாச்சாரி வந்திருக்கிறேன். என்னுடன் அக்பர் சக்ரவர்த்தியின் ஆஸ்தான மகாகவி டான்சேனும் வந்திருக்கிறார்.

சூர்: (வல்லபாச்சாரியாரின் பாதங்களைத் தொட்டு) நமஸ்கரித்துக் கொள்கிறேன், குருதேவா! கவிஞர் டான்சேனுக்கும் என் நமஸ்காரம்!

வல்: சூர்தாஸ்! நீ உடனே எங்களுடன் அக்பர் சக்ரவர்த்தியின் ராஜதர்பாருக்குப் புறப்பட்டு வந்து, அங்கே உன் கவிதைகளைப் பாட வேண்டும்! நானும் உன்னுடன் வருவேன்!

சூர்: சுவாமி! என் நாயகன் கோவர்த்த நேசன் குடி கொண்டுள்ள கிருஷ்ண ஜென்ம பூமியாகிய பிருந்தாவனம், கோவர்த்தனம் ஆகியவை சூழ்ந்த இந்த மதுராபுரியை விட்டு விட்டு - யமுனை நதி தீரத்தில் அமைந்துள்ள கோகுல புனித மண் சூழ்ந்த ஆய்ப்பாடி நவமோகனக் கண்ணனை விட்டு விட்டு - முக்திக்குத் துவாரமாக அமைந்த துவாரகாபுரியின் துவாரகை நாதனாகிய என் பரம புருஷனை விட்டு விட்டு-

வல்: ஆம், சூர்தாஸ்! நீ புறப்பட்டே தீர வேண்டும். இங்குள்ள மதுராபுரி மண்ணிலோ, ஆய்ப்பாடியிலோ தற்பொழுது சத்யபாமா இல்லை. அவள் உருவச் சிலைதான் இருக்கிறது. இஸ்லாமிய தர்பாருக்குள் நீ பாடித் தங்கும் நாட்களில் உன் தாய் சத்யபாமாவை நேருக்கு நேராக தரிசிக்கப் போகிறாய். புறப்படு! இஸ்லாமிய சக்ரவர்த்தியின் தர்பாரிலா பாடுவது என்று வித்தியாசம் காட்டுகிறாயா, சூர்தாஸ்?

சூர்: இல்லை, சுவாமி, இல்லவே இல்லை! நான் மதம், ஜாதிகளை- ஆசார அனுஷ்டானங்களை நம்பாதவன்! அல்லாவைப் பற்றி எனக்கு எதுவுமே தெரியாதே! தெரிந்தால் அல்லா மீதும் பாடத் தயாராக இருக்கிறேன், சுவாமி!

வல்: சூர்தாஸ்! அக்பர் சக்ரவர்த்தியின் ராஜதர்பார், சர்வமதப் பொது நோக்கம் கொண்ட மகாசபை! நீ, உன் நாயகன் கண்ணனையே பாடலாம்! உன் பாடலை, சக்ரவர்த்தியே ரசிப்பார்!

சூர்: ஸ்வாமி! அக்பர் சக்ரவர்த்திக்கும் என் நமஸ்காரம்! உங்கள் உத்தரவின்படியே புறப்படுகிறேன்!

## காட்சி 26

(அக்பரின் ராஜதர்பாருக்குள் ஒரு மாபெரும் பாடகர் மேடை அமைக்கப்பட்டுள்ளது. டான்சேன், சூர்தாஸின் கையைப் பிடித்துக் கொண்டு உள்ளே நுழைகிறார். வல்லபாச்சாரியாரும் உடன் வருகிறார். அவையினர் அனைவரும் எழுந்து நிற்கின்றனர்.)

அக்: (வணக்கத்துடன்) நான் அக்பர் பேசுகிறேன். இந்த மகா சபையின் சார்பில், மகாகவி சூர்தாஸை நமஸ்கரித்து வரவேற்கின்றேன்.

டான்: ஷா இன் ஷா! கவிச்சக்ரவர்த்தி சூர்தாஸின் ஞான சற்குரு வல்லபாச்சாரியார் சுவாமிகளையும் அழைத்து வந்திருக்கின்றேன்!

அக்: ஆச்சார்ய சுவாமிகளுக்கும், எங்கள் அனைவரின் நமஸ்காரங்கள்!

(அனைவரும் வணங்க - வல்லபாச்சாரியார் ஓர் இருக்கையில் அமர்கின்றார்.) சூர்தாஸை, மேடைக்கு அழைத்துச் சென்று டான்சேன் உட்காரச் செய்து விட்டு, பிறகு தன் இருக்கையில் அமர்கின்றார்.)

சூர்: இந்தக் குருடனை- சகல ராஜமரியாதைகளுடனும் வரவேற்ற சக்ரவர்த்திக்கும், தர்பாரின் ராஜசபை உறுப்பினர்களுக்கும் என் நமஸ்காரங்களையும், நன்றிகளையும் பரம் பொருளின் திருநாமத்தால் தெரிவித்துக் கொள்ளுகின்றேன். அனைத்தும் அவன் செயல்! அவன் கிருபை!

அக்: மகாகவி சூர்தாஸ்! இந்த தர்பாரில் சகல மதத்தவர்களும், அங்கம் வகிக்கிறார்கள்! கிருஷ்ண கான மழை பொழியும் தங்களை, டான்சேன் என்ற இஸ்லாமியக் கவிஞர்- இந்த தர்பாரில் உங்களை அறிமுகப்படுத்தியுள்ளார்.

அனைத்தும் அவன் செயல் என்றீர்களே, யார் அந்த அவன்? கிருஷ்ணனா? அல்லாவா? ஏசுவா? சீக்கியர்கள் வழிபடும் பரம்பொருளா? புத்தரா? மகாவீரரா?

சூர்: (கடகடவென்று சிரித்து) நம் எல்லோருக்கும் மேலான அவன் தான்- அந்த அவன்! சக்ரவர்த்தி! கடவுள் எந்த மதம்? எந்த ஜாதி? எந்த நாடு? எந்த மொழி பேசுகின்றவர்? எப்படிப்பட்ட இனம்? எந்த வடிவம்? செல்வந்தரா? ஏழையா? அவர் இருப்பிடம் கோவிலா, பள்ளிவாசலா, தேவாலயமா, சீக்கியர் கோவிலா, புத்த விகாரமா, சமணமடமா? அனைத்திற்கும் பொதுவான ஆதிமூலப் பரம்பொருள் தான், அந்த அவன்!

அக்: சபாஷ், மகாகவி! சபாஷ்! யார் எந்த வடிவத்தில் இறைவனைப் பாடினாலும்-அப்பாடலில் தவழ்பவனாக நாங்கள் ஒவ்வொருவருமே தங்கள், தங்கள் வழிபாட்டிற்குரிய பரம்பொருளை நாங்கள் நினைத்துக் கொள்பவர்கள்! கடவுளைப் பற்றி எங்களுக்குக் கவலையே இல்லை. கடவுள்தான் மனிதனைப் பற்றி கவலைப் பட வேண்டியவர்! அவரைப் பற்றிய அனாவசிய ஆராய்ச்சிகள், தர்க்கங்கள் - வெறும் மூட நம்பிக்கை!

பாதிரியார்: மகாகவி! எல்லாவற்றையும் விட முக்கியமான ஒன்று - மதம், மனிதனால் ஏற்படுத்தப்பட்ட ஒன்று! இதை வைத்துக் கொண்டு ஒருவர் மற்றவரை நாங்கள் துவேஷிக்க மாட்டோம்! 'உன்னைப் போல் மற்றவரையும் நேசி' என்ற வேதவாக்கு எங்கள் எல்லோருக்குமே பொது. நாங்கள் அனைவருமே கடவுளின் பிள்ளைகள்! நாங்களும் ஒருவருக்கொருவர் சகோதரர்!

சூர்: நாங்கள் என்று என்னை ஏன் ஒதுக்குகிறீர்கள்? நாம் என்று சொல்லுங்கள்! இந்தக் குருடனும், உங்களுள் ஒருவனான சகோதரன் தானே சபையோர்களே?

அக்: மகாகவி சூர்தாஸ்! பரம் பொருளைப் பற்றிய பழுத்த ஞான முதிர்ச்சி கொண்டவர், நீங்கள் இனி பாடுங்கள்! கார்மேகமாகத் தவழும் தங்கள் கான மழைக்குக் கலாபம் விரித்தாடும் மயில்களாக, நாங்கள் காத்திருக்கின்றோம்.

சூர்: நான் பகவான் கிருஷ்ணனைப் பற்றித் தான் பாடப் போகிறேன். ஆட்சேபணை எதுவும் தங்களில் எவருக்காவது உண்டா சபையோர்களே? வேறு எதைப் பற்றியும் பாடிப் பழக்கமில்லை, எனக்கு! அதனால்தான், கேட்டேன்.

டான்: கவிச்சக்ரவர்த்திக்கு இந்த சந்தேகமே தேவை இல்லாதது! கிருஷ்ண பக்தராக மாறிய ஷேக் முகமது, சமஸ் கிருதத்தில் எழுதிய யோக சங்கிரகத்தையும்- இவரைப் போன்ற மற்றொரு கிருஷ்ண பக்தர் லதீப்ஷாவின் இசையமுத கானத்தையும் நாங்கள் அனுபவித்தவர்கள்! மகாகவி! பேத வாதங்களுக்கு இடம் இல்லை. இங்கு, தாராளமாக கிருஷ்ணகானம் பாடுங்கள்!

(சூர்தாஸ் அமைதியாகிறார். சூர்தாஸ் ஏதோ கற்பனையில் தவழ்ந்து கொண்டிருக்கிறார்.) பிறகு-

(சூர்தாஸ் மௌனமாகப் பாடத் துவங்க ஆயத்தமாகிறார். சபைக்குள் வீணை இசையும், ஜால்ரா தட்டும் ஓசையும், குழலோசையும், நர்த்தன சதங்கை ஒலியும் மானஸீகமாகக் காற்றில் தவழ்கின்றன. அனைவரும் அதிசயமாக சூர்தாஸைப் பார்க் கின்றனர்)

சூர்தாஸ் பாடுகிறார் (காட்சிகளும் விரிகின்றன)

ஹரே கிருஷ்ணா! முராரி! முரளி! கிரிதாரி! முகுந்தா! மாயவா!

அன்பு! அன்பு! அன்பென்றால், என்னடா கண்ணா?
அன்புக்கு அர்த்தமென்ன கிருஷ்ணா?

ஆசை! மோக தாபம்- இவையா அன்பு?
கவர்ச்சியும் காமம்- இவையா அன்பு?
விட்டில் பூச்சிக்கு விளக்கொளியில் மோகம்!
வெகுமதிதான் சாவு! சாவைத் தருவதா அன்பு?
வண்டுக்குத் தாமரையின் காதல்!
தனக்குள் மயக்கம்! தவிப்பு! தடுமாற்றம்!
அடிமை கொண்ட பேராசையா- அன்பு?
கொலை வேடன் குழலூத ஊத
மானுக்கு போதை! மயக்க இன்பம்!
மானின் மயக்கமே சாவு! மரணமே தீர்ப்பு!
மரணத்திற்கழைத்த மயக்கமா அன்பு?
மதுராபுரி மன்னா! மாயவா! கண்ணா!
கிரிதாரியைப் பாடினால் கிளுகிளுப்பு! சுகம்!
பாலகோபாலா! உன் பாட்டைக் கேட்டாலே, பரமசுகம்!
கண்ணா! பிரவு! காயாம்பூ வண்ணா!
அன்பு கொண்டேன்! ஆசை கொண்டேன்!
ஆடிப்பாடும் கோபிநான்!
கண்ணா! உன் காலடிகள் -
அடியேனுக்கு அபயகரம்! ஆனந்தசுகம் - பிரபு!
நீலமேகா! பிரபு- என நினைப்போர் நெஞ்செலாம்
ஊற்றெடுக்கும் சுகமோ அமுதம்! அமுதம்! ஆனந்தம்!
நாயகா! கிரிதாரி! நந்தகோபாலா- பரமாத்ம பக்தி
வெள்ளமதில்
நீந்தித் திளைக்கிறேன்! களிக்கிறேன்! நீயே நித்ய சுகம்!
கண்ணனின் மழலைசுகம்! காலடி நடையழகு சுகம்! சுகம்!
காற்றுடன் தவழ்ந்திடும் குழலமுத கானம் சுகம்! சுகம்!
கோமாதா மேய்ப்பான்! கோபியரை அணைப்பான்!
கோகுலக் கண்ணனை அனுபவிக்க அனுபவிக்க ஆனந்த
சுகம்!

மன்னவா! மாயவா! மகாப்பிரபு மாதவா!

மனம் குளிர்ந்து மெய் சிலிர்த்து, எனை மறந்து
பாடுகிறேன்! ஆடுகிறேன்! பறவை எனப் பறக்குதே சிந்தை!
பாலகிருஷ்ணனை, பார்த்தனுக்கு சாரதியை- பாடப்பாட
வாயினிக்கும் - இன்ப சுகம்! இணையிலா இனிய சுகம்!
கண் வடிக்கும் கண்ணீரின் முத்தெல்லாம்
கனக மழை! கார்முகிலாய், இன்ப மழை!
மாயவா! கிருஷ்ணா! மகாப்பிரபு!
நீயே சுகம்! நித்ய சுகம்! நிர்மல பரமசுகம்! உன் சுகமே,
உண்மை சுகம்!

(பாடி முடிக்கவும், அனைவரும் கரகோஷம் செய்கின்றார்கள்)

(சூர்தாஸ் அமைதியாகிறார். இசைக் கருவிகளின் ஓசைகளும் மறைகின்றன. சூர்தாஸ், ஏதோ கற்பனையில் தவழ்ந்து கொண்டிருக்கிறார்)

அக்: கவிச்சக்ரவர்த்தி! ஏன் பாடுவதை நிறுத்தி விட்டீர்கள்? மேலும் பாடுங்கள், மகாகவி?

டான்: ஷா இன் ஷா ! மகாகவி சூர்தாஸ், ஏதோ தனக்குள்ளாக மனக்கண்ணில் கற்பனைக் காட்சிகளைப் பார்த்துக் கொண்டிருக்கிறார்! உங்கள் கற்பனைகளைக் கவிதைகளாகத் தொடருங்கள். கவிச் சக்ரவர்த்தி! நாங்களும் அனுபவிக்கிறோம்.

(சூர்தாஸ் மீண்டும் இசைக்கருவிகளின் முழக்கம் துவங்கப் பாடுகிறார். கற்பனைக் காட்சிளும் விரிகின்றன.)

(ராஜசபைப்பாடல், சூர்தாஸ் கற்பனைக் கவிதா மண்டலக் கவிதை- பின்னணி கோகுலக் காட்சி)

(மழலை கண்ணன் கண்களைக் கசக்கியபடி அழுது கொண்டு நிற்க பலராமனும், இடைச் சிறுவர்களும் கலகலவென்று சிரிக்கிறார்கள். யசோதை ஓடி வருகிறாள்)

(கவிதை அமைப்பு நாடகக்காட்சி)

யசோதை:

கண்ணா! ஏன் அழறே! கனியமுதே! ஏன் அழறே!
கரும்பே! தேனே! கண்மணியே! கருமணியே! என்
உயிரே! ஏன் அழுதே!
(தூக்கி வைத்துக் கொள்கிறாள்)

கண்ணன்:

அம்மா! - நீ திட்டுறே! அதற்காக நான் அழலே!
அண்ணனும் திட்டி விட்டான்!
அம்மா! நீ அடிக்கிறே! அது செல்லம்! அதற்காக நான்
அழலே!
அண்ணனும் அடிக்கிறான்!
அதைக் கண்டு, எல்லோரும் சிரிக்கிறார்!
அண்ணனுக்குத் தம்பி அடிமை!
அண்ணனின் அடி உதைக்கு, நான் அழலே!
சொல்லடிகள் வலிக்குது! சொல்லம்மா, நீ-நீதி!

யசோதை:

செல்வக் கண்ணனை சிணுங்க வைத்த பலராமா!
என்னடா திட்டினாய்? - என் உயிரான கண்ணனை-
கருங்குயிலின் கானமெல்லாம் கண்ணனடா!
பசு கறக்கும் பால்நெஞ்சம், கண்ணனடா!
பயிர் செழிக்கும் பருவமழை, பாலகோபாலனடா!
கோபிகள் கொஞ்சும் முத்தம் -
கோடி கோடி கிருஷ்ணனடா!
இடையர்கள் பெற்ற சுகம் -
எல்லாமே கண்ணனடா!
கோகுலத்தின் வாசமெல்லாம்-
கோபாலன் நாமமடா!

ஏண்டா பலராமா ! என் அமுதக் கண்ணனை-
    என்ன சொல்லி திட்டினாய் ?

பலராமன்:

அம்மா நீ சிவப்பு ! அப்பனுமே சிவப்பு !
நானும் நல்ல வெள்ளை ! தம்பி மட்டும் ஏன் கருப்பு?
கண்ணன் ஒரு கரிக்கட்டை ! கருப்பன் இவன்!
யார் பிள்ளை? யார் தம்பி?
(இடைச்சிறுவர்கள் கலகலவென்று சிரித்தல்)
யசோதா: (கண்ணனைத் தூக்கிக் கொண்டு)
கருப்பென்று கண்ணனை, என் மகனைப்
    பழிக்காதே - பலராமா !

கோகுலமே தவம் செய்து பெற்ற செல்வம்
கோபால கிருஷ்ணனடா!
நந்தகோபன் பெற்ற பெருவாழ்வே
    நந்த கோபாலனடா !

தவமான தவம் செய்து தாமோதரக் கண்ணனைத்
    தாலாட்டினேன் ! பாலூட்டினேன் ! தாயும் நானடா !

(கண்ணனைத் தூக்கி வைத்தபடியே, ஆடிப் பாடிக் கொண்டே)

கண்ணா ! நீ கருப்பு ! கனி வாயிதழோ- சிவப்பு !
    உள்ளங்கை சிவப்பு ! உன் காலடியும் சிவப்பு !
கோபாலா ! கோவிந்தா ! நீ கருப்பு !
    நீ ஊதும் குழலமுத கானமுமா கருப்பு ?
இசை வெள்ளப் பிரவாகம் -
    ஏழுஸ்வரமுமா கருப்பு ?
செவ்வானம் - மழை தருமா ?
    வெண்மேகம் - பால் தருமா

கண்ணா! நீ கருவானம்! கார்முகில்!

கண்ணா! நீ சிவந்து விட்டால் -

காயாம் பூ வண்ணா! நீ வெளுத்து விட்டால் -

மழை மேகம் பெய்யாது!

மனித குலம் அழிந்துவிடும்!

கால் நடைகள் செத்துவிடும்!

காடெல்லாம் தீய்ந்து விடும்!

பலராமன்:

பிறகு ?...

யசோதை:

பசுவுக்குப் புல்லேது ?

பசுங்கன்றுக்குப் பாலேது ?

செடி கொடிக்குப் பூ ஏது ?

கோகுலமே அழிந்துவிடும் ?

கோபாலா! சிவக்காதே!

பட்டமரம் தளிர்க்க வைக்கும் -

பசுக்களைப் பால் மழை கொட்ட வைக்கும் -

கோபிகள் மெய் சிலிர்க்க வைக்கும் -

வேய்ங்குழல் அமுதநாதகானமாயக் கண்ணா!

வெள்ளையோ - சிவப்போ வேண்டுமென்றால்

வேண்டிய பொருள் கேள்! தருகிறேன், மகனே!

கண்ணன்:

விண் தவழும் வெண்ணிலா

வேண்டும் அம்மா! பிடித்துத்தா!

யசோதை:

விண்ணிலே பறக்கச் சிறகில்லை, கண்ணா!

வெள்ளைப் பொருள்தானே வேண்டும், உனக்கு?

விண் தவழும் முழுமதி போல் ஒரு பெண்ணை

கல்யாணம் செய்து வைப்பேன் !
கலகலவென்று சிரி ! கண்ணா ! சிரி ! சிரி!

(கண்ணன் சிரித்துக்கொண்டே, யசோதையின் கன்னத்தில் முத்த மழை பொழிந்தபடியே.)

கண்ணன்:

முழு நிலவைக் கொண்டு வரமுடியாதா ?
முடிந்ததைச் சொல்வேன் ! முடித்து வை !
அண்ணனை அழ வைக்க வேண்டும் !
அதைக் கண்டு, நான் - நான் சிரிக்க வேண்டும் !
இப்போதே - பெண்ணை -
வெண்மதிபோல் வெள்ளை - வெள்ளையானவளை
விவாகம், செய்துவை !
வெவ்வெவ்வே ! வெவ்வெவ்வே !

(பலராமனைக் கண்ணன் பழிக்க - பலராமன் உட்பட அனைவரும் சிரிக்கின்றனர்.)

யசோதை:

நினைத்ததுமே திருமணமா ?
எப்படிக் கண்ணா? முடியுமா இது ?

கண்ணன்:

முடியாததுண்டா உன்னால் ?
முடியுமம்மா முடியும் !
வெள்ளையான பெண்ணை நீ -
விவாகம் செய்துவை!
வேதமந்திரம் - என் வாக்கு!
அம்மா ! உன் பாசக் கண்ணீர், தாரை ஏற்கும் தண்ணீர் !
அண்ணன் பலராமன் - அக்னியான சாட்சி !

பலராமன்:

பொடியனுக்குக் கல்யாணமா ? போடா, போ !
இப்போது இல்லை என்றால் -
என்னடா செய்வாய், கருப்பா ?
கண்ணன்: (யசோதையிடம்)

இப்போதே கல்யாணம் !
இல்லை என்றால் -
அம்மாவும் நீ இல்லை !
எப்போது நடந்தாலும் -
என் கல்யாணத்தில் - நீ இல்லை!
(யசோதை முகத்தில் அடித்தபடி பேசி)
பால் குடிக்க வரமாட்டேன் !
கொண்டைக்குக் கட்டி வைத்த பூமாலை
விட்டெறி ! வேண்டாம், போ !
தூக்கிக் கொஞ்சாதே ! விட்டுவிடு !
மடியில் உட்கார வரமாட்டேன் !
(இடுப்பிலிருந்து உதறிக் கொண்டு கீழே
விழுந்தழுகின்றான்.)
யசோதை: (குனிந்து கண்ணனின் காதோடு)
அண்ணன் மேல் கோபம்
அம்மாவிடமா முடிவு ? வேண்டாம், கண்ணா வேண்டாம் !
பௌர்ணமிக்கும் மேலான
பாக்யவதி அழகி தன்னை-
கல்யாணம் செய்து வைப்பேன் ! கண்ணா ! கண்மணியே!
கண்ணன்: (கேள்வி கேட்கும் பாவத்துடன்)
எப்போதம்மா எப்போது? எப்போதம்மா, எப்போது ?
யசோதை: (குறிப்பாகக் கைவிரலைக் கீழே காட்டி)
இப்போதே, கண்ணே ! இப்போது !
(கலகலவென கண்ணன் சிரிக்கிறான்)

(சூர்தாஸின் கற்பனைக் கவிதா மண்டலம் விரிகிறது. கண்ணனின் கல்யாண வைபோகம் நடக்கிறது. கல்யாண ஊர்வலமும் நடக்கிறது.)

சூர்தாஸ்: (பாடுகிறார்)

ஆ— ஆ— ஆ—!

கிருஷ்ணா! கிரி தாரி! உன் கல்யாண வைபோகமே!
கண்டுவிட்டேன்! கல்யாண கூட்டமோ கூட்டம்!
கூட்டத்துள் ஒருவன் நான்! கோலாகல ஊர்வல நாயகப்
பிரபு!

திவ்ய தரிசன சேவை!
கண் பெற்ற வாழ்வை -
மண்ணுலகில் பெற்றிட்டேன்!
பரமானந்தம்! பரமானந்தம்!
பார்த்தவர்க்கெல்லாம் பரமானந்தம்!
பாலமுரளி! கோபி கிருஷ்ணா! ருக்மணி கிருஷ்ணா! ராதே
கிருஷ்ணா!
பாமா கிருஷ்ணா! பாஞ்சாலி கிருஷ்ணா! பாண்டவ
கிருஷ்ணா!
கோகுல வாசா! குசேல கிருஷ்ணா! குருடனுக்கருளு!
நித்ய கல்யாணா! நீயே புருஷன்! நானோர் கோபி!
அதுவும் குருட்டு கோபி!
கோல மயிற்பீலி கொண்டை அழகா! குருடனுக்கருளு!
பாலகோபாலா! பாதமலர் சரணம்! பாவிக்கருளு!
கண்ணா! கமலமலர்ப்பாதம் கண்டிட அருளு!
ஹரே கிருஷ்ண! ஹரே கிருஷ்ண! கிருஷ்ண கிருஷ்ண,
கிருஷ்ணா, கிருஷ்ணா, ஹரே, ஹரே, கிருஷ்ணா, கிருஷ்ணா,
கிருஷ்ணபிரபு!

(சூர்தாஸ் பாடி முடிக்கிறார். அனைவரும் கைதட்டுகிறார்கள்)

அக்: ஆஹா! அற்புதமான தெய்வீகக் கற்பனை ! மனோரதத் துவக் கற்பனை ! அற்புதம் ! அற்புதம் ! டான்சேன் ! உங்களை விடவும் மேலான ஒப்பற்ற கவிஞராக சூர்தாஸைப் பற்றி நீங்கள் கூறியவற்றை இந்த சபை ஒத்துக் கொள்கிறது!

(சபையினர் அனைவரும் கரகோஷம் செய்கிறார்கள்)

அக்: கவிச்சக்ரவர்த்தி சூர்தாஸ் பாடும்பொழுது தவழும் இன்னிசை வாத்தியங்களையும், நர்த்தன சலங்கை ஒலியையும் பற்றி என்ன நினைக்கிறீர்கள், மான்சிங் !

மான்: ஷா இன் ஷா ! வீணை இசைக்கும் சக்தி சரஸ்வதி! ஜால்ரா தட்டும் சக்தி வினாயக சக்தி! குழலோசை, கண்ணனின் சக்தி! நர்த்தன சதங்கை ஒலி தேவலோகப் பெண்களின் நாட்டிய சக்தி! இப்படித்தான் எங்கெங்கும் பேசிக் கொள்கிறார்கள், ஷா இன் ஷா ! நீங்கள் எப்படி இதை விமர்சிக்கிறீர்கள்?

அக்: எப்படி இருந்தாலும் தன் தேவகான மாயாசக்தியால், தெய்வீகத்தைத் தனக்குத் துணையாக அமைத்துக் கொள்ளும் பேராற்றல் கொண்டவராக, கவிச்சக்கரவர்த்தி சூர்தாஸ் நிரூபித்து விட்டார். இதை, நாம் அனைவருமே ஒத்துக் கொள்ள வேண்டிய பொது தீர்ப்பு ! அனைவருக்குமே பொதுவான தெய்வ கக அனுபவம்!

சூரஜ்கான்: ஷா இன் ஷா! வஜீர் ஏ ஆஜம் மான்சிங் சொன்னதைப் போல சரஸ்வதியின் வீணை இசையும், வினாயகரின் ஜால்ரா ஓசையும், கிருஷ்ணனின் குழலோசையும், தேவகன்னியர்களின் நாட்டிய சதங்கை ஒலியும் - மகாகவி சூர்தாஸின் கிருஷ்ண கானத்தோடு சேர்ந்து சர்வமதப் பொது நோக்கம் கொண்ட தங்கள் தர்பாரில் முழங்கிற்றென்றால் - இதைவிட 'ஒன்றே கடவுள்' என்பதற்கு வேறு எந்த சாட்சி வேண்டும், ஷா இன் ஷா?

அக்: உண்மைதான் கவிஞரே ! கவிச்சக்ரவர்த்தி சூர்தாஸின் தேவகானப் பாடல்களுக்கு எதைப் பரிசளிப்பது என்றே புரியவில்லை ! பாடிய தேவகானத்திற்காக என் சாம்ராஜ் யத்தையே கவிச்சக்ரவர்த்தியின் காலடிகளில் காணிக்கை ஆக்கி னாலும் ஈடாகாது, டான்சேன் !

வல்: சக்ரவர்த்தி அக்பர்ஷா ! தங்களனைவரின் ஆத்மார்த்த பாசம் ஒன்றே போதும்! சூர்தாஸ், வேறு எந்த பரிசையும் ஏற்றுக் கொள்ள மாட்டான் ! பரிசுக்காகப் பாடக்கூடியவனல்ல- சூர்தாஸ்!

(அப்பொழுது ஒரு சேவகன் ஓர் ஓலையைக் கொண்டு வந்து அக்பரிடம் தருகிறான். அக்பர் பிரித்து ஓலையைத் தனக்குள் படித்து விட்டு மான்ஸிங்கிடம் தருகிறார்.)

அக்: வஜீர் ஏ ஆஜம் ! ஓலையில் உள்ள செய்தியை எல்லோரும் கேட்குமாறு படியுங்கள்.

மான்: (படிக்கிறார்) ஷா இன் ஷா அவர்களின் அந்தப்புரப் பெண்கள் அனைவரும் விண்ணப்பித்துக் கொண்டது.

'தங்கள் தர்பாரில் கவிச்சக்ரவர்த்தி சூர்தாஸ் பாடிய தேவகானம், அந்தப்புரம் வரையிலும் கேட்டது. நாங்களும் கான மழையில் மெய்மறந்தோம். இக்கவிஞரை அந்தப்புரத்திற்கே கொண்டு வந்து பாடச் செய்தால், நாங்கள் பேரானந்தம் கொள்வோம்.

" கவிச்சக்ரவர்த்தி கண்பார்வை அற்றவராக இருப்பதால்- அந்தப்புரத்திற்குள் ஆண்கள் நுழையக்கூடாது என்ற சம்பிரதா யத்தை ஷா இன் ஷா அவர்கள் பொருட்படுத்தாமல் எங்கள் ஆசையை நிறைவேற்றுவார் என்று நம்புகின்றோம்!"

அக்: சபையோர்களே! பெண்களும் கடவுளால் படைக்கப் பட்டவர்கள் தாமே? அவர்கள் அனுப்பியுள்ள ஓலையில் நீதி இருப்பதாக நினைக்கிறேன்!

மான்: உண்மைதான், ஷா இன் ஷா! நீங்கள் அனுமதித்தால் நாங்களும் எங்கள் ராஜபுத்திர, சீக்கியப் பெண்களையும் அந்தப்புரத் திற்கு அனுப்பி வைக்கத் தயாராக உள்ளோம்.

அக்: ஆச்சார்ய சுவாமிகளுக்கு இந்த விண்ணப்பத்தில் ஆட்சேபணை ஏதும் உண்டா?

வல்: இல்லை! அந்தப்புரத்திலும் சூர்தாஸ் பாடட்டும்!

சூர்: சற்குருவின் ஆணையை ஏற்றுக் கொள்கிறேன்!

அக்: வஜீர் ஏ ஆஜம்! அந்தப்புரத்தின் நடுவில் ஒரு கவியரங்க மேடை தயாராகட்டும்! அந்தப்புரத்தை அடுத்து ஒரு பெரிய திரையைத் தொங்க விடுங்கள்! திரைக்கு வெளியே இருந்து நான், மான்சிங், ஆச்சாரிய சுவாமிகள், டான்சேன்-ஆகிய நால்வரும் மீண்டும் கவிச்சக்ரவர்த்தியின் தேவ கானத்தை ரசிப்போம்!

டான்: ஷா இன் ஷா! ராஜ பரம்பரைக்கென்று சில சம்பிரதா யங்களை எல்லாம் அமைத்துக் கொண்டிருக்கிறோம். அந்த முறையில், கவியரங்க மேடைக்கு மகாகவியை யார் அழைத்துச் சென்று அமர்த்துவது?

அக்: டான்சேன்! நானே அழைத்துக் கொண்டுபோய் கவிபாடும் மேடையில் அமரச் செய்து விட்டுத் திரும்பி விடுகிறேன். சரிதானே?

மான்: அப்படியே செய்யுங்கள். அந்தப்புரத்தில் நாம் கவிச் சக்ரவர்த்தி சூர்தாஸைப் பாடவைப்பது - நாமெல்லாம்பெண் குலத்திற்கே செய்யும் மரியாதை! தரும் மதிப்பு! உரிமை! எல்லாமே

இத்துடன் இன்றைய தர்பார் கலைகின்றது.

## காட்சி 27

(இடம்:-அக்பர் அரண்மனை, அந்தப்புரம்- வெளியில் பெரிய கருப்புத்திரை தொங்குகிறது. திரை அருகில் ஒரு மணி கட்டப் பட்டுள்ளது. அக்பர், டான்சேன், மான்ஸிங், சூர்தாஸ், வல்லபாச் சாரியார் ஆகியோர் வருகின்றார்கள். திரையின் வெளிப்புறத்தில் போடப்பட்டுள்ள இருக்கையில் அனைவரும் அமர்கின்றார்கள். திரையை விலக்கிக் கொண்டு சூர்தாஸின் கையைப் பிடித்துக் கொண்டு, அக்பர் அந்தப்புரத்தில் நுழைகிறார். அந்தப்புரத்தில் ஒரு அற்புதமான சிறிய அரங்கமேடை. ஒரே நிசப்தம். சூர்தாஸை, அக்பர் மேடைமீது உட்காரச் செய்கிறார்.)

அக்: மகாகவி சூர்தாஸ்! தாங்கள் தற்பொழுது அரண்மனை அந்தப்புரத்தின் நடுவில் அமைக்கப்பட்டுள்ள மேடையில் உட்கார்ந்திருக்கின்றீர்கள். தற்பொழுது இங்கு எந்த பெண்ணும் இல்லை.

எங்கள் ராஜவம்சம்! சட்டப்படி இங்குள்ள பெண்கள், தங்களை ஆடைக்குள் ஒளித்துக் கொண்டு வாழ்பவர்கள். இது இங்குள்ள சம்பிரதாயம் மட்டுமல்ல, பெண்கள் தங்கள் அங்கங்களை ஆண்களின் கண்களில் படாமல் ஒழுக்க நெறியில் வாழ்ந்தால் - ஆண்கள் ஒழுக்கக்கேடுகளுக்கு ஆளாகக் கூடிய விபரீதக் கற்பனை களுக்கு இடம் ஏற்படாது அல்லவா?

சூர்: உண்மைதான், சக்ரவர்த்தி! ஆண்களின் மனோதத்துவ நிலையே விபரீதமாக அல்லவா அமைந்திருக்கிறது? மனிதன் மற்ற பெண்களைப் பார்க்கும் பொழுது- தன் தாயின், தன் சகோதரியின் உடலில் உள்ள அங்கங்கள் தான் இவர்களுக்கும் இருக்கின்றன என்ற கற்பனையை நழுவவிட்டு விடுகிறான். அத்துடன் வக்ரமான கற்பனையோடு காமப் பார்வையைத்தானே ஒவ்வொரு பெண்ணிடமும் பயன்படுத்துகின்றான்?

கண்ணால் காணாத கடவுளிடம் கற்பனையால் தான் மனிதன் பக்தி செலுத்துகிறான். அதே கற்பனைதான் ஒரு பெண்ணைக் கண்ணால் பார்க்கும்பொழுது, காமமாக மலர்ந்து கனிகிறது.

கண்ணுக்குப் புலப்படாத கற்பனை, மனிதனைக் கடவுளிடம் இழுக்கிறது! கண்ணில் புலப்பட்டுப் பிறக்கும் கற்பனை, மனிதனை அழிவுப் பாதைக்குத் தான் வழி அனுப்புகிறது!

அக்: உண்மைதான், கவிச்சக்ரவர்த்தி! மனித களிலேயே ஆசை அடங்கி, அனுபவங்கள் முடிந்து, இயலாத நிலைக்கு ஆனா கிழம் கூட, பல ஜனஜென்மங்கள்-பெண்களின் அங்கங்களைப் பார்த்துப் பார்த்து ரசித்துத் தங்கள் காமத்தைப் போக்கிக் கொள்கின்றன, மகாகவி!

சூர்: தாங்கள் சொல்வது, நூற்றுக்கு நூறு ஆண் பிறவிகளின் மனோதத்துவ நிலை சக்ரவர்த்தி! அப்படிப் பார்த்தால் - இந்த அந்தப்புரம் மிகப் புனிதமான ஒழுக்கக் கோவில்!

அக்: ஆம், கவிச்சக்ரவர்த்தி! இந்த அந்தப்புரம், பெண்களின் சிறைச்சாலை அல்ல! பெண்களைப் பெண்களாக உரிமையுடன் ஒழுக்கமாக வாழவைத்திடும்-ஆண்களை ஒழுக்கம் தவறாமல் பாதுகாத்திடும்- ஒரு மறை வேத ஒழுக்கப் பள்ளிக்கூடம்! மறை வேதமாக மனிதகுல நிறை காத்திடும் புனித கோவில்! பள்ளிவாசல்! தேவாலயம்!

சூர்: ஆம் சக்ரவர்த்தியின் விளக்கமெல்லாம் சத்தியமொழிகள்!

அக்: ஆனால்- கண்பார்வையற்ற நீங்கள் இந்த வாதத்திற்கே, என் அளவில்-, தேவையில்லாதவராகி விட்டீர்கள்!

நான் இங்கிருந்து சென்றதும் முதல் மணி அடிப்பேன்! உடனே அந்தப்புரப் பெண்கள் அனைவருமே உங்களைச் சூழ வந்து உட்காருவார்கள்.

எண்ணற்ற இராஜபுத்திரப் பெண்கள் கூட வந்திருக்கிறார்கள். உங்கள் தேவகானத்தைக் கேட்க! பிறகுநான் வெளியிலிருந்தபடியே இரண்டாவது மணியை அடிப்பேன்! அப்பொழுது- நீங்கள் பாடத் தொடங்கி விடலாம்.

நான் மூன்றாவது மணி அடித்ததும் - உங்கள் தேவகானத்தை முடித்துக் கொள்ளுங்கள்!

நான் நான்காவது மணி அடித்ததும், அனைவரும் உள்ளே சென்று விடுவார்கள்! பிறகுநான் வந்து, உங்களை அழைத்துச் செல்வேன்!

சூர்: சக்ரவர்த்தி! இன்று நான் பாடப்போகும் பாடல் ஒன்றே ஒன்று தான்! அதுவும் ஒரு தத்துவக் கவிதை! நாம் வகுத்து வைத்துள்ள தர்ம, அதர்மங்களுக்கு உள்ள ஒரு ஞான விளக்க விமர்சனக் கவிதை! பாடலின் முடிந்த முடிவான தீர்ப்பு-அனைத்தும் அவன் செயல்! நல்லவர், தீயவர் அனைவருக்குமே இறைவன் சொந்தம்! இறைவனைப் புரிந்து கொள்ளாமல் தவிக்கும் மனிதனின் பரிதவிப்பும், பதைபதைப்பும்,மயக்கமும், தடுமாற்றமும் பாடலின் பின்னணி!

பாடலில் வரும் சில சந்தேகங்களை அந்தப்புரப் பெண்கள் கேட்டால்? கேட்டால் என்ன, கண்டிப்பாகக் கேட்பார்கள்! நான் அவற்றிற்கு விளக்கத்தை சாதாரண வார்த்தைகளால் பதில் சொல்லலாமா, சக்ரவர்த்தி?

அக்: தாராளமாக விளக்கம் கொடுங்கள், மகாகவி! திரைக்குப் பின்னிருந்து நாங்களுமே உங்கள் விளக்கங்களைத் தெரிந்து கொள்வோமே? பெண்கள் என்ற பேதமில்லாமல்- கூச்சமின்றிப் பாடுங்கள், பேசுங்கள் - மகாகவி!

சூர்: எனக்கா? ஆண் பெண் பேதமா? கூச்சமா? மான அவமானமா? கௌரவப் பாராட்டா? பரிசா? பகையா? நட்பா? பாசமா? விருப்பு, வெறுப்பா? கோபதாபமா? காமமோக விகாரமா?- எல்லாவற்றையுமே இந்த சூர்தாஸ் கடந்து விட்டான், சக்ரவர்த்தி!

இந்த சூர்தாஸ், சரீரத்தால்தான் ஆண்! பக்தி ஞான பக்குவத்தில் சூர்தாஸ் ஒரு பெண் - அதுவும் நாயகி! என் நம்பிக்கையின் படி, நான் ஒரு கோபி! என் நாயகன், பரமபுருஷன், இறைவனிடம் சங்கமம் ஆகக் காத்துக் கிடக்கும் ஒரு ஜீவன்!

என் முகத்தில்தான் கண்ணில்லை! ஆனால் என் மனத்தி லுள்ள கண்களால் என் நாயகனை அனுபவித்துக் கொண்டி ருப்பவன்- இந்த சூர்தாஸ்!

அக்: நான் புறப்படுகிறேன், கவிச்சக்ரவர்த்தி!

(அக்பர் வெளியே வந்து தன் முதல் இருக்கையில் அமர்கிறார். பிறகு முதலாவது மணியை அடிக்கிறார். அந்தப்புரப் பெண்கள் அனைவரும் சூர்தாஸைச் சூழ அமர்கின்றார்கள்.

அக்பர் இரண்டாவது மணியை அடிக்கிறார். வீணை இசை, ஜால்ராஒசை, குழலோசை, நர்த்தன சிலம்பொலிகள் தவழ சூர்தாஸ் உருக்கமாகப் பாடுகிறார்.)

சூர்தாஸ் பாடல்:

தர்ம தேவா! கிருபாகரா! தயாநிதி! மகாப்பிரபு! கிருஷ்ணா!
தர்மம் எது? அதர்மம் எது?
தடுமாறித் தவிக்கும் குருடன் நான்-பிரபு!
தன்சொல் கேளா மகனைத் தந்தை
தண்டிப்பதே தர்மம்! தந்தை சொல் மந்திரம்!
மந்திரத்து அக்ஷரம் மகன்தானே, கிருஷ்ணா?
தந்தை சொல் மறுத்த தனயனுக்காக -

நரசிம்ம மாகி தந்தையைக் கொன்றாயே-பிரபு!
பரசுராம சத்புத்ரன் நீ! - உனக்கொரு தர்மம்!
பிரகலாதனுக்கொரு தர்மமா? பிரபு! சொல்.

பெண் 1: கவிஞரே! ஆஹா! பாடல் அற்புதம்! அதி அற்புதம்! சபாஷ்!

பெண் 2: பாடலின் அர்த்தம் தான் புரியவில்லை, புரிந்தால் - பாடலின் அர்த்தத்தையும் ரசிக்கலாம், கவிஞரே!

சூர்: சொல்கிறேன், தாய்மார்களே!

தந்தை சொல் கேளாத மகனைத் தந்தை தண்டிப்பதில் நியாயம் உண்டு என்று, நாம் தர்ம நீதிகளை வகுத்திருக்கிறோம், ஆனால் கடவுள் அந்த தர்மப்படி நடக்கவில்லையே, சகோதரிகளே!

பெண் 3: விளங்கும் படியாகச் சொல்லுங்கள், கவிஞரே!

(கதையும் காட்சியும் மௌனமாக விரிகின்றன)

சூர்: இரண்யாட்சன் என்ற ஒருவன் கடவுளை வணங்கித் தவம் செய்து எல்லா வரங்களையும் பெற்று விட்டான். பிறகு, அவன் 'தானே கடவுள்' 'கடவுள் வேறு யாருமே இல்லை' என்ற பிரகடனம் செய்தான். உலக மக்கள் முழுவதும் இரண்யனுக்குப் பயந்து போய் அனைவரும் உண்மையான கடவுளை வணங்காமல்-இரண்யனையே கடவுளாக வணங்கினார்கள். ஆனால் இரண்யனுக்குப் பிறந்த அவன் நான்காவது பிள்ளை பிரகலாதன், இரண்யனைக் கடவுளாக வணங்க மறுத்தான்! உண்மையான கடவுளையே வணங்கினான்.

தன் சொல்கேளாத மகனுக்குப் பல கொடுமைகளையும், தண்டனைகளையும் வழங்கினான் இரண்யன். ஆனால், கடவுளோ-மகன் பிரகலாதனைக் காப்பாற்றி விட்டார்.

கடைசியில், கடவுளே நரசிம்மாவதாரம் எடுத்து தந்தை இரண்யனை வதைத்துக் கொன்று, மகன் பிரகலாதனைக் காப்பாற்றினார். இது முதல் கதை!

(இரண்டாவது கதைக் காட்சிகள் மௌனமாக விரிய, சூர்தாஸ் பேசுகிறார்)

கடவுளே ஒரு ரிஷிக்கு மகனாகப் பரசுராம அவதாரம் எடுத்தார் . ரிஷி தன் மனைவியின் ஒழுக்கத்தில் சந்தேகம் கொண்டார். மகன் பரசுராமனிடம் 'உன் தாயை வெட்டிக் கொலை செய்!' என்று உத்தரவிட்டார். பரசுராமனும் தன் தந்தை சொல் தவறாமல், தன் தாயை வெட்டிக் கொன்று சற்புத்திரன் என்று பெயரெடுத்தார். இது இரண்டாவது கதை!

பரம்பொருளே! தந்தை சொல் கேளாதவனுக்கு ஒரு தர்மத்தையும் - தந்தை சொல் கேட்ட உனக்கொரு தர்மத்தையும் படைத்தாயே? எது தர்மம்? என்ற கேள்விதான்-என் பாடலின் நியாய வாதம்!

பெண் 4: கவிஞரே! உங்கள் கேள்விக்கும் நீங்கள்தானே பதில் சொல்ல வேண்டும்? பதிலையும் சொல்லுங்கள்.

சூர்: (கடகடவென்று சிரித்து) தாயே! உன் கேள்வி, அற்புதமான கேள்வி! கேள்வி கேட்டவன், பதில் சொல்லத் தெரிந்தவனா, தெரியாதவனா என்று சோதிக்கிறீர்கள்.

இரண்டு கதைகளுக்கும் உரிய ஒரே பதில்! அதர்மத்தில் தர்மம்! ஆக கடவுள் செய்ததெல்லாமே தர்மம்!

பெண் 5: தர்மங்களுக்கே தர்மத் தீர்ப்பு வழங்கி விட்டார், மகாகவி!

(திரைக்கு வெளியிலிருந்து)

அக்: (உணர்ச்சிகரமாக) சபாஷ், மகாகவி! சபாஷ்! மேலும் பாடுங்கள்!

சூர்தாஸ் பாடுகிறார். (இசைகள் எழுகின்றன-உருகிப் பாடுகிறார்)

ஆதவனே, உன் அம்சம்! ஐயனே, பரம்பொருளே! ஆதிமூல நாயகா!

சூரியனே, நீ பிரபு! உன் மகன் கர்ணன்! ஒப்பிலா வள்ளலின்!
தான தர்ம புண்ணியத்தைத் தானமெனப் பெற்றாய்!
கர்ணனையும் கொன்றாயே - பிரபு
மரணமுடிவில், மகன் உனைச் செய்த துதி-
கேட்டதா கிருஷ்ணா? கேட்டதா கிரிதாரி?
வேதிய வடிவில் செய்த பிள்ளைப்படுகொலை, தர்மமா பிரபு!
அப்பன் இரண்யனைக் கொன்ற தர்மம்-சரியாகிருஷ்ணா?
பிள்ளை கர்ணனுக்கு மரணம் தந்த தர்மம்-சரியா பிரபு?
பிரகலாத பேரன், பெருவள்ளல் மாவலி!
அவனையும் கொன்றாய்-அதே தானம் பெற்று!
தானத்தில் தானம்- நிதானம்! நிதானமற்ற மாயை-உன் தானம்!
பாசமற்ற தானம்- உன் தானம்! பக்தனை அழிக்கவே உன் தானம்!
அழித்த பக்தனை, ஆட் கொள்வதும் உன் கருணை! ஐயா, நாயகா! அருள்வார்!
குருட்டுப்பிள்ளை நான்! எனக்கு தர்மம், எது சொல்! எது கிருஷ்ணா?
வேத விரோத செயல் - சூதாட்டம்!
செய்பவதர்க்குத் துணை நின்று-

பாரதத்தில் பாண்டவர்க்கு சாரதியாய்
சங்கநாதமிட்டாயே, பிரபு! எது தர்மம்! எது தர்மம்!
சொன்னதைச் சொன்னபடி தந்தானே தர்ம வள்ளல்
மாவலி?
மாறாமல் சொல் காத்த மாவலியைப் பாதாளத்தில்
தள்ளினாயே மாயவா! எது தர்மம்!
மற்றவர்க்குள் நீதி. எப்படியோ ஆகட்டும்! ஏதோ.
போகட்டும்!
எனக்குள் நியாயம், என்ன கண்ணா? எனக்குள் தர்மம்,
என்ன கண்ணா?
அழித்தேனும் ஆண்டருள வருவாயா, கண்ணா? மாயவா!
மகாப்பிரபு!
கருணை விழி, உன்னிடம் காக்கும் கரம், உன்னிடம்! சங்கமப்
பாதமலர், உன்னிடம்!
சரணாரவிந்தம், உன்னிடம்! சர்வலோக பரமபதம்
உன்னிடம்! சரணம், சரணம்!

(கவிதையில் மயங்கிய பெண்கள், துணிகளுக்குள் தங்களை மறைத்துக் கொள்ளாமல் அலங்கோலமான நிலையில் சூர்தாஸை நெருங்கி, நெருங்கி உட்கார்ந்து ரசிக்கிறார்கள்)

பெண் 6: மகாகவி! அதி அற்புதமான பாடல்! ஆஹா! ஆஹா!

பெண் 7: மகாகவி! பாடலிலுள்ள கதைகளை விளக்கினால் -கவிதைகளின் உள்ளார்த்தத்தை நாங்கள் புரிந்து கொண்டு அனுபவிக்க வாய்ப்பாக இருக்கும்.

சூர்: சொல்கிறேன், தாயே!

உலகமெல்லாமே கடவுளின் அம்சங்கள்! சூரியனும் கடவுளம்சம், தான்! மகாபாரதக் கதையில், சூரிய புத்திரனாகக் கர்ணன் பிறக்கிறான். தர்மம் தவறாத பாண்டவர்கள், அதர்ம பாவமாகிய சூதாட்டத்தில் ஈடுபட்டுத் துன்பங்களுக்கு ஆளாகின்றார்கள்!

இறுதியில் மகாபாரதப் போர் ஒரு தர்ம யுத்தமாகவே நடை பெறுகிறது. தர்மம் தவறிய பாண்டவர்களுக்குத் துணையாக நின்று, கடவுள், கிருஷ்ணாவதாரத்தில் சூர்ய புத்ரன் கர்ணனை அழிக்கிறார். இது தர்மமா என்பது ஒரு கேள்வி. ஒரு கேள்விக்குள்ளே இரண்டு கேள்விகள் - அதர்ம சூதாட்டமாடியவருக்குக் கடவுள் துணை போகலாமா என்பது கேள்விக்குள் முதல் கேள்வி! மகன் முறையான கர்ணனை, வாரி வாரி வழங்கிய தர்ம வள்ளல் கர்ணனைத் தானே அழிக்கலாமா என்பது கேள்விக்குள் உள்ள இரண்டாவது கேள்வி!

அதைப் போலவே, மகாபலிச் சக்ரவர்த்தி மாபெரும் வள்ளல்! பார்க்கப் போனால்- தன் பக்தன் பிரகலாதனுக்கும் பெயரன்முறை கொண்டவன்! மகாபலி! அவன் உலகங்களை அடையப் பேராசையுடன் மாபெரும் யாகம் நடத்திய பொழுது-கடவுள் மிகச்சிறிய வாமன அவதாரம் எடுத்துக் கொண்டு போய்த் தன் சிறிய காலடியால் மூன்றடி மண்தானம் பெற்றார். பிறகு சகல உலகமும் பிரமிக்கும்படி, திரிவிக்கிரமனாகி வியாபித்து நின்று, அவ்வளவு உலகங்களையும் அளந்ததோடு-மூன்றாவது அடியால் மகாபலியையும் அழித்துப் பாதாளத்தில் தள்ளினார் என்பது கதை!

சொன்ன சொல் தவறாத மகாபலியைக் கடவுள் அழித்தது தர்மமா? என்பது ஒரு கேள்வி!

பெண்8: மகாகவியின் கேள்விக்கு, மகாகவிதான் பதிலும் சொல்ல வேண்டும்.

சூர்: சொல்கிறேன் தாயே! இதுதான் ஒரே பதில்! - அதாவது, முள்ளை, முள்ளால்தான் எடுக்க வேண்டும்! வைரத்தை வைரத்தால் தான் அறுக்க வேண்டும்! அதைப்போல - அதர்மத்தை அதர்மத் தால் தான் அழிக்க வேண்டும்! அதைத் தான் கடவுள் செய்தார்.

(திரைக்கு வெளியிலிருந்து)

அக்: (உணர்ச்சிகரமாக உரத்த குரலில்) சபாஷ், கவிச்சக்ரவர்த்தி, சபாஷ்! தேவகானத்தைத் தொடருங்கள்.

(இசை முழங்க, சூர்தாஸ் பாடத் தொடங்குகிறார்)

அஜமலன் அதர்மன்! கஞ்சன்! அஞ்ஞானி!
அவனுக்கா பரமபதம்! எது தர்மம் பிரபு-எது தர்மம், பிரபு?
ஏழை குருட்டுப் பிள்ளை நான்
என் கண்ணே, ஜீவனே நீதான் கிருஷ்ணா!
என் பக்திக்கு முக்தியா? நரகமா?
எது சொல் - பிரபு?

பெண் 9: தேவகானக் கவிச்சக்ரவர்த்தி! உங்கள் கானத்தில் குறிப்பிட்ட அஜமலன் என்பவன் யார், மகாகவி!

சூர்: சொல்கிறேன் தாயே! அஜமலன் அதர்மங்களிலேயே விருப்பம் கொண்ட மகாபாவி! பெரும் கஞ்சன்! ஞானமே இல்லாதவன்! தற்செயலாகக் கடவுளை வழிபடும் பெயரைத் தன் மகனுக்கு வைத்திருந்தான். உயிர் பிரியும் வரையிலும், அஜமலன் கடவுளையே நினைக்காதவன். ஆனாலும் உயிர் பிரியும் நேரத்தில் தன் மகனைக் கடவுளுக்குரிய 'நாராயணா' என்ற பெயர் சொல்லி அழைத்தான். கடவுளின் பெயரைத் தெரிந்தோ, தெரியாமலோ ஒரு முறை சொல்லி அழைத்ததால், அதன் பலாபலனாக அஜமலனுக்கு முக்தி கிடைத்தது. அஜமலனுக்கு முக்திக்கு வழி வகுத்தது தர்மமா என்பது தான் என் கேள்வி!

பெண் 10: கேட்ட கேள்விக்குரிய பதிலையும்—

சூர்: சொல்கிறேன் தாயே! பாவிகளுக்கும் இறைவன் இரக்கப் படுகின்றவர் என்பதுதான், பதில்! பாவிகளும் இறைவனிடம் சங்கமம் ஆக, இறைவனே துணை நிற்கிறார் என்பதுதான் இறையருள்!

(திரைக்கு வெளியிலிருந்து)

அக்: சபாஷ்! கவிச்சக்ரவர்த்தி, சபாஷ்! தேவ ஞானம் தொடரட்டும், முடியும்வரை!

(பாடுகிறார் - இசை முழங்க-இறுதிப் பகுதி)

மாயவா! பிரபு மன மோகனக் கண்ணா!
கிரிதாரி! கிருஷ்ணனுக்குப் பகை ஏது? பாசம் ஏது?
இரண்யனுக்கும் முக்தி!
கர்ணனுக்கும் பரமபதம்!
கஞ்சன் அஜமலனுக்கும் மோட்சம்!
கிருபா கடாக்ஷா! கிருஷ்ணா! மகாப்பிரபு! மாயவா!
உன் பக்தனுக்கும் முக்தி! பகைவனுக்கும் மோட்சம்!
சூர்தாசுக்கும் சொர்க்கம்! சூர்தாஸ் ஒரு பாவி! குருடன்!
முழுக் குருடன் சூர்தாசுக்கு-முக்தி! முக்தி! முழுமுதலே!
கிரிதாரி! மாதவா! கிருஷ்ண, கிருஷ்ண, கிருஷ்ணா,
கிருஷ்ண! ஹரே, ஹரே!
அடியேனுக்கும் முக்தி! ஆம்! அது சத்தியம்!
சத்தியம்! சத்தியம் ! சத்தியம் - பிரபு!

(சூர்தாஸ் பாடலை முடிக்கிறார். அவர் கண் எதிரில்- அணிகலன்கள், பூ, பொட்டு இல்லாமல் அழுக்குப் புடவையுடன் சோகமயமாக, கவரி வீசிக் கொண்டு ஒரு பெண் நிற்கிறாள்.

உடனே சூர்தாஸின் கண்களில் பார்வை தோன்றுகிறது. அவர் விழிகள் பார்க்கும் சக்தியைப் பெறுகின்றன. அவர் விழிகளுக்குள், இந்த வேலைக்காரப் பெண் தோன்றுகிறாள். பிறகு அதே வேலைக்காரி- பட்டுப்புடவை, அணிமணிகள் ஜொலிக்க, நெற்றியில் பொட்டு, தலையில் பூவுடன் சத்யபாமாவாகக் காட்சி அளிக்கிறாள். பிறகு பழைய வேலைக்காரியாக மாறிக் காட்சி தருகிறாள். சூர்தாஸின் தலையில் இடி மின்னல்கள் உள்ளுக்குள்

தோன்றி மறைகின்றன)

சூர்: (எழுந்து நின்று, அலறுகிறார்) தாயே சத்தியபாமா! மகாலெக்ஷ்மி! ஏன் அம்மா உனக்கு இந்த பரிதாபநிலை? அழுக்கு ஆடை! அவலமான தோற்றம். அணிமணிகள் இல்லை! பொட்டில்லை! பூவில்லை! புத்தமுறுவல் இல்லை!

கிருஷ்ணமுராரி ஏனம்மா உன்னை இப்படி ஆக்கி விட்டான்? சர்வலோகமும் போற்றும் தாயே! ஏனம்மா வேலைக்காரியாக , தொண்டச்சியாக மாறிக் காட்சி தருகிறாய்?

(அலங்கோலமாக அமர்ந்திருந்த பெண்கள் அலறிக் கொண்டு எழுகின்றனர்)

எல்லோரும் அலறுதல்: பாடியவன் குருடனல்ல! பார்வை உள்ளவன்! மாயாவி!மகாபாவி! வஞ்சகன்!- இவனா, மகாகவி?

நம் ராஜவம்ச சம்பிரதாயத்தையே நாசமாக்கி, நம் மேனிகளை இவ்வளவு நேரம் பார்த்து ரசித்துக் கொண்டிருந்திருக்கிறான்.

ஐயோ! ஷா இன் ஷா ! நீதி வழங்க வேண்டும்!

(சூர்தாஸின் கண்கள்- மீண்டும் குருடாகி விடுகின்றன. திடுக்கிட்ட அக்பர் தொடர்ந்து மூன்றாவது, நான்காவது மணிகளைத் தொடர்ந்து அடிக்கிறார். அனைவரும் உள்ளே ஓடி மறைகின்றனர். வேலைக்காரி மட்டும் அசையாமல் நிற்கிறாள். திரையை விலக்கிக் கொண்டு அக்பர் முதலான அனைவரும், உள்ளே ஓடி வருகின்றனர். சூர்தாஸ் நின்று கொண்டிருக்கிறார்.)

அக்: (கோபத்துடன்) சூர்தாஸ்! அந்தப்புரப் பெண்கள் கூறியவை...

சூர்: ஓரளவிற்கு உண்மைதான், சக்ரவர்த்தி!

அக்: வஜீர் ஏ ஆஜம்! நீங்களே விசாரியுங்கள்!

மான்: சூர்தாஸ்! கண்ணுக்குத் தெரியாமல் காற்றோடு காற்றாக இசைக் கருவிகளின் முழக்கம் தவழ்ந்த பொழுதே, நான் சந்தேகப் பட்டேன்!

டான்: என்ன சந்தேகம்? சந்தேகத்தில் நீதி இருக்கிறது!

மான்: சூர்தாஸ் ஒரு மாயாவி! மந்திரவாதி! மோசடிக்காரன்! எவ்வளவுதான் இசைஞானத்திற்குச் சக்தி நிறைந்திருந்தாலும், நாம் கேட்ட இசைக் கருவிகளின் ஓசை ஒலிகள் எல்லாமே, அவ்வப் பொழுது கேட்டதென்றால்-நாம் கேட்டவை, கண்கட்டி வித்தை தான்! சூர்தாஸ்! உண்மையைச் சொல், நீ குருடனா? அல்லது பார்வையைக் கொண்டவனா?

சூர்: இரண்டுமே, உண்மை!

மான்: ஞானக் கண், ஊனக்கண்-என்று கதையளக்கப் போகிறாயா? அந்தப்புரத்திற்குள் உனக்குக் கண் தெரிந்ததா, இல்லையா? உண்டென்று சொல், அல்லது இல்லை என்று சொல், எங்களுக்கு உண்மை தெரிந்தாக வேண்டும்!

(இரண்டு பணிப் பெண்கள் ஓடி வந்து)

பணிப்பெண்கள்: ஷா இன் ஷா! அந்தப்புரப் பெண்கள் அக்னியை வளர்க்க ஆரம்பித்து விட்டார்கள், அந்நியன் ஒருவன், தங்கள் உடலைப் பார்த்து விட்டதால்- அக்னிப் பிரவேசம் தான் பிராயச் சித்தமாம்!

அக்: (கத்துகிறார்) அந்தப்புரப் பெண்கள் வளர்க்கும் அக்னியை, நான் தடை செய்வதாகப் போய் சொல்லுங்கள்! உண்மை தெரிந்த பின்பு தான்- சரியான தீர்ப்பைக் கடவுளின் பெயரால் வழங்குவேன்! அதற்குள்ளாக அக்னிப் பிரவேசம்

என்றால் அது பெரும் மூடநம்பிக்கை! அக்னியை உடனே அவியுங்கள், போங்கள் உடனே!

(பணிப் பெண்கள் ஓடுகின்றனர்)

மான்: சூர்தாஸ் வினையாக விபரீதவினையாட்டை வினையாடி விட்டாய்! நீ குருடனா? இல்லையா?

சூர்: எனக்கு ஓரிரு நிமிடங்கள் கண் தெரிந்ததும் உண்மை! தற்பொழுது, நான் குருடனாக இருப்பதும் உண்மை!

மான்: சூர்தாஸ்! இந்த வேலைக்காரிக்கும் உனக்கும் என்ன தொடர்பு?

சூர்: வேலைக்காரியாக நீங்கள் நினைப்பவள், கோvவிலில் பூஜையின் மூலஸ்தானத்தில் இருக்கக் கூடிய சக்தியப்பாமா! தெய்வாம்ச நாயகியை, வேலைக்காரி என்று நிந்தனை செய்து இகழாதீர்கள்!

வல்: அக்பர்ஷா! என்னைச் சிறிது பேச அனுமதிக் கின்றீர்களா? ஏனென்றால் சூர்தாசுக்கு ஞானோபதேசம் செய்தவனே, நான் தான்!

மான்: சொல்லுங்கள், சுவாமிகளே! ஆனால் நீங்கள் சொல்வதை நாங்கள் நம்ப வேண்டும் என்று எதிர்பார்க்கிறீர்களா?

வல்: நமக்கெல்லாம் மீறிய கடவுளின் சக்தியை, நீங்கள் நம்புவதானால்-அக்பர்ஷாவின் தர்பாரில் சர்வ சமய சமரசமும் இருப்பது உண்மையானால் - நம்புங்கள்!

இங்கே- இந்த நிகழ்ச்சிகள் நடக்கப் போவதை முன்னமே நான் அறிவேன், டான்சேன்! அதனால்தான், அழையாவீட்டில நுழையாத விருந்தாளியாக, இல்லாமல் நானாகவே வந்தேன், சூர்தாஸின் சரித்திரம் முடிவடையப் போகிறது. அதற்கு முன்பாக சூர்தாஸைப்

பற்றிய எல்லா விவரங்களையும் தெரிவித்து விட வேண்டியது. என் கடமை! அடுத்து நடக்கப் போகும் ஓர் அற்புதக் காட்சியையும் நீங்கள் உங்கள் கண்களால் பார்க்கத்தான் போகிறீர்கள்!

அக்: (தலையைக் கவிழ்ந்து, சிறிது சிந்தித்து) ஆச்சார்ய சுவாமிகளே! யார் கேட்காவிட்டாலும், நான் கேட்கிறேன். சொல்லுங்கள்!

வல்: சொல்கிறேன், கேளுங்கள்!

மகாகவி சூர்தாஸ் யார் யார்...... கடவுள், அதர்மத்தை அழித்து தர்மத்தை நிலைநாட்ட எடுத்த கிருஷ்ணாவதார காலத்திலேயே வாழ்ந்த ஒரு மாபெரும் ஞானி! அவர்தான், அக்ரூவர்! கிருஷ்ணனின் மீது மகாபக்தி கொண்ட கிருஷ்ணனின் நண்பர், அமைச்சர்- எல்லாமே அக்ரூவர்தான்! அப்படிப்பட்ட ஞானி அக்ரூவர்தான் பகவான் கிருஷ்ணனால் சபிக்கப்பட்டு, சூர்தாஸாகப் பிறந்து குருட்டுக் கவிஞராக மாறினார்!

டான்: கிருஷ்ண பகவான் சாந்த சொரூபியல்லவா? வேண்டுமானால் கிருஷ்ணனிடம் சூழ்ச்சியும், ராஜதந்திரமும் நிலவின என்று கூடச் சொல்லலாம். பகவானிடம், கோபமுமா ஏற்பட்டிருக்கிறது?

வல்: டான்சேன்! கிருஷ்ணாவதாரம் முழுவதிலும் கடவுள் யாரிடமுமே கோபித்ததில்லை! சண்டையிட்ட காலங்களிலும் கூட, அவர் சாந்த சொரூபியாகத் தான் நிதானத்துடன் நடந்து கொண்டிருக்கிறார்!

சகுனி மீது -துரியோதனன் மீது-துச்சாதனன் மீது-சிசுபாலன் மீது-ஜராசந்தன் மீது, கம்சன் மீது-நரகாசுரன் மீது-எங்கெங்கும் சிரித்துக் கொண்டே திட்டங்கள் தீட்டி, அனைவரையும் ஆட்டிப் படைத்து அழித்தாரேயன்றி, யாரிடமுமே கடவுள் தன் கோபத்தைக் காட்டியதில்லை.

பகவான் கிருஷ்ணனின் சரிதத்தில் அவர் கோபப்பட்ட தெல்லாம் , முதலில் அக்ரூவர் மீது! பிறகு- சத்யபாமா மீது!

அக்: விவரமாகச் சொல்லுங்கள், சுவாமிகளே!

(காட்சிகள் விரிகின்றன. வல்லபாச்சாரியார் பேச்சுடன் காட்சிகள் மாறி மாறித் தோன்றுகின்றன)

வல்: கடல் நடுவே துவாரகையில் கிருஷ்ண பகவான் ராஜாதிராஜ கோலத்தில் அரசாட்சி நடத்திய அந்தக் காலத்தில் - ஒரு நாள்!......

காட்சி 28

(துவாரகை அரண்மனை! அந்தப்புரத்தில் உள்ள ஓர் அமளி யில் சோகமயமாகக் கவிழ்ந்து படுத்துக் கிடக்கிறாள், சத்தியபாமா! பின்னணியாக காதலரின் விரகதாப சோக இசை எழுகின்றது. தோழியர் இருவர் கவலையுடன் நின்று கொண்டிருக்கின்றனர். சத்திய பாமா, திடீரென்று கோபத்துடன் எழுந்து உட்காருகின்றாள். தலையிலுள்ள பூவை எடுத்து வீசி எறிகிறாள். பஞ்சணையை எட்டித் தள்ளுகிறாள். நகை அணி மணிகளை, அடுக்கிக் கிடக்கும் ஆடைகளை அள்ளி அள்ளி-வீசுகிறாள்)

தோழியர்: தேவி! உங்களுக்கு என்ன ஆயிற்று? ஏன் இவ்வளவு கோபம்?

சத்யபாமா: (கத்துகிறாள்) மந்திரி அக்ரூவரை உடனே அழைத்து வாருங்கள்!

(அக்ரூவரைத் தோழியர் அழைத்து வருகின்றனர்)

அக்ரூ: சத்யபாமா தேவிக்கு சர்வ சுப மங்களம் தாயே! ஏதோ சோக மயமாக, கோபக்கனல் தெரிக்கக் காணப்படுகின்றீர்களே, ஏன் தாயே?

சத்யபாமா: பெரியவரே! என் நாயகன் துவாரகை நாதனைப் பார்த்துப் பல நாட்களாகி விட்டன. நான் ஒருத்தி இருப்பதையே மறந்து விட்டாரோ, அந்த மகானுபாவன்? ருக்மணி, ஜாம்பவதி, காளிந்தி, மித்திரவிந்தை, பத்திரை, லக்ஷ்மணை, நப்பின்னை, ராதை, நரகாசுரனையின் பெண்கள் பத்து பேர், பகதந்த பட்டணத்தின் பதினோராயிரத்து அறநூறு இராஜ கன்னிகைகள், இவர்களுக்கும் மேல் எவ்வளவோ கோபியர்கள் - இவ்வளவு ஆயிரம் பெண்களுக்கும் ஒரே நாயகனாக விளங்கும், உங்கள் மாயாவி மகாராஜா கோவர்த்த நேசனுக்கு என் நினைவே மறந்து விட்டது போல் தெரிகிறது!

அக்ரூ: உங்களை அவர் மறக்கவே மாட்டார், தாயே!

சத்ய: மகாமந்திரி! உங்கள் வார்த்தையை நான் நம்பத் தயாராக இல்லை!

அக்ரூ: அதற்காக, இவ்வளவு பெரிய கோபதாபமா, தாயே?

சத்ய: என் தந்தையைப் போல் நினைத்து உங்களிடம் சொல் கிறேன். நாயகனில்லாத நாயகி, உயிர் வாழலாமா? இனியும் என் நாயகன் என்னிடம் வராமல் இருந்தால்-என் முடிவு பிராணத் தியாகம் தான்!

அக்ரூ: தாயே! அப்படியெல்லாம் அமங்கலமாகப் பேசா தீர்கள்! கிருஷ்ணப்பிரபு ஒரு மாயவன் தான்! ஒத்துக் கொள்கிறேன். ஆனால், தன்னை நம்பியவர்களை-நாயகியர்களை எந்தக் காலமும் ஏமாற்றமாட்டார். நம்புங்கள்!

சத்ய: சமாளிக்காதீர்கள், மகாமந்திரி! உங்களுக்குத் தெரியாமல் என் நாயகன் எங்கும் போய்விட மாட்டார். நீங்கள்தான் காரணம்! என் நாயகன் மீது அவ்வளவு பக்தி, பாசம், பயம், எல்லாமே கொண்டவர் நீங்கள்! உங்கள் நாயகனும்- என் நாயகன் தான்!

நான் பெண்ணாகப் பிறந்து விட்டேன்! நீங்கள் ஆணாகப் பிறந்து விட்டீர்கள். இதுதான் வித்தியாசம்! ஆனால், என் நாயகனைப் பற்றி உங்களுக்குத்தான் அதிகமாகத் தெரியும்.

அக்ரூ: அதற்காக, என்னை என்ன செய்யச் சொல்கிறீர்கள், தாயே?

சத்ய: சொல்கிறேன். கேட்டுக் கொள்ளுங்கள்! இன்னும் ஒரே நாழிகைதான் உயிரோடு இருப்பேன்! அதற்குள் என் நாயகனைக் கொண்டு வந்து என்னிடம் சேர்ப்பித்து விட வேண்டும்! தவறினால் ஒரு இமைப் பொழுதுகூட, நான் உயிரோடு வாழ மாட்டேன்! இது, என் நாயகன் மீதே சத்தியம்!

அக்ரூ: தாயே! இப்பொழுதே போய், எங்கிருந்தாலும் நம் நாயகனை அழைத்து வருவேன், தாயே! என்னை நம்புங்கள்.

சத்ய: நம்புகிறேன், உங்களை! ஏனென்றால்-என் நாயகனே உங்களை நம்புகிறவர்! நாயகனின் வழியில் நானும் நம்புகிறேன். உடனே, போய் என் மணாளனை, மாயவனை, மாதவனை, மகாப் பிரபுவை அழைத்து வாருங்கள்!

அக்ரூ: சரிதாயே! புறப்படுகிறேன்(புறப்படுகிறார்)

சத்ய: மகாமந்திரி! இரண்டு விஷயங்களை மறந்து விடாதீர்கள்! ஒன்று-உங்களுக்கு நான் தந்திருக்கும் காலம் இன்னும் ஒரே நாழிகை! மற்றொன்று- என் பெயரே சத்தியபாமா! சத்தியம் தவறாதவள்! நினைவிருக்கட்டும்!

(சோகமாக அமளியில் சத்தியபாமா சாய, அக்ரூவர் ஓடுகிறார்)

வல்: (குரல் ஒலியோடு-அதற்கேற்ப காட்சிகள் மௌனமாகக் காட்டப்படுகின்றன)

பதறிப் போன அக்ரூவர் பகவான் கிருஷ்ணனை எங்கெங் கெல்லாமோ தேடினார்! யார் யாரிடமோ விசாரித்தார்! யாருமே பகவான் கிருஷ்ணனின் இருப்பிடத்தைக் காட்டவில்லை! காட்ட முடியவில்லை!

சத்தியபாமா கொடுத்தகெடு நாழிகை நேரமோ, வேகமாக ஓடிக் கொண்டிருந்தது. அக்ரூவர் பகவானைத் தேடித் தேடி சலித்து விட்டார். பகவான் வருவார் என்ற எந்த அறிகுறியும்தென்பட வில்லை! தன் தலையைப் பிய்த்துக் கொண்டார் அக்ரூவர்!

சத்திய பாமா தந்திருந்த நாழிகையின் கெடுநேரம் முடிவ டையப் போகும் வேளையும் நெருங்கிவிட்டதே! என்ன செய்வார் அக்ரூவர், பாவம்! செயலற்றவராகி விட்டார்!

பகவான் கிருஷ்ணன் திரும்பி வந்த பிறகு-எங்கே என் பாமா? என்று கேட்டால் அக்ரூவரால் என்ன பதிலைச் சொல்ல முடியும்? கதறினார் அக்ரூவர்!

(அக்ரூவர் நிலைதடுமாறி நிற்கும் காட்சி-அக்ரூவர் நினைப் பது அக்ரூவர் குரலில் ஒலிக்கிறது)

அக்ரூ: (நினைக்கும்குரல்) தாயே சத்தியபாமா! நீ என்ன சாமான்யப்பட்டவளா? உன் பெயரிலேயே சத்தியம் வாழ்கிறதம்மா! நினைத்ததை, சொன்னதை நிறைவேற்றும் உத்தமியல்லவா நீ?

தேவேந்திரனின் மனைவி இந்திராணியுடனேயே போட்டி யிட்டு, இந்திராணி உன்னை அவமதித்ததால் தேவலோக பாரிஜாத மரத்தையே பகவான் கிருஷ்ணனைக் கொண்டு பூவுலகத்திற்கு வருவித்த வைராக்கியத்தின் வடிவமல்லவா- நீ?

'பழிக்குப் பழி' என்று உன் தந்தை சத்திராஜித்தைக் கொன்ற சத தன்வாவைப் பகவான் கிருஷ்ணனைக் கொண்டு பழிவாங்கிக் கொன்ற சபதத்தின் சாட்க்ஷாத் சொரூபமல்லவா, நீ?

வீரத்திலும் குறையாமல் பகவான் கிருஷ்ணனின் தேரை ஓட்டிச் சென்று - மகனென்றும் பாராமல், நரகாசுரனையே கொன்ற வீரத்தின் சக்தியல்லவா, நீ?

மாறாத இளமையுடன் வாழ, அதிதியிடம் முதுமைக்கே ஆளாகாத வரம் பெற்ற அழகு தேவதையல்லவா, நீ?

மகாப்பிரபு! கிருஷ்ணா! தாய் சத்யபாமாவின் சபதம் நிறை வேறி விடக்கூடாதே கிரிதாரி? என்ன செய்வேன் நான்?

ஒன்று என் தாய் சத்யபாமாவின் உயிர் பிரிவதற்கு முன்பு - நான் பிராணத்தியாகம் செய்து விட வேண்டும்.

அல்லது-பகவான் கிருஷ்ணனைப் போல ஒரு பொம்மையைக் கொண்டு போய் நிறுத்தி- இதோ தாயே! உன் நாயகன்! என்று காட்ட வேண்டும்! எந்த வகையிலாவது- சத்திய பாமாவின் ஜீவனைப் பிரியாமல் தடுத்து நிறுத்த வேண்டும். என்ன செய்வது?

ஏன், இப்படிச் செய்தாலென்ன? எனக்குத்தான் சித்து வித்தைகள் தெரியுமே, நானே பகவான் கிருஷ்ணனாக மாறிக் காட்சி தந்தால் என்ன?

வல்: (குரல் ஒலி மூலம்)

முடிவாக அக்ரூவரே பகவான் கிருஷ்ணனாக வடிவம் தாங்கினார்.

(அக்ரூவர் கிருஷ்ணனாக மாறி, சத்யபாமாவிடம் செல்லும் காட்சி விரிகிறது)

சத்யபாமா தன்னை வெறுத்த நிலையில் விரித்த கூந்தலும், வடித்த கண்ணீருமாக சோகமே வடிவமாகக் காணப்படுகின்றாள். கிருஷ்ண வடிவத்தோடு அக்ரூவர் தோன்றுகிறார். இருவர் விழிகளும் ஒருவரை ஒருவர் பார்க்கின்றன)

சத்ய: பிறகு அங்கிருந்த பூக்கள், பழங்கள் ஆகியவற்றை எடுத்து அக்ரூவ கிருஷ்ணன் மீது வீசி எறிந்தோடு-வெறுப்புடன் பார்க்கிறாள். பிறகு -

சுவாமி! நீங்கள் மட்டும் வராமல் இருந்தால் உங்களுக்காகவே எடுத்த இந்த சரீரத்தை அழித்துக் கொண்டிருப்பேன்!

அக்ரூ. கிருஷ்: சத்தியபாமா! அக்ரூவரிடம் நீ கொடுத்த கெடுவிற்குள் தவறாமல் வந்து விட்டேனே, பிறகென்ன?

சத்: என்ன, சத்திய பாமாவா? இப்படி என் முழுப் பெயரையும் சொல்லி, என்னை எந்தக் காலத்தில் அழைத்திருக்கிறீர்கள் சுவாமி? சத்தியா என்பீர்கள்! அல்லது 'பாமா' என்பீர்கள்! இதையே மறந்து 'சத்தியபாமா என்று என்னைக் கூப்பிடுகின்றீர்கள். அந்த அளவிற்கு என்னை விட்டுப் பிரிந்து விட்டீர்கள்! என்னை மறந்து விட்டீர்கள்! உங்கள் கள்ளத்தனத்தை என்னிடமும் காட்டி விட்டீர்கள்! அப்படித்தானே? (அங்கு கிடந்த பூமாலை ஒன்றை எடுத்து ஆத்திரத்துடன் அக்ரூவ கிருஷ்ணனை நெருங்கி- ஓங்கி ஓங்கி அடிக்கிறாள். அக்ரூவ கிருஷ்ணன் உடனே மறைந்து விடுகிறார்)

சத்ய: ஓடி மறைந்து விட்டால், விட்டு விடக் கூடியவளா, நான்? நானும் பார்க்கிறேன், ஒருகை! (வேகமாக கிருஷ்ணனைத் தேடிக் கொண்டு ஓடி வருகிறாள்.)

(மற்றொரிடத்தில்-காட்சி விரிகிறது.)

(பகவான் கிருஷ்ணன் வந்து கொண்டிருக்கிறார். அக்ரூவர் வணங்குகிறார். பிறகு, அக்ரூவர் பாமாவின் பிரிவுத் துயரத்தையும் எடுத்த சபதத்தையும்-அக்ரூவர் தேடியதையும்-பிறகு அக்ரூவர் கிருஷ்ணராக மாறிச் சென்றதையும்-சத்தியபாமாவின் கோபத்தையும் மௌனமாக பின்னணிக் காட்சிகளாக, இசையின் பின்னணியில் கூறுகிறார். அதற்குள் பாமாவும் வந்து சேர்ந்து

கிருஷ்: (கோபம்பொங்க) பாமா! உன் அந்தப்புரத்தில் நீ பார்த்தது என்னை அல்ல! என் வடிவத்தில் வந்த- இந்த அக்ரூவரை!

சத்ய: (அதிர்ச்சியுடன்) ஆ! மோசம் போனேன்! என் பிரபுவையே தெரிந்து கொள்ள முடியாத அளவிற்கு மதியீனம் கொண்டவளாக மாறி விட்டேனா?

கிருஷ்: (கோபத்துடன்) பாமா! நீ மட்டுமல்ல! இவ்வளவு பழகிய அக்ரூவரும் என்னை முழுமையாகத் தெரிந்து கொள்ள வில்லை! என்னையே அடையாளம் தெரியாத உங்களுக்கு பக்தி எதற்கு? பாசம் எதற்கு? காதல் எதற்கு?

அக்ரூ: பகவானே! என் தாயின் உயிரைப் பாதுகாத்து வைக்க இந்த பக்தன் - பார்க்கப் போனால் உங்களிருவருக்குமே நான் மகன்! நான் தங்கள் வடிவில் சென்றதைத் தவறு என்று சொல்வது! எந்த வகையில் நியாயம்? பிராட்டியார் சத்ய பாமாவைக் காப்பாற்றியது ஒரு குற்றமா? நீங்களே சொல்லுங்கள்.

கிருஷ்: குற்றம்தான் அக்ரூவரே! அதுவும் மன்னிக்க முடியாத மாபெரும் குற்றம்! பரமாத்ம தண்டனைக்குரிய மகாபாதகத்தை நீங்கள் செய்திருக்கிறீர்கள்! பாமாவிற்கும் இந்தக் குற்றத்தில் பங்குண்டு!

அக்ரூ: மகாபிரபு! கிள்ளிப் போட்ட துளசி இலையை 'கிருஷ்ணா! என்று சொன்னால் - அந்த துளஸிக்குள் பிரதிஷ்டை ஆகின்றவன், நீ! சிலைகளுக்குள், சிற்பங்களுக்குள், விக்கிரகங்களுக்குள் உன்னை நினைத்து வணங்கும் போது, அவைகளுக்குள் நின்று அபயந்தருபவன் நீ! அப்படி இருக்கும்பொழுது பாமாப் பிராட்டியாரின் உயிரைப் பாதுகாக்க, நான் உங்கள் கோலம் கொண்டது தவறா- பகவானே!

கிருஷ்: தவறுதான்! நீங்கள் குறிப்பிடும் துளஸி, விக்கிரகங்கள்-முதலியவை ஜீவனற்றவை. நீங்கள் என்ன ஜீவனற்றவரா? உங்களுக்குள் நான் இருப்பேன்! எனக்குள் நீங்கள் இருக்க இடம் கொடுப்பேன். ஆனால் நானாக, நீங்கள் ஆகி விட முடியாது! தாய் சத்திய பாமாவின் மகனாகக் கூட நீங்கள் இருக்கலாம், ஆனால் அந்தத்தாயின் மணாளனாக நீங்கள் ஆகமுடியாது! ஆத்மாவில் பரமாத்மா இருக்கலாம்! பரமாத்மாவின் இதயத்தில் ஆத்மாவும் கூட சங்கமமாகலாம்! ஆனால் அத்மா, பரமாத்மா ஆகிவிட முடியாது! என்றைக்குமே ஆத்மா, ஆத்மாதான்!

அக்ரூ: என்ன பிரபு சொல்கிறீர்கள்?

கிருஷ்: உலக ஜீவாத்மாக்களெல்லாம் நாயகியர்கள்! பரமாத்மாவாகிய பரம புருஷன் ஒருவனே நாயகன்!

இதை, உலகத்திற்கு உணர்த்தவே இந்த அவதாரத்தில் இவ்வளவு ஆயிரம் நாயகியர்களை மணந்தேன்.

கோபியராகிய நாயகியர்கள் அவ்வளவு பேரும் மகரிஷிகள் அல்லவா? நாயகிக்கு நாயகன் தாயாகலாம்! தந்தையாகலாம்! மகனாகலாம்! மாணவனாகலாம்! தங்கையாகலாம்! தாரமாகலாம்! தொண்டடிமையும் ஆகலாம்! தோழனாகலாம்! -எப்படியும் ஆகலாம்! ஆனால் - நாயகி என்பவள், நாயகனின் நாயகிக்கும் நாயகனாகக் கூடாது! நாயகன் தான், நாயகியை அனுபவிப்பான்! நாயகியோ, பக்தியால் தான் நாயகனிடம் சுகம் காண்பாள்! நாயகனையே நாயகியாக்கித் தான் நாயகனாகி விட மாட்டாள்!

அக்ரூ: அதற்காக?

கிருஷ்: சர்வ வியாபியாகிய நான் இல்லாத இடம் எது? உங்களுக்குள் இல்லையா? பாமாவிற்குள் இல்லையா? நீங்களிருவரும் என்னைத் தேடியதே பெரும் அஞ்ஞானம்! என்னோடு கலந்த

பாமாவிற்கு மரணம் ஏது? அப்படியே அவள் ஆவி பிரிந்தாலும்-என்னோடு தானே பாமா சங்கமமாவாள்?

கஜேந்திர யானைக்கும்-அபலை பாஞ்சாலிக்கும் ஆபத்தைப் போக்க-கூப்பிட்ட குரலுக்கு நான் ஓடோடி வரவில்லையா?

ஏழை குசேலனின் ஒரு பிடி அவலுக்காக, அவனுக்கு நான் பாத பூஜை செய்ததில்லையா?

விஜயனுக்கு சாரதியாகத் தேரோட்டிக் காட்டவில்லையா?

நீங்கள் இந்த உலகத்தில் இல்லாத காலத்திலும் இருந்தவன் நான்! இருக்கின்ற காலத்தில் இருப்பவன் நான்! இல்லாமல் போன பின்பும், இருக்கக்கூடியவன் நான்!

அக்ரூ: தெரிந்தோ, தெரியாமலோ, நான் தங்களாக மாறி நின்று விட்டேன். என் செயலுக்கு மன்னிப்பா? தண்டனையா? எதுவானாலும் வழங்கி விடுங்கள், பகவானே!

கிருஷ்: அக்ரூவரே! என் கோலம் கொண்டு உங்கள் கண்களால் பாமாவைப் பார்த்ததே குற்றம்! பாமா-என் கோலத்திற்குள் ஒளிந்து நிற்கும் உங்களைக் கண்டறிந்து கொள்ளாமல் உங்களை நானாகவே பாவித்ததும் மகாகுற்றம்!

அக்ரூவரே! இவற்றிக்குத் தண்டனையாக-எனக்குரிய நாயகியை, பரமபுருஷனாகப் பார்த்த உங்கள் கண்களை நீங்கள் இழந்து குருடனாக வாழும் பிறப்பிற்கு ஆளாவீர்கள்!

உங்களை நானாக நினைத்த சத்திய பாமா, தொண்டூழியம் செய்யும் வேலைக்காரியாகப் பிறப்பாள்!

சத்ய: பிரபு! உங்கள் பாமாவிற்கும் தண்டனையா?

கிருஷ்: ஆம்! இரண்டு பேரையுமே நான் சபிக்கிறேன்!

அக்: எங்களுக்குச் சாப விமோசனமே இல்லையா? பகவானே!

கிருஷ்: முதல் என்றால் முடிவு இல்லாமலா போகும்? சபிக்கப் பட்ட நீங்கள், ஒரே காலத்தில் வெவ்வேறிடத்தில் வாழ்வீர்கள்! அக்ரூவரே! உங்கள் கண்களில் பாமா வேலைக்காரியான கோலத்தில் படும்பொழுது உங்கள் இருவருக்கும் சாப விமோசனம் ஏற்படும்!

எனக்குள் ஒளிந்து கொண்டு, கள்ளத்தனமாக நானாக உங்களைப் பார்த்த பாமாவிற்கு அடிமை வேலைக்காரியின் அலங்கோலம்! பாமாவின் பார்வையில் நானாகக் காட்டிய உங்களுக்குக் கண்ணில்லாத குருட்டு வாழ்க்கை! நான் தந்த சாபத்தை அனுபவித்துக் கழியுங்கள்!

அக்ரூ: பிறகு?

கிருஷ்: அன்பருக்கும் அன்பராக, தோழருக்கும் தோழராக, பக்தருக்கும் பக்தராக, ஞானிக்கும் ஞானியாக வாழ்ந்த அக்ரூவரின் பார்வையில்-பாமா, ஒரு வேலைக்கார அடிமை! பரமாத்த நாயகியின் பார்வை, ஜீவாத்மாவை பரமாத்மா என்று நம்பியதால்- மகாஞானி ஒரு குருடன்! இந்நிலையில் இருவரும் ஒருவரை ஒருவர் பார்த்த உடனே தான் சாப விமோசனம் நிவர்த்தி! பிறகு என்னோடு சங்கமமாவீர்கள்!

வல்: (குரல் ஒலிக்கிறது) இதுதான் கவிச் சக்ரவர்த்தி குருட்டு சூர்தாஸின் கண்ணில், அடிமை வேலைக்காரியாகப் பாமா தெரிந்த தெய்வ ரகசியம்!

(அப்பொழுது வானத்தில் ஒரு பெரும் ஜோதி வெள்ளம்! நடுவே பகவான் கிருஷ்ணன், பீதாம்பர சங்குசக்ரதாரியாகக்

குழலூதுகிறார். சூர்தாஸின் வடிவமும், அடிமை வேலைக்காரி பாமாவின் வடிவமும் வானத்தை நோக்கிச் செல்கின்றன.

பாதி வழியில் குருட்டு சூர்தாஸ் அக்ரூவராகவும், அடிமை வேலைக்காரி பாமா, சர்வாலங்கார சத்திய பாமாவாகவும், மாறுகின்றனர்.

அக்ரூவர் பகவானின் பாதத்திலும், பாமா பகவானின் இதயத்திலும் மறைகின்றனர். வானத்திலுள்ள ஜோதியும் மறைகின்றது)

வல்: எப்பொழுதும், இறைவன் மனிதனுக்கு நன்மைகளையே செய்வார்! கிருஷ்ண பகவானின் சாபமும், கோபமும் அப்பொழுது அக்ரூவருக்குத் தீமைகளாக இருக்கலாம், ஆனால் இந்த உலகத்திற்கு அற்புதமான 'சூரசாகரம்' போன்ற காப்பியங்கள் கிடைத்திருக்கின்றன!பகவான் தரக்கூடிய அனைத்துமே நன்மைகள்தாம்!

அக்: நபிகள் பெருமானார் பட்ட துயரங்கள், போராடிய போராட்டங்கள், பெற்ற கல்லடிகள் போன்ற மான அவமானங்கள் இவற்றால் உலகம் பெற்றது. திவ்விய குர்ரான் திருமறை!

ஏசுபெருமானுக்குக் கிடைத்த சவுக்கடிகள், சுமந்த சிலுவை-இவற்றின் பின்னணியில் உலகம் பெற்றது புனித பைபிள்!

கிருஷ்ணன் தேரோட்டியாகத் தொண்டடிமைத் தொழிலால் உலகம் பெற்றது பகவத் கீதை!

இவற்றைப் போலவே அக்ரூவர் குருட்டு சூர்தாஸாகப் பெற்ற சாபத்தால் உலகம் பெற்றிருப்பது-அதி அற்புதமான பொக்கிஷமாகிய 'சூரசாகர' பக்திக் கவிமலர்கள்! எல்லாமே நன்மைக்கே!

(நாடக ஆசிரியர் தோன்றி முடிவுரை கூறுகிறார். பற்பல அடியார்களின் படங்களும், பல இயற்கைக் காட்சிகளும், காட்டப் படுகின்றன) - பின் குரல் பின்னணி-

ஆன்மீக பக்தி மார்க்கம் என்பது- உலகத்திற்கே பொதுவான மனித நேயமாகும்.

ஆன்மீக பக்தி நெறி, ஜாதி மதங்களைக் கடந்த நிலையில்- உலக சமாதான சகோதரத்துவ ஒருமைப்பாட்டிற்கு வழி காட்டியுள்ளன.

பக்திமான்களுக்கு இறைவன் தந்த சத்திய சோதனைகளால் , உலகம் எண்ணற்ற ஞானச் செல்வங்களைப் பெற்றது, எண்ணற்ற மொழிகளில் இலக்கியங்களும், கலைகளும் பூத்துக் குலுங்கின.

எண்ணற்ற சோதனைகளின் நடுவில்தான்- ஜெய தேவரின் கீத கோவிந்தம்!

சிற்றின்பத்தில் திளைத்தவருக்கு மனைவி தந்த அதிர்ச்சி வைத்தியத்தால் தான், ஒரு துளசிதாஸ்! அவருடைய ராம சரித மானஸ காப்பியம்!

குழந்தைப் பருவத்தில் பாண்டுரங்கனுக்கே உணவை ஊட்டிப் பெற்ற பக்தி சுகம்தான், நாமதேவரிடம் பசித்து வரும் மனித குலத்திற்கு அன்னதானம் செய்யும் வழியைக் காட்டியது! அத்துடன் மராட்டி மொழியிலும் இரண்டாயிரத்திற்கும் மேற்பட்ட அபங்கங் களாக கவிதைகள் மலர்ந்தன!

கபீர்தாஸ், குருநானக்-ஆகியவர்களின் பக்தி மார்க்கத்தில் இந்து முஸ்லீம் சகோதரத்துவம் மலர்ந்தது!

வடக்கே சோகாமேளர், தெற்கே திருப்பாணாழ்வார், ஆகியோருக்குப் பக்தி மார்க்கத்தில் கிட்டிய சோதனைகள், ஜாதிகளை உடைத்தெறிந்து ஆலயப் பிரவேசத்திற்கு வழி வகுத்தது!

ஞானேசுவரர், ஏகநாதஸ்வாமி, இராமானுஜர்-ஆகியோரின் பக்தி மார்க்கம், ஜாதி வேறு பாடற்ற சமத்துவ நிலைக்கு வழி வகுத்தது!

பக்த மீரா, ஸ்ரீ ஆண்டாள்-ஆகியோரின் நாயகி நாயக சரணாகதித்துவ பக்தி நெறியில், அற்புதமான மீராவின் பக்திப் பாடல்களும், திருப்பாவையும் தழைத்தன!

பத்ராஜலராமதாஸர், புரந்தரதாசர், தியாகப் பிரம்மம்-ஆகியோர் எண்ணற்ற சோதனைகளின் நடுவில் காட்டிய கடவுள் பக்தியால், அதி அற்புதமான கீர்த்தனைகள் பாரத கலாசார சங்கீத சாம்ராஜ்யத்தில் மலர்ந்தன!

பகவானிடம் ஈடுபட்ட பக்தி நெறியால்-மாமிசம் விற்ற சஜ்ஜனகரும், செருப்புதைத்த ரவிதாசரும், குயவராக வாழ்ந்த கோரா கும்பரும், நாவிதராக வாழ்ந்த சேனா நாவிதரும், கொலை வேடனாகத் திரிந்த வால்மீகியும், ஒதுக்கப்பட்ட நந்தனாரும்-மகா ஞானிகளானார்கள்!

ஆன்மீக நெறியில் மணிவாசகருக்குக் கிடைத்த சிறை வாழ்வின் கொடுமையால், ஒரு திருவாசகம் மலர்ந்தது!

அருணகிரியைத் தொழுநோய் படுத்திய வாதையால், ஒப்பிலா சந்த இலக்கியம் திருப்புகழ் பூத்தது!

காரைக்காலம்மையின் கனிந்த பக்தி மேம்பாட்டால் பரம்பிரும்மமே, அம்மையே என்று அழைக்கும் நிலையில், ஆதி மூலத்திற்கே அன்னையாகும் அந்தஸ்து கிட்டியது!

அதைப் போலவே-

உலகத்திற்கு ஒன்றாகிய பரம்பொருளே- பக்த ஞானிகளுக்கும், உலக நன்மைக்கும் தொண்டனுக்கும் தொண்டனாக-தாஸானு தாஸனாக, தொண்டூழியம் செய்திருக்கிறார்.

வில் விஜயனுக்கு சாரதியாய், தேரோட்டினான் கண்ணன்!

ஏக்நாத சுவாமிகளுக்கு கண்டியா கிருஷ்ணன் என்ற வேலைக் காரனாகப் பணிவிடை செய்தான், பகவான்!

பக்தை சக்குபாய்க்காக அவளுருவில், சக்குபாயின் கணவனுக்கு மனைவியாய் அடிமை செய்தார், ஆண்டவன்!

பத்ராஜல ராமதாசரைக் காப்பாற்ற சேவகனாக வந்தார், ஸ்ரீதரன்! மீராவைக் காக்க, அவளுக்குத் தந்த நஞ்சை உண்டார், நாராயணன்!

திருப்பாணாழ்வாருக்காகவும், சோகாமேளருக்காகவும் கல்லடியும், கன்னத்தில் அறையும் பெற்றார் இறைவன்!

சபரியின், நப்பின்னையின் எச்சிலை உண்ட இறைவன், ஆண்டாள் சூடிக் கொடுத்த மாலைக்கு ஆசைப்பட்டான்!

தன் பசியைப் போக்கத் தன் மார்பையே விலையாக அறுத்துக் கொடுத்த ரிஷிபத்தினியை- தன் தாயான யசோதையாக்கி, அவள் முலைப் பாலுண்டு, உரலில் கட்டுண்டு அடிகளும் வாங்கினான், ஆதி பரம் பொருள்!

பக்தன் சேனா நாவிதருக்காகத் தானே நாவிதனாகி, மன்னனுக்கு முடி அலங்காரம் செய்தார், முழுமுதலோன்!

மங்கை மன்னன் களவாடக் கைகட்டி தம்பதி சமேதனாய் நின்றான், மாதவன்!

திருமழிசை ஆழ்வாருக்கோ-சொன்னதைச் சொன்னபடி கேட்டான், சுந்தரப் பெருமாளன்!

திருவைகுண்டத்தில் கள்ளனைக் காப்பாற்றத்தானே, கள்ளனானான் தயாநிதி?

குசேலனைக் கட்டி அணைத்துக் காலடிகளைக் கழுவி, பாத பூஜை செய்தான், பரந்தாமன்!

மணவாள மாமுனிகளிடம் மாணவனாய் நின்றான் பரமாத்மா! அடியார் சுந்தரருக்குத் தோழனாய், அவன் மனைவியிடம் கோபம் தணியத் தூது சென்றார். பரப்பிரம்மம்!

இப்படி உதாரணங்கள் எவ்வளவோ ! ஒவ்வொன்றிற்கும் அதைப் போலவே-

பரம் பொருளின் படைப்பியலில்-சிற்றின்ப அலைகளே பாயாமல்-ஆதிமூலப் பரமாத்மாவின் நினைவால்-எவ்வளவோ தெய்வீக சக்திகள் தோன்றியுள்ளன!

ஆதி சிவத்தின் நெற்றிக் கண்ணிலிருந்து நேரடியான முருக அவதாரம்! பராசக்தியின் உடலிலிருந்து நேரடியாக ஆனைமுகனின் ஜெனனம்!

திருமாலின் உந்திக் கமலத்திலிருந்து, நேரடியாக பிரமதேவன் பிறப்பு!

சிவவிஷ்ணுவின் பாசப் பார்வையிலிருந்து நேரடியாக ஐய்யப்ப ஜெனனம்!

அருந்தவச் செல்வி அஞ்சனையிடமிருந்து, அவளுக்கே அறியாமல், நேரடியாக சகலஞான பண்டிதன் ஆஞ்சநேயனின் பிறப்பு! மதங்களின் தத்துவங்கள் அனைத்துமே, ஒரே வட்டத்தில்தான் சுழல்கின்றன!

அப்படி இருக்கும் பொழுது- அப்பரம் பொருளின் பெயரால் பேதங்களைக் கற்பனை செய்து கொண்டு, மனித சமுதாயம் என்ற வயலில் களைகள் முளைத்துக் கலவரங்கள் மூண்டு-மனித இன இரத்த ஆறுபாய்வது என்பது கடவுளுக்கே பாவம்!

கடவுளின் பெயரால் எழும் கலவரங்களில் மனிதன் சிந்தும் ஒவ்வொரு சொட்டு இரத்தமும், கடவுளின் கண்ணீர்! கடவுளின் இரத்தம்!

இறைவன் மனிதனுக்குள் இருக்கிறார்! ஆனால் மனிதன்தான் இறைவனுக்குள் இருப்பதில்லை! இறைவன் இருக்கும் இடத்தை விட்டு இல்லாத இடத்தில் அல்லாடி அவதிகளுக்கு ஆளாகி அழிகிறான்!

பரம்பொருள், பக்தனுக்குள் வியாபித்து தனக்குள் சங்கம மாக்கிக் கொள்ளும் சத்திய சாட்சியாகிய இறைவன் ஒருவனே!

மதங்களில் அவன் ரூபி! மார்க்கங்களில் அவன் அரூபி! ஆனால் அவன்-ஒருவன் என்பது சத்தியம்! சத்தியம்! சத்தியம்!

அப்பரமாத்மாவின் சுப அனுபவ ஆன்மீக நெறியிலேயே ஜீவாத்மாக்கள் உலக சமாதான, சகோதரத்துவ மனிதநேய ஒருமைப் பாடு தழைக்க-எங்கும் திருவருள் பெற்று இன்புற்று நலங்கள் பெருக-பரமாத்மாவுடன்-சத் சங்கமமாக-எம்பெருமான் கண்ணனே, துணை செய்யட்டும்!

ஓம் நமோ நாராயணாய!



நம் பாரத கண்டத்தில் பேசப்படும் தேசிய மொழிகளுள் இந்தி இலக்கியக் கவிதா மண்டலத்தில், ஈடு இணையற்ற கதிரவனாக பக்திக் கிரணங்களை வீசிக் கொண்டிருக்கும் 'சூர சாகரத்தின்' படைப்பாளர், மகா கவி பக்த சூர்தாஸ்!

சூர்தாஸ் என்ற ஆதவனின் சூரிய கிரணங்களின் முன்பு – துளசிதாஸ், கோஸ்வாமிகளின் கவிதைகளை நிலவொளியாகவும், கேசவாச்சாரியாரின் கவிதைகள் விண்மீன்களாகவும் ஒளி குன்றி விடுகின்றன! இவ்வளவிற்கும்–

சூர்தாஸ், ஒரு குருட்டுக்கவிஞர்! பாடகர்! கல்வியறிவற்றவர்! ஆனால் 102 வயது வரை வாழ்ந்தவர்! ராதையின் பக்தி பிரேமையை பக்தி மார்க்கத்தில் கான மழையாகப் பொழிந்தவர்! கிருஷ்ணாவதார யுகத்தில் அக்ரூவர் என்ற மகா கிருஷ்ண பக்தராக வாழ்ந்தாலும்–பகவான் கண்ணனின் சீற்றத்திற்கு ஆளாகி, பகவானால் சபிக்கப்பட்டவர்!

சூர்தாஸ் பாடத்துவங்கினால், இசைக்கருவிகள் தேவை இல்லை! பாடலுக்கு ஏற்ப மானஸீகமாக கண்ணன், குழலூத! கலைமகள், வீணையை மீட்ட! தேவலோக அப்சரஸ்கள், 'ஜல், ஜல்' என்று நடமாட! ஆனைமுகன், ஜால்ரா தட்ட! அப்படி ஒரு மந்திர சக்தி, சூர்தாஸின் கீத நாதத்தில்! இதே மாயா ஜால நாத கீதத்தின் மயக்கும் சக்திதான் – அக்பர் சக்ரவர்த்தியின் தர்பாரிலேயே, சூர்தாஸை கிருஷ்ண கானம் பாட வைத்திருக்கின்றது!

சூர்தாஸின் நாடகத்தைப் படைக்கும் பொழுது, அவர் யாரைப்போல இருந்திருப்பார்? கேட்போர் நெஞ்சைச் சுண்டி இழுக்கும் அவர் நாதமும், குரல் வளமும் யாரைப்போல் இருந்திருக்கும்? என்றெல்லாம் நான் கற்பனை செய்த பொழுது, ஓளவிற்காவது–

என் இனிய சகோதரர், கந்தர்வ கான சக்ரவர்த்தி, இசைப்பேரறிஞர், பத்மஸ்ரீ, டாக்டர் கே. ஜே. ஏசுதாஸ்தான் -

என் கற்பனை வானத்தில் – நெற்றியில் கோபி! முகத்தில் தாடியும் தெய்வ சாந்தன்யமும்! கழுத்தில் துளசி மாலை! நெடிய திரு உருவம்! ஆகியவற்றுடன் சூர்தாஸாக நிழலாடினார்! இப்படைப்பு முழுமைபெற, மகாகவி பக்த சூர்தாஸின் ராதாகிருஷ்ண பிரேமையின் பக்தி ரசம், அடியேனுக்குத் துணை நின்றது.

– தாஸானுதாஸன், ஆர். இராமானுஜம்,
படைப்பாளன்.